# விஷய ஸூசிகை.

ஸ்ரீ:

# முன்னுரை.

ஸ்ரீ நிகமாந்தமஹாதேசிகனுடைய ஸாரஸாரம் முதலான பதினொரு ரஹஸ்யங்கள் வெளிவந்து இப்போது பல வருஷங்களாகி விட்டபடியால், அவைகள் துர்லபமாக இருப்பதாலும், பல பெரியோர்களும் இந்த கிரந்தத்தை அவச்யம் பிரசுரிக்க வேண்டும் என்று நியமித்தபடியாலும் இப்போது அவற்றைப் பதிப்பிக்கும் கைங்கர்யத்தில் அந்வயித்திருக்கிறேன். தவிரவும், நாலைந்து வருஷங்களுக்கு முன், ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ. உ. வே. திருக்கோட்டியூர் ஸ்வாமி ஸந்நிதியில் சில ஸஹ்ருத்துக்களோடு அடியேனும் மற்ற கிரந்தங்களைப்போல 'ஸம்பிரதாய பரிசுத்தி' முதலான பதினேழு ரஹஸ்யங்களையும், 'ஸார ஸாரம்' முதலான பதினொரு ரஹஸ்யங்களையும் காலக்ஷேபம் செய்தபோது, ஸ்ரீதேசிகனின் ரஹஸ்ய க்ரந்தங்களுக்கு ஒரு புதிய பதிப்பு மிகவும் அவச்யம் என்பது தோன்றிற்று. ஸ்ரீ திருக்கோட்டியூர் ஸ்வாமியின் திருவுள்ளமும் அப்படியே இருந்தது. ஆகையால் காலக்ஷேப ஸமயத்திலேயே ஸ்ரீ ஸ்வாமி கையில் வைத்திருந்த பரிஷ்க்ருதமான ஓலையேட்டின் சுத்தமான பாடங்களை அனுஸரித்து ஸ்வாமி நியமித்தபடி அவ்வப்போதே இந்த ரஹஸ்யங்களையெல்லாம் சோதித்து வைத்தேன். அவற்றுள் ஸார ஸாரம் முதலான உத்தர ரஹஸ்யங்கள் பதினொன்றையும் பதிப்பிக்கும் பாக்கியம், ஆசார்யர்களுடைய அநுக்ரஹத்தால் இப்போது அடியேனுக்கு எதிர்பாராதபடி கிடைத்திருக்கிறது.

இந்த கிரந்தத்தின் பெருமையையும், இது துர்லபமாயிருப்பதையும் பார்த்து, கும்பகோணம் கவர்ன்மேண்டு வக்கீல் ஸ்ரீநிவாஸ அய்யங்கார் குமாரத்தியான ரங்கத்தம்மாள், இதை சுத்தமாகவும் நன்றாகவும் பதிப்பிக்கும்படி அடியேனிடம்சொல்லி அதற்கு வேண்டிய த்ரவ்யம் முழுவதும் தானே கொடுத்து ஸஹாயம் செய்திருக்கிறார்கள். இந்த சிரேஷ்டமான கிரந்தத்தை சோதித்துப் பதிப்பிப்பது என்கிற கைங்கர்யத்தை எனக்குக் கொடுத்து என்னை க்ருதார்த்தனாக்கினதற்கு நான் அவர்கள்

விஷயத்தில் மிகவும் க்ருதஜ்ஞதை யுள்ளவனாயிருக்கிறேன். அவ்விதமே அவர்களுடைய ஆசார்ய பக்தியையும் ஔதார்யத்தையும் கண்டு ஸ்ரீ வைஷ்ணவ உலகமே அவர்களைக் கொண்டாடுவதோடு, இப்படி நம் ஸம்பிரதாய க்ரந்தம் பரவும்படி செய்த பரமோபகாரத்திற்கு நன்றி பாராட்டவும் கடமைப்பட்டிருக்கிறது. நம் நாட்டிலுள்ள உதாரர்களான தனிகர்கள் ஜ்ஞான விகாஸ ஹேதுவான பூர்வாசார்ய க்ரந்தங்களை, எல்லோரும் வாங்கி ஸேவிக்கும்பொருட்டு, ப்ரசுரம் செய்யும் விஷயத்தில் இவர்களின் வழியைப் பின்பற்றுவார்களானல், நம் ஸம்பிரதாயம் தழைத்து ஓங்கும் என்பதில் ஸந்தேஹமே யில்லை.

இந்தப் பதிப்பு வெளிவருவதில் ஸ்ரீ திருக்கோட்டியூர் ஸ்வாமி செய்தருளின ஸஹாயத்திற்கு அளவே இல்லை. இதில் சிலாகிக்கத்தகுந்த அம்சம் இருக்குமேயானல் அதற்குக் காரணம் ஸ்ரீ ஸ்வாமியே. பிழைகளெல்லாம் அடியேனுடைய அனுபவ மின்மையாலும், ஞானக் குறைவினாலும் ஏற்பட்டவையே. அச்சுக்குப் போவதற்கு முன் மாத்ருகைகளை யெல்லாம் சோதித்து, பல பிரமாணங்களுக்கு ஆகரங்கள் தேடிக் கொடுத்ததற்கு மேல், அச்சான பிறகும் ஒரு முறை சோதித்து, *பிறகு கிடைத்த உத்தமமான பாடங்களை எழுதி அனுப்பி இந்த கிரந்தத்தை அழகு பெறச் செய்து, அல்பமான ஞான சக்திகளையுடைய அடியேனுடைய பிரயத்னத்தை ஸபலமாகச் செய்ததற்கு ஸ்ரீ ஸ்வாமியின் திருமுன்பே ப்ரணாமங்களோடு இந்த கிரந்தத்தை ஸமர்ப்பிப்பதுதவிர அநந்ய ப்ரயோஜநரான அவர்களுக்கு அடியேன் செய்யக்கூடியது வேறில்லை.

இதைப் பதிப்பிக்கும் விஷயத்தில் உபயோகிக்கப்பட்ட கிரந்தங்கள்:

1. திருக்கோட்டியூர் ஸ்ரீ உ. வே. ஸௌம்யநாராயணாசார்ய ஸ்வாமி திருமாளிகையில் அவர்கள் காலக்ஷேபத்தில்

---

* அச்சானபிறகு ஸ்ரீ ஸ்வாமியிடமிருந்து கிடைத்த பாடங்கள் 'பாடபேதங்கள்' என்ற தலைப்பின் கீழ் இந்த முன்னுரைக்குப் பின் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

உபயோகிக்கும் தாளபத்ர ஸ்ரீகோசம் (ஓலையேடு). இதுவே ப்ரதானமாகக்கொண்டு மூலத்தில் பாடமாகப் போடப்பட்டிருக்கிறது.

பாடபேதங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டவை.

2. சுண்டப்பாளையம் ஸ்ரீ அ. ரா. திருவேங்கடாச்சாரியாரால் 1911-ஸு (விரோதிகிருது-ஸு) பாகவதவர்த்தனி முத்ராக்ஷர சாலையில் பதிப்பிக்கப்பட்டது. இதின் பாடங்கள் 'க' என்று கீழே காட்டப்பட்டிருக்கின்றன.

3. கொந்தமூர் ஸ்ரீமத் ராகவாசாரியாரால் பரிஷ்கரிக்கப்பட்டு, திருக்குடந்தை தட்டை கிருஷ்ணமாச்சாரியாரால் (சித்திரபானு-ஸு தை-மீ) (1900) சென்னை கலாநிதி அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது. இது 'வ' என்று காட்டப்பட்டுள்ளது.

4. தெலுங்கு எழுத்தில் அச்சிடப்பட்டது. இது 'ம' என்று காட்டப்பட்டுள்ளது.

இந்த மூன்றின் (2,3,4,) பாடங்கள் பெரும்பாலும் ஒரே மாதிரியாக இருக்கின்றன.

5. திருக்கோட்டியூர் ஸ்ரீ உ. வே. ஸ்ரீராம தேசிகாச்சார் ஸ்வாமி திருமாளிகையிலுள்ள தாளபத்ரகோசம். இதன் பாடங்கள் 'வ' என்று காட்டப்பட்டிருக்கிறன.

6. ஸ்ரீ பவுண்டரீகபுரம் ஸ்வாமியின் ஆச்ரமத்தில் இருந்த ஸ்ரீகோசம் ஒன்று அங்கங்கு ஒத்துப் பார்க்கப்பட்டிருக்கிறது.

7. திருக்கோட்டியூர் ஸ்ரீ ஸ்வாமியிடம் மாம்பாக்கத்திலிருக்கும் மற்றொரு ஏடு.

இவை தவிர தனியாக அச்சிடப்பட்ட ஸாரஸாரமும், அபயப்ரதானஸாரமும், சேட்லூர் ஸ்ரீஉ.வே. நரஸிம்மாச்சார் ஸ்வாமி வ்யாக்யானத்தோடு கூடிய ஹஸ்திகிரி மாஹாத்ம்யமும், பரமபத ஸோபாநமும் உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன.

மேற்கண்ட கிரந்தங்களை யெல்லாம் கொடுத்து உதவின மஹான்களுக்கும், ஸுஹ்ருத்துக்களுக்கும் அடியேனுடைய க்ருதஜ்ஞதை என்றும் உரித்தானது.

இந்தப் பதிப்பில் எழுத்துக்கள் பெரியதாக இருப்பதாலும், மூலத்தில் உதாஹரிக்கப்பட்ட பிரமாணங்களுக்கு ஆகரங்களும், அங்கங்கு பாடபேதங்களும் குறிக்கப்பட்டிருப்பதாலும், கிரந்தம் பெரிதாகிவிட்டது. அதனால் ஸாரஸாரம் முதல், ஸார ஸங்கிரஹம் வரையிலுள்ள ரஹஸ்யங்களை முதற்பாகமாக வெளியிட்டு, விரோத பரிஹாரம், முநிவாஹநபோகம் இவற்றோடு ஹஸ்திகிரி மாஹாத்ம்யம், பரமபதஸோபானம் இரண்டையும் சேர்த்து இரண்டாம் பாகமாக வெளியிடுகிறேன். சில கடின பதங்களுக்கும் 'அமலனாதிபிரான்' பத்துப் பாசுரங்களுக்கும் தெரிந்த வரையில் அர்த்தம் எழுதப்பட்டிருக்கிறது.

ரஹஸ்யங்களில் முன்னும் பின்னுமுள்ள ஸ்ரீதேசிகனுடைய பாசுரங்களுக்கும் ஶ்லோகங்களுக்கும், உதாஹரிக்கப்பட்ட ப்ரமாணங்களுக்கும் அர்த்தம் எழுத முதலில் உத்தேசித்திருந்தது. தாமதத்திற்கும் விரிவுக்கும் அஞ்சி நிறுத்தப்பட்டது. இப்போது அவற்றை ஒரு அநுபந்தமாக வெளியிட நினைத்திருக்கிறேன். ஶரண்யன் மனோரதத்தை பூர்த்திசெய்து வைப்பாராக.

24—11—1937. ரிவாஸராகவன்.

—:0:—

# *பாடபேதங்கள்.

| பக்கம் | வரி | |
|---|---|---|
| 251 | 20 | என்கிற ந்யாயமும் (?)† |
| 253 | 18 | இத்யாதிகள் கர்மபாரதந்த்ர்யம் (?) |
| 254 | 8 | ஸாத்வகுலவ்ரான |
| 260 | 6 | ஸம்பந்தாவஸ்யமில்லாதார்க்கும் அகப்பட |
| 262 | 14 | ஸௌசகரான (?) |
| 265 | 10 | வாக்காணுநின்றோமே யென்னில் |
| 265 | 1,2 | ஸர்வத்ருத்தமவனுக்கு இவ்விஶேஷண |
| | 12 | பற்றுவார்க்கே அநந்யஜந |
| 266 | 17 | ஜ்ஞாநஸ்வரூபவைசத்யஜ்ஞநிரூபணமும் |
| 271 | 9,10 | இவனுக்கு ஸ்வாமீ என்று பேர்பெற்ற விபரீத |
| 284 | 15 | இத்தாரதம்யம் விடாதொழிந்தாலும் |
| 290 | 16 | தன்னுடைய ஐஶ்வர்யவிவஶித்வமடியாக |
| 295 | 9 | குற்றங்களுக்குப் ஸஹமும் |
| 297 | 20 | ஸ்வதந்த்ரௌதாஸீநநிக்கு |
| 298 | 9 | அஶேஷவ்யஶேஷவா வதநஶோத்ரா: |
| | | அஶேஷ்யஶேஷை பதநஹேது |
| 301 | 9 | பரமபதத்திலுள்ள ஸாயுஜ்யத்திலே |
| 315 | 21 | ப்ராமாணிகத்திலும் நேரா நிற்கும் |
| 317 | 14 | கோவின ஸஹத்தைப்பற்ற (?) |
| 325 | 3 | ஊர்ஜிதஶாஸ்த்ராநுவித்தியோகித (?) |
| 328 | 14 | நிரபேக்ஷனானவனுடைய |
| 329 | 20 | அவதாரணமும் இங்கே |
| 331 | 10 | ஈச்வரத்வச்சுணையாகிற |
| 339 | 13 | சரணாகதராகச் சக்ரவர்த்தித்திருமகனை |
| 340 | 16 | இவன் திருவடிகளைப்பற்றி என்னுலும் |

* புஸ்தகம் அச்சான பிறகு திருக்கோட்டியூர் ஸ்ரீஸ்வாமிக்கு அனுப்பப்பட்டபோது, இந்தப் பாடங்களெல்லாம் அவர்களால் தேடி எடுத்து அனுப்பப்பட்டவை. இவை சிறந்தவைகளாக இருப்பதால் இவற்றை மூலத்தில் கொண்டு, இப்போது மூலத்திலிருப்பவற்றை பாடபேதங்களாகக் கொள்ளவேண்டும்.—ஸ்ரீ.

† (?) இப்படிப் பாடங்கள் கிடைக்குமானால் சிலாக்யம்—ஸ்ரீ.

| | | |
|---|---|---|
| 344 | 18 | க்ஷுத்ரத்வத்தையும் |
| 353 | 7 | உபாயத்வத்திற்குப் பிரதானமான |
| 369 | 15 | ஐஶ ஹ்ரு நிஜ்ராஹா:ஶாஸ்வ |
| 377 | 7 | தன்மையிலென்றிடம் |
| 384 | 21 | திருபரிதியிசைந்த |
| 392 | 16 | ஶுவிதவிதி வொகடேயகவிஃ |

## முகவுரை.

ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட இப் பூவுலகிலுள்ள ஸகல ஜீவராசிகளும் ஸுகத்தையே விரும்புகின்றன என்பது எல்லோருக்கும் ப்ரத்யக்ஷம். அவற்றுள், பகுத்தறிவைப் பெற்றிருப்பதால் உயர்ந்தவர்களாகக் கருதப் படும் மானிடர்கள் விரும்பும் விஷயங்களே புருஷார்த்தங்கள் என்றும், அவைதான் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்று நால்வகை என்றும் பிரித்துப் பேசினார்கள். இந் நால் வகைப் பயனுள், முதல் மூன்றும் அல்பமாயும், அநித்யமாயும், அநுபவிக்கும்போதும் அதற்கு முன்னும் பின்னும் துக்கம் கலந்ததாயும் இருப்பதால் அவற்றை விட்டு, அந்தமில் பேரின்பமான மோக்ஷத்தைப் பெற முயற்சிப்பதே விவேக முள்ளார் செய்யத்தக்கது என்பது ஸகல சாஸ்திரங்களின் துணிபு.

'ஒருவன் இந்த மோக்ஷமாகிற பரம புருஷார்த்தத்தைப் பெறுவதற்குத் தான் வல்லதொரு உபாயத்தை அநுஷ்டிக்கவேண் டும். அதற்கு தத்வஜ்ஞானம் அவச்யம். அந்த ஞானத்தை, சாஸ்திரங்களை ஓதி உணர்ந்து அநுஷ்டித்துப் போருகிற ஆசார்ய னிடமிருந்தே அடையவேண்டும்' என்று சாஸ்திரங்கள் நிர்ண யித்தன. அப்படி சாஸ்த்ர வச்யனான ஆசார்யன் உபதேசிக்கும் தத்வஹித புருஷார்த்தங்களைப் பற்றிய ஸாரமான விஷயமாவது: 'சரீரம், இந்திரியம் முதலான அசேதன வஸ்துவைக் காட்டிலும் வேறுபட்டவனாய், நித்யனாய் இருப்பானொரு ஆத்மா உண்டு; இச்சேதனாசேதனங்கள் இரண்டுமொழிய இவற்றுக்கு அந்தர்யாமி யாய் சேஷியாயிருப்பானொரு பரமாத்மா உண்டு; இப்பரமாத் மாவை யொழிய இவ்வாத்மாவுக்குத் தானும் பிறரும் ரக்ஷகராக மாட்டார்' என்பதே தத்வம். உபயவிபூதி விஶிஷ்டனான ஸ்ரீய: பதியை இடைவிடாமல் அநுபவித்து, அவனுக்குக் கைங்கர்யம் செய்வதே பரமபுருஷார்த்தம்; அப்புருஷார்த்தத்தைப் பெறு

வதற்கு ஸாதனம் ஸித்தோபாயம் எனப்படும் அந்த ஸ்ரிய: பதியே. அவனை வசீகரிப்பதற்கு பக்தி, ப்ரபத்தி என்று இரண்டு வழிகள். அதில் பக்தியோகத்தை அநுஷ்டிக்க முடியாதவர் களுக்கு 'அடியேனுக்கு இனியொரு ஸம்ஸாரதுக்கம் வராதபடி திருவடிகளைத் தந்து ரக்ஷிக்க வேண்டும்' என்று ஆசார்யன் ப்ரஸாதித்த குருபரம்பரா பூர்வக த்வயத்தாலே ஸ்ரீமானான நாராயணன் திருவடிகளைச் சரணமாகப்பற்றி, ஆத்மாத்மீயங்களை யும் அவற்றைப்பற்ற வரும் சுமைகளையும் அங்கே ஸமர்ப்பிப்பது என்கிற ப்ரபத்தியே பரமஹிதம்' என்பதே.

## ஸ்ரீ தேசிகனின் முப்பத்திரண்டு ரஹஸ்யங்கள்

இவ்வர்த்தங்களையே ஸ்ரீ தேசிகன் அந்தந்த அதிகாரிகளு டைய யோக்யதைக் கேற்ப சுருங்கவும் பரக்கவும் தன்னுடைய முப்பத்திரண்டு ரஹஸ்யங்களில் நிரூபித்துள்ளார். அவற்றுள் ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரம், பரமபதஸோபாநம் பரமதபங்கம் ஹஸ்திகிரி மாஹாத்ம்யம், என்ற நான்கைத் தவிர மற்ற இருபத்தெட்டும் சில்லரை ரஹஸ்யங்கள் எனக் கூறப்படுகின்றன.

ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸாரம் முப்பத்திரண்டு அதிகாரங்களில் எல்லா விஷயங்களையும் ப்ரமாணம், ஸம்பிரதாயம், யுக்தி முதலிய வற்றைக்கொண்டு விஸ்தாரமாக நிரூபிக்கிறது. மற்ற முப்பத் தொரு ரஹஸ்யங்களும் இவ்வர்த்தங்களில் ஒவ்வொன்றைப் பிர தானமாகக்கொண்டு ப்ரவிருத்தித்திருக்கின்றன. சில ரஹஸ்யங் கள் சிதசிதீச்வரரூபமான தத்வங்களைப்பற்றியும், சில ப்ரபத்தி என்னும் உபாயத்தைப் பற்றியும், வேறு சில ஈஸ்வரனுடைய ஸௌசீல்யாதி குணங்களைப்பற்றியும், மற்றும் சில ரஹஸ்யத்ரயம் என்னும் மூன்று மந்திரங்களின் அர்த்தங்களைப்பற்றியும் பேசு கின்றன. இவற்றின் விஷய ஸங்கிரஹம் இக்கிரந்தத்தின் முதற் பாகத்தின் முகவுரையில் சுருங்க உரைக்கப்பட்டிருக்கிறது.

இந்த முப்பத்தொரு ரஹஸ்யங்களையே அவற்றில் ப்ரதான மாகக் கூறப்படும் விஷயங்களையிட்டு நால்வகையாகப் பிரிக் கலாம்.

i மோக்ஷத்திற்கு அவச்யம் வேண்டிய தத்வஜ்ஞானத்தை உபதேசிக்கும் ஆசார்யனையும் அந்த ஆசார்ய பரம்பரையையும் பற்றியவை.

ii சேதனம், அசேதனம், பரமாத்மா என்றும் மூன்று தத்வங்களைப் பற்றியவை.

iii பரதத்வ—பரமஹித—பரமபுருஷார்த்த விஷயமான அர்த்தங்களைப் பிரகாசிப்பிக்கிற ரஹஸ்யத்ரயத்தின் பதவாக்ய யோஜனைகளைக் காட்டுமவை.

iv மிகவும் ஸூக்ஷ்மமான சாஸ்த்ரார்த்தங்களைக் கசடற அறிய சக்தியற்றவர்களாய் பரமாஸ்திகர்களாயிருப்பார்க்கு ஆசார்யோபதேசமே போதியதாயிருந்தாலும், ஞானவான்கள் தாங்கள் தெளிகைக்காகவும், குதர்க்கங்களாலே கலங்குவாரைத் தெளிவிக்கைக்காகவும் ஸமீசிநயுக்திகளோடே கேட்கவேண்டியிருப்பதால், அவ்வித அதிகாரிகளுக்குத் தக்கவாறு பரமத நிராஸ பூர்வகமாக ஸ்வமதத்தை ஸ்தாபிக்கும் ரஹஸ்யங்கள்.

இவ்விதமான பிரிவு ஸ்ரீதேசிகனுக்கும் அபிமதம் என்பதை அவரே தன் ரஹஸ்யத்ரயஸாரத்தை இப்படிப் பிரித்திருப்பதிலிருந்து உரைரலாம்.

i அர்த்தாநுசாஸநபாகம்—(1—22 அதிகாரங்கள்): தத்வ—ஹித—புருஷார்த்த விஷயமான மூன்று பேடிகைகள் கொண்டது.

ii ஸ்திரீகரணபாகம் (23—26): முன்பிரிவில் கூறப்பட்ட விஷயங்களில் வரும் சங்கைகளைப் பரிஹரித்து, ஸ்வஸித்தாந்தத்தை ஸ்தாபிப்பது.

iii பத—வாக்ய-யோஜநா பாகம் (27—29): மூலமந்த்ரம் த்வயம், சரமச்லோகம் என்னும் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தங்களைப்பற்றியவை.

iv ஸம்பிரதாயப்ரக்ரியா பாகம்(30-32): சிஷ்யர்களுடைய லக்ஷணத்தையும், உபதேச ச்ரவண முறைகளையும் பற்றியவை.

(முதலில் இருக்கும் குருபரம்பராஸாராதிகாரமானது உபதே சிக்கும் ஆசார்யனுடைய ஞானம் வந்த வழியான (ஸர் வேச்வரன் முதலாக வருகிற) ஆசார்ய பரம்பரையைப் பற்றி யது).

## தத்வபதவீ முதலியவற்றின் விஷய ஸங்கிரஹம்.

இனி இம்முறையில் ரஹஸ்யங்களைப் பிரித்து எண்ணுவோம்.

i முதலாவதான அர்த்தாநுசாஸந பாகத்தில் கூறப்பட்ட படி தத்வஹித புருஷார்த்தங்களைப் பற்றியவை பதினேழு. அவையாவன: இருபத்தெட்டு சில்லறை ரஹஸ்யங்களில் முதல் பதினேழான அம்ருதரஞ்ஜநீ ரஹஸ்யங்களுள் தத்வபதவீ, தத்வநவநீதம், தத்வமாத்ருகை, தத்வஸந்தேசம், தத்வரத்நா வளி, தத்வரத்நாவளி ப்ரதிபாத்ய ஸங்கிரஹம், தத்வத்ரய சுளு கம்; இவை ஏழும் சேதனம், அசேதனம், ஈச்வரன் என்ற தத்வ ங்களையும் அவற்றின் பிரிவுகளையும் எண்ணுகிறது.

## பதினொரு ரஹஸ்யங்களின் விஷய ஸங்க்ரஹம்.

அம்ருதாஸ்வாதிநீ ரஹஸ்யங்கள் என்ற அடுத்த பதினொரு ரஹஸ்யங்களில் அபயப்ரதாநஸாரம், தத்வசிகாமணி, ரஹஸ்ய சிகாமணி, அஞ்ஜலிவைபவம், ப்ரதாநசதகம், உபகார ஸங்க்ர ஹம், ஸாரஸங்க்ரஹம், முநிவாஹநபோகம் என்ற எட்டு. இவ் வெட்டு ரஹஸ்யங்களுள் பரதத்வத்தைப் பற்றியவை துப்தமான தத்வசிகாமணியும், (ஸர்வேச்வரன் நமக்கு அநாதிகாலமாய்ச் செய்து வந்ததும் இனிச் செய்யப்போவதுமான உபகாரங்களைக் கூறும்) உபகாரஸங்கிரஹமும்.

உபாயத்தைப்பற்றியது அபயப்ரதாநஸாரம், ரஹஸ்ய சிகாமணி, அஞ்ஜலிவைபவம் என்ற மூன்றும். இவற்றுள் அபயப்ரதாநஸாரத்தில் ஐந்து அங்கங்களோடுகூடிய உபாயமான ப்ரபத்தியின் ஸ்வரூபமும், இவற்றைப் பிரமாணங்களில் அநுஸந் திக்கும் முறையும் காட்டப்படுகின்றன. ரஹஸ்ய சிகாமணியில் மோக்ஷோபாய நிஷ்டர்களுக்கு சாஸ்த்ரங்களில் கர்த்தவ்யமாக

விதிக்கப்பட்ட அந்திமஸ்ம்ருதியை ப்ரபந்நன் ஸ்வ-ப்ரயத்நத்தால் ஸாதிக்கவேண்டாம்; அவன் அநுஷ்டித்த ப்ரபத்தியால் ப்ரஸந்நனாய் ஸகல பாபத்தையும் போக்கி மோக்ஷத்தைத் தர விரைகின்ற ஸர்வேச்வரன் தானே அந்நினைவையும் செய்கிறான்' என்று ப்ரபத்தியினுடைய பெருமை காட்டப்படுகிறது.

அஞ்ஜலி வைபவத்தில், 'ப்ரபத்தி மிகவும் ஸுகரம், இதற்குக் கால நியமம் முதலிய ஒன்றும் கிடையாது; இது ஒரு முறை அநுஷ்டித்தாலே வேறொன்றை எதிர்பாராதபடி ஸகல புருஷார்த்தங்களையும் கொடுக்கும்' என்று ப்ரபத்தியின் மஹிமை வர்ணிக்கப்படுகிறது.

முநிவாஹநபோகமும் ஹஸ்திகிரி மாஹாத்ம்யமும் புருஷார்த்தத்தைப் பற்றியவை. அவற்றுள் ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் முமுக்ஷுவான ஒருவன் சரீரம் விடுமளவும் இங்கே வஸிப்பதற்கு போக்யமான ஸத்வோத்தர தேசத்தில் இருக்கவேண்டும் என்பதைக் காட்டுவதற்காக அவ்விதமான திவ்ய தேசங்களுக்கு த்ருஷ்டாந்தமாக ஸத்யவ்ரதக்ஷேத்ரத்தின் பெருமையைக்காட்டி, அம்முகத்தாலே ப்ராப்யனான பகவானின் பெருமையையும் காட்டுகிறது.

முநிவாஹநபோகத்தில், ஸதா தர்சநம் பண்ணும் நித்யர்கள் எம்பெருமானை வைகுண்டத்தில் அநுபவிப்பதுபோல் ஜீவாத்மாவும் முக்தனாய் அங்குபோய் அநுபவிக்கும் பிரகாரத்தை பூலோக வைகுண்டமென்னும் ஸ்ரீரங்கத்தில் பள்ளிகொண்டருளும் பெரியபெருமாளை திருவடிமுதல் திருமுடிவரையில் அநுபவித்த திருப்பாணாழ்வாரின் அமலனாதிபிரானை வ்யாக்யானம் செய்வதால் எடுத்துக்காட்டியருளுகிறார். ப்ரதாநசதகமும் ஸாரஸங்க்ரஹமும் ஸாரதமமான அர்த்தங்களை ஸுலபமாய் அநுஸந்திக்கும் பொருட்டு ஸங்கிரஹமாக எண்ணிக் கொடுக்கின்றன.

ii இரண்டாவதான ஸ்திரீகரணபாகத்தில் சொல்லப்படும் விஷயங்கள் பரமதபங்கத்திலும் விரோதபரிஹாரத்திலும் நிரூபிக்கப்படுகின்றன. அதில் பரமதபங்கத்தில் வேதத்தைப்

பிரமாணமாக ஒப்புக்கொள்ளாதவர்களும், அதை ஒப்புக்கொண்டு விபரீதார்த்தம் செய்கிறவர்களுமான பாஹ்ய—குத்ருஷ்டி மதங்களையெல்லாம் நிராகரிக்கிறார். மற்ற மதஸ்தர்கள் தங்கள் தங்கள் மதத்திற்கு அநுகூலமாகச் சொல்லும் யுக்திகளையெல்லாம் எடுத்துப் பரிஹரித்து, தன் மதத்தை ஸ்தாபிக்கிறார்.

பதினொரு சில்லறை ரஹஸ்யங்களில் ஒன்றான விரோத பரிஹாரத்தில் முமுக்ஷுவான ஒருவன் ரஹஸ்யத்ரயத்தில் அவச்யம் அறியவேண்டிய விஷயங்களில் தோற்றின விரோதங்களைப் பரிஹரிக்கிறார்.

iii மூன்றாவதான பதவாக்யயோஜநாபாகத்தில் விஸ்தாரமாக கூறப்பட்ட அர்த்தங்களெல்லாம் பலபடியாகப் பத்து சில்லறை ரஹஸ்யங்களில் நிரூபிக்கப்படுகின்றன. அவையாவன: ரஹஸ்யபதவீ, ரஹஸ்ய நவநீதம், ரஹஸ்ய மாத்ருகை, ரஹஸ்ய ஸந்தேசம், ரஹஸ்யஸந்தேச விவரணம், ரஹஸ்யரத்நாவளி, ரஹஸ்யரத்நாவளி ஹ்ருதயம், ரஹஸ்யத்ரய சுளகம் என்னும் ஸாரஸங்க்ஷேபம், ஸாரதீபம், ஸாரஸாரம்.

இவற்றுள் ஸாரதீபம் லுப்தமாயிருந்தாலும், அதை இந்தப் பகுதியில் சேர்ப்பதற்கு வேண்டிய காரணங்கள் உண்டு. ஸாரஸங்க்ஷேபத்தின் கடைசியிலுள்ள சுலோகத்தில் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தங்களையெல்லாம் பின்னால் விஸ்தாரமாக நிரூபிக்கப் போவதாக(வ்யாஸதோ வ்யாவயிஷ்யே என்று) கூறியிருக்கிறார். நமக்குக் கிடைக்கும் ரஹஸ்யங்களில் ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸாரம் தான் இவ்வர்த்தங்களை விஸ்தாரமாகக் கூறுவது.

இந்த ரஹஸ்யத்ரயஸாரத்தின் அபராத பரிஹாராதிகாரத்தின் நிகமனசுலோகத்தை இந்தஸாரஸங்க்ஷேபத்தினுடைய சரம சுலோகாதிகாரத்தில் 'ஸர்வபாப'சப்த வ்யாக்யானத்தில்('ப்ராமாத்யம் ... ' என்ற சுலோகத்தை இங்கே படிப்பது என்று) எடுத்திருப்பதால், ரஹஸ்யத்ரய ஸாரம் இதற்குப் பின் இருக்கமுடியாது. இதற்குப் பின்னால் எண்ணப்படுகிற ஸாரஸாரமும் குறிப்பிட்டபடி இவ்வர்த்தங்களை விஸ்தாரமாகக்

காட்டவில்லை. ஆகையால் உப்தமாகச் சொல்லப்படும் ஸார தீபமே அதுவாக இருக்கவேண்டும் என்று நிச்சயிக்கப்படுகிறது. இந்த ஸாரதீபமும் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தங்களையே கூறலாம் என்பதை அதன் பெயரைக்கொண்டும் ஒருவாறு ஊஹிக்கலாம். அதற்கு முன்னும் பின்னுமுள்ள ஸாரஸங்க்ஷேபமும் ஸாரஸார மும் ரஹஸ்யத்ர விவரணமாயிருப்பதே அதற்குப் போதிய காரணம். ஆக சில்லறை ரஹஸ்யங்களில் சேர்ந்த இந்தப் பத்தும் ரஹஸ்யத்ரயங்களின் பதவாக்ய யோஜனைகளை நிரூபிப் பதற்காகப் பிரவிருத்தித்திருக்கின்றன.

iv கடைசியான ஸம்பிரதாயப்ரக்ரியாபாகத்தில் கூறப் பட்ட அர்த்தங்கள் ஸம்பிரதாய பரிசுத்தியிலும், ரஹஸ்யத்ரய ஸாரத்தின் ஆரம்பத்திலுள்ள குருபரம்பராஸாரத்திலும், மதுர கவிஹ்ருதயத்திலும் நிரூபிக்கப்படுகின்றன.

மதுரகவிஹ்ருதயம் லுப்தம். இருந்தபோதிலும், இது மதுரகவியாழ்வார் செய்தருளின கண்ணிநுண் சிறுத்தாம்பு என்னும் ப்ரபந்தத்திற்கு வ்யாக்யானம் எனப்படுவதாலும், அதில் அவ்வாழ்வார் அவருக்கு ஆசார்யரும் அருமறைகள் தமிழ் செய்தவருமான நம்மாழ்வாரையே தாரகபோஷக போக்யமாய்க் கருதினார் என்றிருப்பதாலும், அதற்கு வ்யாக்யானமான மதுர கவிஹ்ருதயம் ஆசார்ய மஹிமையையே கூறவேண்டும் என்று இந்த வகுப்பில் சேர்க்கப்படுகிறது.

இப்படிப் பலபடியாக வகுத்தும் தொகுத்தும் வெளியிட்ட அர்த்தங்களையெல்லாம் ப்ரமாண—ஸம்பிரதாய—தர்க்கங்களோடு திரள வெளியிடுகிறது ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்.

## விரோதபரிஹாரம் முதலியவற்றின் விஷயஸங்க்ரஹம்.

இனி இவ்விரண்டாம் பாகத்தில் சேர்ந்த விரோதபரிஹாரம், முனிவாஹநபோகம், ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் என்ற ரஹஸ்யங் களின் விஷயத்தை ஸங்கிரஹிப்போம்.

விரோதபரிஹாரம்—மோக்ஷத்தில் ஆசையுடைய ஒருவன் பரதத்வ பரமஹித பரமபுருஷார்த்தங்களை அறிந்துகொள்வது போலவே, அவற்றில் தோன்றும் விரோதங்களையும் பரிஹரித்துக் கொள்ளவேண்டியது அவச்யம் என்று நிரூபித்து, பிறகு அஷ்டாக்ஷரம், த்வயம், சரமஶ்லோகம் என்கிற மூன்று ரஹஸ்யங்களிலும் (மந்த்ரங்களிலும்) வரக்கூடிய சங்கைகளை முறையே மூலமந்த்ராதிகாரம், த்வயாதிகாரம், சரமஶ்லோகாதிகாரம் என்னும் மூன்று அதிகாரங்களில் பரிஹரித்துவிட்டு, நாலாவதான நிகமநாதிகாரத்தில் மூன்று மந்திரங்களும் வேண்டும் என்பது முதலான விஷயங்களைக் கூறி முடிக்கிறார்.

இந்தப் பரிஹாரங்களெல்லாம் ஶாஸ்த்ரத்தை அநுஸரித்தும் யுக்திக்குப் பொருந்துமாறும் இருக்கின்றன.

முதலாவதான மூலமந்த்ராதிகாரத்தில் திருவஷ்டாக்ஷரத்தின் ப்ரணவத்திலுள்ள மூன்று அக்ஷரங்கள், நமஸ், நாராயணஶப்தம், அதன் இறுதியிலுள்ள சதுர்த்தி இவற்றின் அர்த்தங்களைப்பற்றி வரும் என்பது ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரங்கள் கூறப்படுகின்றன. இக்காலத்தில் எழும் பல கேள்விகளும் அநுவதித்து பரிஹரிக்கப்படுகின்றன. உதாஹரணமாக, ஈஶ்வரன் நித்யனும் நம்மெல்லோரையும் ரக்ஷிப்பவனுகவும் இருந்தால், நாம் ஏன் இன்னும் ஸம்ஸாரத்தில் கிடந்து உழலுகின்றோம்? (1). ஈஶ்வரனுக்குக் காருண்யமிருந்தால், இவ்வுலகில் இவ்வளவு துன்பங்களை ஏன் வைத்திருக்கிறான்? (98). ஈஶ்வரன் ஸர்வஜ்ஞனும் ஸர்வஶக்தனுமிருந்தால், அவனுக்கு அஜ்ஞானம் துக்கம் முதலியவை எப்படி வருகின்றன? (15). 'ஈச்வரன் ஒருவனே' என்று சாஸ்திரங்கள் கூற, லக்ஷ்மியையும் கூட்டி இருவரும் ஜகத்திற்கு ஶேஷிகள் என்று எவ்விதம் கூறலாம்? (34). பகவானுக்கு அடியார்களாக இருப்பவர்கள் மற்றவர்களுக்கு எப்படி தாஸர்களாக ஆகலாம்? (32). ப்ரபத்தியும் செய்து பரமைகாந்தியாகவும் இருக்கும் ஒருவன் ஸர்வேஶ்வரனைத்தவிர மற்ற தேவதைகளையும் மற்ற விபரீத ஜனங்களையும் ஸேவிக்கலாமா? ஸேவிக்கவேண்டிய அவஶ்யமேற்பட்டால்

என் செய்வது? (24, 33). ஆத்மஸ்வரூபத்தில் ப்ராஹ்மணாதி ஜாதிகள் இல்லாவிடில், வர்ணாச்ரமாதி தர்மாநுஷ்டானத்தை ஒருவன் ஏன் அநுஷ்டிக்கவேண்டும்? (22). கிருதயுகத்திற்காக ஏற்பட்ட பரமைகாந்தி தர்மம் கலியுகத்திற்கு எப்படிப் பொருந்தும்? (36). ஆசார்யன் தர்மத்திலிருந்து தவறினால் அவர்விஷயத்தில், ஒரு சிஷ்யன் எப்படி நடந்துகொள்ளவேண்டியது? (38) அடிமைத்தனம் இழிவானதாயிருக்க, பகவானுக்குக் கைங்கர்யம் செய்வதே பரம புருஷார்த்தம் என்று எப்படிக் கூறலாம்? (65). சேதனனாக ஒருவன் இருந்தால், தன்னிஷ்டப்படியும் தன் ப்ரயோஜனத்திற்காகவும் கார்யம் செய்வானே யொழிய, பகவானுக்காகவே என்று எப்படிச் செய்வான்? (80).

இவ்விதமாக ஸர்வேச்வரனுடைய ரக்ஷகத்வம், காருண்யம், சேஷித்வம் முதலான குணங்களைப்பற்றியும், ஜீவாத்மாவின் ஸ்வரூபம் தர்மபூதஜ்ஞானம், ஸம்ஸாரத்தில் அவனுடைய நிலைமை, முக்தனால் வரும் மாறுபாடுகள் இவற்றைப்பற்றியும், நித்யவிபூதி, லீலாவிபூதி இவற்றைப்பற்றியும், பக்தி ப்ரபத்தி என்கிற உபாயங்களைப்பற்றியும், அதனால் அடையவேண்டிய புருஷார்த்தத்தைப் பற்றியும் வரும் சங்கைகளுக்கெல்லாம் விஸ்தாரமாக பரிஹாரங்கள் அருளிச்செய்யப்பட்டிருக்கின்றன.

அப்படியே பத்து விஷயங்களைக் கூறும் த்வயாதிகாரத்தில் 'பிராட்டியை புருஷகாரமாகப் பற்றவேண்டியது ஏன்? மோக்ஷாநுபவம் எப்படி?' இது முதலான விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன.

மூன்றாவதான சரமச்லோகாதிகாரத்தில் பத்து சங்கைகள் பரிஹரிக்கப்படுகின்றன. சாஸ்த்ரங்கள் விதித்த தர்மத்தை எப்படி விடச்சொல்லலாம்? (91). ப்ரபத்தி உபாயமா? ஈச்வரன் உபாயமா? (92). கீதையில் ப்ரபத்தியை பக்தியோகத்திற்கு அங்கமாகக் கூறியிருக்க, அது ஸ்வதந்த்ரமாக மோக்ஷத்தை எப்படிக் கொடுக்கும்? (93). ப்ரபத்தி ஸர்வ பாபத்தையும் போக்கும் என்றால், இந்த சரீரம் உள்ளளவும் ஒருவித துக்க

மில்லாமல் ஸுகமாக இருக்கவேண்டும் என்று ஒருவன் ப்ரபத்தி பண்ணினால், அவனுக்கு அது பலிக்குமா? இது முதலியன.

நாலாவது நிகமநாதிகாரத்தில் ஒன்பது வாக்யங்களால் இந்த மூன்று மந்திரங்களும் அவச்யம் என்பதற்கும், இவற்றுள் ஒன்றையும் குறைக்கமுடியாதென்றும், இவைத் தவிர மற்றவை இவ்வளவு முக்யமல்லவென்றும், 'இவ்வளவுவிஷயங்கள் தெரிந்து கொண்டால் போதுமா? இன்னும் ஸந்தேஹங்கள் வந்தால் செய்வதென்' என்கிற கேள்விகளுக்கு உத்தரமும் அருளிச் செய்யப்படுகிறது.

ஆக 109 ஆக்ஷேபங்களுக்குப் பரிஹாரங்கள் இருக்கின்றன.

அடுத்த ரஹஸ்யமான முனிவாஹனபோகம் திருப்பாணாழ்வாரின் அமலனாதி பிரான் என்னும் ப்ரபந்தத்தின் பத்து பாசுரங்களுக்கும் வ்யாக்யானமாயிருக்கிறது. முனிவாஹன போகம்' என்றால் (லோகஸாரங்கள் என்னும்) முனிச்ரேஷ்டரை வாஹனமாகக்கொண்டு (பெருமாள் திருவடிகளளவும் சென்று பெரிய பெருமாளைத் திருவடி முதல் திருமுடிவரை) அனுபவித்த திருப்பாணாழ்வாரின் அநுபவம் என்று அர்த்தம். இதனாலேயே இவ்வாழ்வாரின் பெருமையும் இப்பிரபந்தத்தின் சீர்மையும் விளங்கும்.

இவ்வாழ்வார் உறையூரில் கார்த்திகைமாதம் ரோஹிணீ நக்ஷத்திரத்தில் நெற்பயிரிடையே அவதரித்து, பகவத்பக்தி நிறைந்தவனும், பஞ்சம ஜாதியில் பாணர்குலத்துப் பிறந்தவனுமான ஒருவனால் வளர்க்கப்பட்டு வந்தார். குலத்திற்கேற்ப யாழ் வாசிப்பதில் தேர்ச்சிபெற்று, தினமும் விடியற்காலையில் காவிரியாற்றின் கரையில் பெரியபெருமாள் பள்ளிகொண்டருளும் திசைநோக்கி யாழிசையுடன் அநேக திவ்ய கீதங்களை பக்தியுடன் பாடி, யாவரும் வருமுன்பே தம் இடம் செல்வார். ஒரு நாள் பக்தியில் ஆழ்ந்து மெய்மறந்து விடிந்தும் பாடிக் கொண்டு நிற்க, எம்பெருமானுக்குத் திருமஞ்சனம் கொண்டு செல்லவந்தவர்கள் அவரைக் கூப்பிட்டும் அறியாமலிருப்பதைப் பார்த்து, சிறு கற்களை எறிந்தனர். ஸமாதி கலைந்து, ஆழ்வார்

விலகினார். அப்போதே பெரியபெருமாள் திருவுள்ளமும் திரு நெற்றியும் புண்பட்டு, அன்றிரவே லோகஸாரங்கன் என்னும் அந்தணரின் கனவில் தோன்றி, "நம் பாடுவானை அழைத்துக் கொண்டு வாரும்" என்று நியமிக்க, அவரும் திருப்பாணாழ்வாரைத் தேடிச்சென்று 'அருள்பாடு' 'அருள்பாடு' என்று சொல்ல, ஆழ்வாரும் 'அடிப்பாணன், அடிப்பாணன் (= ஹீநன்) என்று இருக்க, அவரும் விடாதே தோள்மேலே எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டுபோக, வழியிலே ஒன்பது பாட்டுப்பாடி திருப்பிரம்புக்குள்ளே நின்று "அண்டர்கோன் அணியரங்கனை என்னமுதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்று பத்தாவது பாட்டைப் பாடி, தாம் சொன்னபடியே வேறொன்றைக் காணவேண்டியிராமல் பெரியபெருமாள் திருமேனியில் அந்தர்ப்பவித்தருளினார்.

இவற்றுள் முதல் மூன்று பாட்டால் ப்ரணவத்தின் அர்த்தத்தைக் காட்டி; நாலாம்பாட்டில் 'நானும் என்னுடையதன்று; மற்றும் என்னுடையதாவன ஒன்றுமில்லை' என்கிற நமஸ்ஸின் அர்த்தத்தை மறைபொருளாக அநுஸந்தித்து; ஐந்து, ஆறு இரண்டிலும் நாராயண சப்தார்த்தத்தை அநுஸந்தித்து; கடைசி நாலு பாட்டாலே சதுர்த்தியில் ப்ரார்த்தநீயமான கைங்கர்யத்திற்குப் பிரஸ்தாவகமான அநுபவம் தம்மை இப்போது பரவசமாக்கினபடியைப் பேசுகிறார். ஆதலால் இந்தப் பத்துப் பாசுரங்களும் திருவஷ்டாக்ஷரத்தினர்த்தத்தை வெளியிடுகின்றன. "காண்பனவும் உரைப்பனவும் மற்றொன்றின்றிக் கண்ணனையே கண்டு உரைத்த கடிய காதல் பாண்பெருமாள் அருள்செய்த பாடல் பத்தும் பழமறையின் பொருள்" என்று ஸ்ரீ தேசிகன் 'முநிவாஹந போகம்' என்ற தம் ரஹஸ்யத்தில் நிரூபித்திருக்கிறார்.

இதில் சேர்ந்த இருபத்தொன்பதாவதான மதுரகவி ஹ்ருதயம் கிடைக்கவில்லை. மதுரகவியாழ்வார் தம் ஆசார்யரான நம்மாழ்வாரிடத்தில் பக்தி மிகுந்து தேவுமற்றறியாது இருந்து

அவர் விஷயமாக அருளிச்செய்த கண்ணிநுண்சிறுத்தாம்பு என்னும் பிரபந்தத்திற்கு வ்யாக்யானமாக இருக்கலாம் என்று ஊஹிக்கப்படுகிறது.

ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் முப்பத்திரண்டாவது எனப்படுகிறது. இதில் ப்ரஹ்மாண்ட புராணத்தில் ஸத்யவ்ரத க்ஷேத்ர மாஹாத்ம்ய முகத்தாலே வெளியிடப்பட்ட பேரருளாளன் என்னும் ஸ்ரீகாஞ்சீபுரத்தில் எழுந்தருளியிருக்கும் வரதராஜனின் பெருமையை பண்ணும்இசையும் திகழப் பாடுகின்றார்.

முன்னொரு காலத்தில் சதுர்முகன் ஸர்வஜகத்காரணனை ஸர்வேஶ்வரனை அவனனுக்ரஹமில்லாமல் தன் ஸமாதியாலேயே ஸாக்ஷாத்கரிக்க முயன்று கடோரமான தபஸ்ஸைச் செய்தார். அதனால் தன் மனோரதம் நிறைவேறாதது கண்டு வருந்தி, ஒரு அசரீரிவாக்குச் சொன்னபடியே அளவற்ற மஹிமையுடைய ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திலே ஸர்வேச்வரனை அஶ்வமேதத்தாலே ஆராதிக்க நிச்சயித்தான். பத்னியான ஸரஸ்வதீ வராதவளவிலே, ஸாவித்ரீ முதலானவர்களைக்கொண்டு யஜ்ஞத்தை ஆரம்பித்தான். ஸரஸ்வதீ கோபித்துக்கொண்டு வேகவதியென்ற நதியாகப் பெருகி யஜ்ஞத்தைக் கலைக்க முடல, ஸர்வேஶ்வரன் ஒரு அணையாக இருந்து யஜ்ஞத்தை ரக்ஷித்தான். அப்போது தேவர்கள், ரிஷிகள், ப்ரஹ்மா எல்லோரும் வேதாந்தார்த்தங்கள் நிரம்பின வாக்யங்களால் துதித்தார்கள். பிறகு ப்ரஹ்மாவின் வேண்டுகோளின்படி இன்றும் ஹஸ்திகிரியில் சோதியநந்தன் கவியில் தொழுதெழ நின்றருளுகிறார் என்று முடிக்கிறார்.

இந்த சில்லறை ரஹஸ்யங்கள் பதினொன்றையும் ஸ்ரீ உ. வே. திருக்கோட்டியூர் ஸ்வாமி ஸாதித்தபடியே தெரிந்த வரையில் சோதித்து வெளியிட்டிருக்கிறேன். இதிலுள்ள குற்றங்களை நீக்கி, ஸர்வேச்வரனும் அவனடியார்களும் இதை ஏற்று உகந்து அடியேனைக் கிருதார்த்தனாக்குவார்களாக.

புதுக்கோட்டை,<br>
10—12—1937.

ஸ்ரீநிவாஸராகவன்.

# ஶுத்தா ஶுத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 249 | 11 | மறைகெளல்லாம் | மறைகளெல்லாம் |
| 253 | 2 | ஓர்ஜீ | ஓர் |
| 254 | 15 | ப்ரவ்ருதமாகா | ப்ரவ்ருத்தமாகா(ப்ரயுக்த-பா) |
| 262 | 22 | கண்டிலோமோயென்னில் | கண்டிலோமோவென்னில் |
| 275 | 5 | வ்யவஸிஷ்யகளிற் | வ்யவஸிஸிஷ்யகளிற் |
| 287 | 8 | ஸ்வாபாஷாய | ஸ்வாப-ஷாய |
| 292 | 7 | ஸ்வநிஷ்ட வஸ்துவாக | ஸ்வநிஷ்ட வஸ்துவாக |
| 294 | 14 | ஸ்வதிஶயங்களும் | $ஸ்வதிஶயங்களும் |
| 298 | 14 | ஞானக்ஷேஶ்வர | ஞானக்ஷேஶ்வர |
| 303 | 16 | முன் பன்றிக்கே | முன்பன்றிக்கே |
| 304 | 15 | அப்பிள்ளார் | அப்புள்ளார் |
| 313 | 17 | ஸ்வீரகார | ஸ்வீகார |
| 315 | 6 | ப்ராரப்த | ப்ராரப்ய |
| 321 | 7 | முக்தாாக | †முக்தாாக |
| 327 | 10 | வொக்கின்றதே | வொக்கின்றவே |
| 353 | 1 | ஸவரூபாநுரூப | ஸ்வரூபாநுரூப |
| 361 | 16 | எனக்கே | எனக்கு |
| 363 | 25 | திருமேனி என் | திருமேனியும் என் |
| 365 | 4 | அடியேன | அடியேன் |
| 366 | 13 | வெண்ணெய் | வெண்ணையை |
| 368 | 4 | தொடந்து | தொடர்ந்து |
| 373 | 10 | வாசத்தோர் | வாசகத்தோர் |
| 373 | 19 | உபவ்ருத்தாலே | உபவத்தாலே |
| 376 | 21 | கவிவஹ | கவிவஹ |
| 379 | 10 | உநஷ்ட்ராஜீ | உநாஷ்ட்ராஜீ |
| 386 | 25 | தோனற | தோன்ற |

ஸ்ரீ: ॥

# ஸ்ரீ நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த ரஹஸ்யங்களில் 27-வது ரஹஸ்யமான விரோதபரிஹார:

[ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: ..................।.................ஸதா ஹ்ருதி ॥
ராமாநுஜதயாபாத்ரம் ......।......வேதாந்ததேஶிகம் ॥]

ஸ்ரீமந்நாராயண: ஸ்வாமீ ஶரண்ய: ஸர்வதேஹிநாம் ।
ஹ்ருத்யாந்நிஜபதப்ராப்தி விரோதிவிநிவாரக: ॥

உதிதம் பவத: பாபாத் ஔஷதாதிவ ஸேவத: ।
ஔஷதம் சேதஸா ஸேவ்யமநந்யத்வாய நித்யஶ: ॥

ப்ரபந்நஜந விச்சேதே ப்ரதிஷ்டிதசேதஸ:
ப்ரதிவாதி ப்ரஸஞ்ஜாதாயம் விஸஞ்ஜய யாயதந: ।
ஶங்காவ்யாஸங்கவ்யாஸப்ராசேதஸாதி நிபந்தந-
ஸ்ருதவர்ணித ஸ்ரீநாஸாஶயா இஹ தேஶிகா: ॥

பரவும் மறைகெளல் லாம்பதம்
சேர்ந்தொன்ற நின்றபிரான்
இரவன் றிரவியின் காலத்(து)
அழைத்த எழில்படையோன்
அரவும் கருடனும் அன்புடன்
ஏந்தும் அடியிரண்டும்
தரஎந் தமக்(கு)அரு ளால்தளரா
மனம் தந்தனனே. 32.

ஸ்ரீமந்நாராயண:—ஜ.

முமுக்ஷுவுக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யங்களான அர்த்த விஷயங்களில் *தோன்றிய விரோதங்களை ஸமிப்பியாதொழியில், [1]"ஜ்ஞாநேந ஹீநா: பஶுபி: ஸமாநா:" என்கிற தஶையாம். விரோதங்கள்போல் *தோன்றின அர்த்தங்களை ஒன்றுக்கொன்று ஒவ்வாதன என்று விடுதல், †ஒன்றை இட்டு ஒன்றை வாயிப்புதல் செய்யில், சாயாவாதிகள் படியாம். விரோதமாய்த் தோற்றின கட்டளையிலே இசைந்தால் ஸைதஸைதவாதிகள்படியாம். ஆனபின்பு ஸம்ப்ரதாயத்தில் அவஶ்யவேத்யங்களான அர்த்தங்களில் தோற்றின விரோதங்களை வாக்யார்த்தாநுகூல ந்யாயங்களாலே ஸமிப்பித்து ஸாரதமங்களான தத்த்வஹித புருஷார்த்தங்களைத்‡ தெளிந்து வல்லதொரு மோக்ஷோபாயத்தை அவலம்பித்து §ஸுநிஷ்டாநுரூப நிரபாயவ்ருத்தியோடே நடப்பார்கள் ஸாத்விகர்கள்.

அவ்விடத்திலே முற்பட [2]"ஸர்வமுக்ஷேர்ஜகாரா ஜகதும்" என்னும்படி ¶ஸர்வாத்மஸர்ஜஸமான ரக்ஷகத்வத்தில் அர்த்தாநுஸந்தாநவாருக்கு தண்ணீர்த் துரும்பு போலே வரும் ஶங்கைகளைப் பரிஹரிக்கிறோம்.

அநாதிகாலம் க்ஷேத்ரஜ்ஞர்கள் க்லேஶப்படப் பார்த்திருக்கிற ஸர்வஜ்ஞனை ஈஶ்வரன் ஸர்வரக்ஷகன் என்கிற இவ்வர்த்தம் கூடுமோ என்னில்—ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வம் இரண்டுபடியாயிருக்கும்; எங்ஙனே என்னில்: ஸர்வருக்கும் ஸத்தாதிகள் குலையாதபடி

[1] ஹ. ப. 10. 13. [2] ஸா. ஸ. 1. 9. * தோற்றிய, தோ — க. † ஒன்றையிட்டு—க. ‡ தத்த்வஹிதபுருஷார்த்தங்களை—க. [illegible] —க. § ஸுநிஷ்டாநுரூப—க. ¶ ஸர்வஸாரஸத்தஸம்ரக்ஷ

பண்ணுகிற ரக்ஷகர்களும் நிரபேக்ஷர்; ஸம்ஸாரிகள் திறத்தில் அநிஷ்டநிவாரணாதிரூபமான ரக்ஷகத்வம் இவர்கள் பக்கலிலே ஸாபேக்ஷமாய் இருப்பதேதனுமொரு வ்யாஜத்தை அபேக்ஷித்து இருக்குமாகையாலே, ஸ்வவ்யதிரிக்த ஸஜாதீயவிஷயத்திலும் அநிஷ்டநிவாரணாதிரூபமான ரக்ஷணத்திற்கு யோக்யனாகையாலும், $மேல் பெறப்புகுகிற பரமபுருஷார்த்தத்திற்கு உறுப்பான ஸத்தாதிகள் குலையாதே நித்யமாக ரக்ஷிக்கையாலும், ஸர்வரக்ஷகன் என்கிறது. 1.

இப்படி ஸர்வரக்ஷகனை ஈச்வரன் ஸர்வசேஷியாம்போது, தன்னை ஒழிந்த நித்யாநித்ய ஸர்வபதார்த்தங்களாலும் தனக்கு உபகாரம் உண்டாகவேண்டும். இப்படியானால் ஸ்வதஸ்ஸித்தாதிசயன் என்கை கூடுமோ என்னில், இது கூடும்: ஸர்வரூபன் ஆபரணம் பூண்டாற்போலே ஸ்வதஸ்ஸித்தமான ஜ்ஞாநசக்த்யாநந்த ஸௌந்தர்யாதிகளை உடையவன் தன் சேஷவிபூதிகளாலும் ஸமாக்ருதனாய் ஸாதிசயனாகை விரோதமன்றிறே. [1]“ஸ்வயா தீப்த்யா ரத்நம் பவதி மஹார்க்கம் ந விகுணம் ந குண்டஸ்வாதந்த்ர்யம் பவதி ச ந சாந்யாஹிதகுணம்” என்கிற ந்யாயம் இங்கே கண்டு கொள்வது. 2.

‘ஜநகன் ஸ்வவ்யதிரிக்த ஸகலசேஷி’ என்று சாஸ்த்ரம் சொல்லாநிற்க, [2]“உபயாதிஷ்டாநம் சைகம் சேஷித்வம்” என்று சொல்லுகிற அர்த்தம் கூடுமோ என்னில், லோகத்தில் பதிக்கும் பத்நிக்கும் தாஸதாஸ்யாதிகளெல்லாம் சேஷமாயிருக்குமாப்போலே, இங்கும் இருவரையும் ஒழிந்தவையெல்லாம் [3]“தேவ்யா ஸஹ சேஷம் ஸமி

---

[1] ஸ்ரீகுண. கோ. 31. [2] ஷடர்த்த ஸ. [3] விஷ்வ. ஸ.

$மேன்மேலும் பரமபுருஷார்த்தத்திற்கு—க.

விஹஞதிராஹயாத்ரிகா" என்கிறபடியே இருவருக்கும் பொதுவான ஶேஷமாயிருக்க, வதிசுவ - வதீசுவ - வஹவ ஶெஷியாலே ஒருவன் ஸவடுஶேஷியாக நிற்கை விராஜ மன்று. 3.

இப்படி ஸர்வேஶ்வரன் ஸர்வஶேஷியாய் நிற்க, [1]"வரிஜநவரிவஹாஹஷணாநராயாநி" ஐதரா திகளில் தானும் ஆஶ்ரிதருக்கு ஶேஷமாய் நிற்கிறன் என்கை வடிக்குமோ என்னில், சூகாரஹெத்தாலே இரண்டும் வடிக்கும்: [2]"உவாதெ ஸதாஸிதிநியஉநா செ: விதவிதள ஷூஉஷிரா ஶ்ரீஉாறு" என்கிறபடியே எல்லாவற்றையும் தனக்காக உவாதாநம் பண்ணி வைக்கையாலே, தான் ஸர்வஶேஷியாஞன்; ஆஶ்ரி தர்திறத்தில் தனக்கொரு உபகாரத்தைக் கடாக்ஷியா தே உபகரிக்கையாலே, அவர்களுக்கு ஶேஷமாகிறன். இப்படி ஶேஷமாயிருக்கிற இது [3]"ஜாஸஹெஶய யொமெந ஜூாதீநாம வகரொரஹூம" [4]"ஐகள ஸ உநி ஶாஹுஞு கிஂகரள ஸஉவஸிதா" [5]"அயஉவஸி உஹா வாஜொ ஷஹஸி யதெ விவக்ஷிதம" என்கிற இடங் கள்போலே மாணக்ருத்மாய் ஸ்ரீதிஶயஹெதுவா கையாலே ஷோஷமன்று. 4.

ஜீவனுக்கு ஶேஷத்வம் ஸ்வாவஸிஜமாகையாலே நித்யமாயிருக்கிறதென்னில், உாக்ஷதஶெயில் சொன்ன வாஉஸாஹும் கூடுமோ? ஆகையால் மோக்ஷம் பெறு

---

[1] குஜஜாவெய Zஹம தவஸிநாம என்கிறபடியே ஆஶ்ரிதருக் குத் தான் சேஷமாய் இருக்கிறன் என்கை—வ. [1] வரத ஸ்த. 63.
[2] ஶ்ரீரங் ஸ்த. 2. 87. [3] [4] ரா. பா. 31. 4. [5] பார. உத். பகவ [த்யாக. 1. 10.

மளவும் இவன் ஶேஷமாமத்தனையன்றே என்னில், தாஞாயூதங்களான ஷூணபுவாஷாணாகளுக்கு* ஓர்சி ஆகாரத்தாலே வாஉஸாஉும் சொல்லுமாப் போலே முக்தனுக்குச் சொன்ன வாஉஸாஉ்த்தை [1]"ஹொமஉா த்ஸாஉுஜிஜாவு" என்று ஜூாநாநநங்களிலே †வ்யவஸி தமாக்குகையாலும், [2]"ஜமஅ்ா வாவஜ_ம்" என்றதும் மற்றுமுள்ள லக்ஷணங்களுக்கு நிஉஶபுநமாகையாலும், ஊகுதஶெயிலும் ஶேஷசுவம் இவனுக்கு சுநாவதிக்க குறையில்லை. 5.

இப்படி முக்தனுக்கு ஶேஷசுவம் நின்றபோதே அத்தோடு ‡தாஞுநாயத்தாலே வாதஞூும் கழியாமையாலே, முக்தனை ஷூதஞ்ன் என்று விஶேஷி த்துச் சொல்லுகிற ஶுதிஸ்மூதிகளோடே விரோயம் வாராதோ என்னில், வாஉாதுஶரீரமாக ஶுதிஸிஉ ஞன ஜீவனுக்கு ஊகுதஶெயிலும் வாஉாதாவைப் பற்ற வாதஞூும் கழிய விரகில்லை. ஆனபின்பு [3]"ஷூாதஞுூதாஞு ஸ்ாவு தெனெநவ ஸஉஉஜொஉ தெ" உதுூ்விகளில் கஉபுவாதஞும் கழிந்த ஊகு தஶெயில், அவிஉதனெயஷூக்கள் ஐஷூவிவாதமில் லாதபடியைச் சொல்லுகிறன. 6.

இப்படி ஶேஷசுவாதஞுூங்கள் நிகுமாறு லும், [4]"ஜாஷஉஞதாஷூதஷஸவெபு ஷஷ்ாதூாநஃ வாஉாதூ நஃ" என்கிற இடம் ஆணாஉாஜிஶெஷெத்து ஔஸித்யும் காட்டுகைக்காக உவவரித்ததாமத்தனையன்றோ? ஶோ

---

[1] சா. ஸூ. 4. 4. 21. [2] சா. ஸூ. 4. 4. 17. [3] பரமஸ. [4] மந்த்ரராஜ.
*பாஷாணங்களுக்கு-ஸ. †வ்யவஸ்திதங்களாகையாலும்-க வ்யவ ஸ்திதமாகச் சொல்லுகையாலும்—ஸ. ‡துல்யந்யாயமான-க.

கத்தில் பாரதந்த்ர்யசேஷத்வங்களை உடையரான ஸம்ஸா ரிசேதநரை 'தாஸர்கள்' என்று சொல்லக் காண்கிறோம். இங்கு த்யாஜ்ய ஸ்வாமிகள் முதலான ஸர்வாத்மாக்களையும் 'தாஸபூதர்' என்றன்றோ சொல்லுகிறது என்னில், ஒரு சேதநனைக் குறித்துத் தன் $சேஷத்வத்தை ஸ்வீகரிக்கைக்கு யோக்யனான சேதநனை லோகத்திலும் 'தாஸன்' என்கிறதாகையாலே, இங்கு ஸர்வஜ்ஞரான ஸர்வாத்மாக்களுக்கும் ஸாஸ்த்ரத்திலே இந்த யோக்யதை வெளிப்படுமாகையாலே எல்லாரையும் 'தாஸபூதர்' என்கைக்குக் குறையில்லை. லோகத்தில் ஸ்வாமிகளுக்கு அந்த ஸ்வாமித்வத்தோடு ஸம்பந்தம் கூடாமையாலும், ஸாஸ்த்ரத்தில் அந்த சேதனனைக் குறித்து சேஷமாகையில் நியமம் இல்லாமையாலும் தாஸசப்தம் ஸங்குசிதமாகாதொழிகிறது. 7.

சேதநாசேதநங்கள் பத்தருக்குக் கர்மவிசேஷங்களாலும், முக்தருக்கும் நித்யருக்கும் *பகவதிச்சாவிசேஷங்களாலும் சில காதாசித்கமாகவும், சில நித்யமாகவும் சேஷமாய் நிற்கிற நிலை பொய் என்னவொண்ணாதிருக்க, இவற்றுக்கு பரமாத்மாவைப் பற்ற ஸ்வரூபசேஷத்வம் ப்ராமாணிகமாமோ என்னில்; கர்மாதிகள் உபாதியாக வரும் சேஷத்வமும், நிருபாதிகஸம்பந்தத்தாலே வரும் ஸ்வரூபசேஷத்வமும் விருத்தமன்று. ஸ்ரீயபதியை ஒழிந்தார்க்கு ஒன்றும் நிருபாதிகசேஷமன்று என்கையிலே அவதாரணத்திற்குத் தாத்பர்யம். 8.

$சேஷத்வவிசேஷத்தை—க. ஸ்வீகரிப்பிக்கைக்கு—ஏ.

* பகவதிச்சாவிசேஷ—க.

இச்சேஷத்வாவதாரணத்தாலே ஶரீராத்மபாவம் ஸித்திக்கும் என்னுமிடம் கூடுமோ? அல்லாத த்ரவ்யங்களைப் போலன்றிக்கே ஶரீரத்தை வேறொருத்தனுக்கு ஶரீரமாக்கவொண்ணாது என்கிற விஶேஷம் இல்லையோ என்னில், பத்நியையும் வேறொருத்தனுக்கு பத்நியாக்கவொண்ணாதென்கிற விசேஷமுண்டு. இவளை *ஓரோர் ஆகாரங்களாலே பரஶேஷமாக்க ஶக்யமென்றால், தன் ஶரீரத்தையும் தாநவிக்ரயாதிகளாலே பரஶேஷமாக்க ஶக்யமாயிராநின்றது. ஶரீரத்தை வேறொருத்தருக்கு ஶரீரமாக்கவொண்ணாதென்கிற ஸமயமும் வேதாந்தவிருத்தம்: ஈஶ்வரன் தன் ஶரீரமான †அசித்த்ரவ்யத்தை ஜீவர்களுக்கு சரீரமாக்கக் காணாநின்றோமிறே. ஆகையால் ஶேஷத்வாவதாரணம் கொண்டு ஶரீரத்வம் சொல்லவொண்ணாதென்னில், அவதாரணம் அயோகவ்யவச்சேதமென்றும், அந்யயோகவ்யவச்சேதமென்றும் இரண்டுபடியாயிருக்கும். அதில் ப்ரதமபக்ஷத்தில் தோற்றின ஶேஷத்வத்திற்கு உபாதி யில்லாமையாலே அயோகவ்யவச்சேதம் ஸித்திக்கையாலே அவ்வழியாலே ஶரீரத்வம் ஸித்திக்கிறது. சரீரமாவது ஒரு சேதனனுக்கு ஸ்வஶேஷமல்லாதபடி பண்ணவொண்ணாத த்ரவ்யம். இவ்வர்த்தம் இங்கு அயோகவ்யவச்சேதத்தாலே ஸித்திக்கையால், ஶரீரத்வம் ஸித்தம். அந்யயோகவ்யவச்சேதமாகிற இது தனக்கு உபாதியாலே பிறந்த அந்யஶேஷத்வத்தைப் பற்ற நிவர்த்தகமாய், அவ்வுபாதியைக் கழிக்கும் விரகிலே முயலுகைக்கு உறுப்பாம். இப்படி

* ஓர் ஆகாரங்களாலே—க. †சிதசித்த்ரவ்யத்தை—க.

ஸக்ருதுச்சாரத்தில் ஸித்திக்கிற உபாயாதிக்யமான ஶரண்யதை யைப் பற்ற ஸக்ருத்வசனத்திலே உபாயம் உக்கிறது. 9.

ஜீவனுக்கும் ஈஶ்வரனுக்கும் ஒக்க அணுத்வமும் வ்யாபித்வமும் ஶாஸ்த்ரஸித்தமாயிருக்கச் செய்தே, ஜீவனுக்கு அணுத்வத்தை நிலைநிறுத்தி வ்யாபித்வவசனத்திற்கு அந்யதாஸித்தி சொல்லக் கடவதானால், ஈஶ்வரனுக்கும் ஸ்வரூபம் அணுவாய், வ்யாபித்வம் வேறொரு ரூபத்தாலேயானாலோவென்னில், இது அணுத்வவிஷயங்களைவிட்டு ஜீவபரிமாணம் சொல்லுகிற *ஶ்ருதிவாக்யங்களாலும், [1]"மயா ததமிதம் ஸர்வம்" [2]"யோ லோகத்ரயமாவிஶ்ய" [3]"யதா ஸர்வகதோ விஷ்ணு:" இத்யாதி வசனங்களாலும் பரிஹ்ருதம். இப்பிரிவு [4]"நாணுரதச்ச்ருதேரிதி சேந்நேதராதிகாராத்" இத்யாதி ஸூத்ரங்களாலே ஸமர்த்திக்கப்பட்டது. ஈஶ்வரனுக்கு அணுத்வவ்யபதேஶம் உபாஸநார்த்தத்வாதி நிர்வாஹம் என்னுமிடம் ப்ரகரணாதிஸித்தம். 10.

தன் சரீரத்தில் பாணிபாதாதிகளில் எங்கும் தனக்கு ஸுகது:கோபலப்தியுண்டாயிருக்க, தன்னை அணுபரிமாணன் என்னில், இது ஸர்வருக்கும் ப்ரத்யக்ஷவிருத்தமாகையாலே, இவனை 'அணு' என்றவிடம் அந்யபரமாக வேண்டாவோ வென்னில், இவனை விபுவாகவாதல், தேஹபரிமாணனாகவாதல் கொண்டாலும், அவ்வோ ப்ரதேஶங்களில் †தர்மபூதஜ்ஞான

[1] கீதை. 9.4. [2] கீதை. 15.17. [3] வி. பு. 1.8.17. [4] சா. ஸூ. 2.3.22.

*ச்ருதிவாக்யங்களாலே—க. †தர்மபூதஞான விஷயீகாரமில்லாதபோது—க.

வ்யாப்தி இல்லாதபோது அங்குற்ற ஸுக²து³:க²ஸம்வே
த³நம் கூடாமையாலே ஶ்ருதிசொன்ன ஸர்வக³
த்வத்தை இசைந்தாலும் த⁴ர்மபூ⁴தஜ்ஞாநவ்யாப்திவிஶேஷ
த்தாலே அவ்வோ ஶரீராவயவங்களில் ஸுக²து³:க²ஸம்வே
த³நத்திற்கு அநுபபத்தியில்லை. 11.

ஆனாலும் ஸௌப⁴ரிப்ரப்⁴ருதிகளான யோகி³களும்
முக்தரும் நித்யரும் ஒருக்காலே பல சரீரத்தை அதி⁴ஷ்டிக்
குமிடத்தில், அந்தந்த ஶரீரங்கள் எல்லாவற்றிலும்
ஸ்வரூபஸந்நிதி⁴யில்லாதபோது போ⁴க்³யவிஷயங்களில்
ஜ்ஞாநவ்யாப்தி பிறந்தவளவாய் அவ்வோ தே³ஹங்
களில் அபி⁴மாநம் கூடாதொழியாதோ வென்னில்;
ஒரு சரீரத்திலே பல அவயவங்களை அதி⁴ஷ்டிக்கிறபோது
எங்குற்றைக்குமாக ஒரு அபி⁴மாநியாயிருக்கிறாப்போ
லே, ஒருக்காலே பல சரீரங்களை அதி⁴ஷ்டித்தாலும் தன்
ஸ்வரூபஸந்நிதி⁴யுள்ள ‡இடத்தில் அபி⁴மாநியொன்று
மே உள்ளது. அதுதன்னாலே தனக்கு அதி⁴ஷ்டே²ய
மான பல சரீரத்தில் நான் என்கிற வ்யவஹாரத்திற்கு
விரோதமில்லை. 12.

இப்படியானாலும் அணுவான ஜீவன் தானே முக்த
த³ஶையில் விகாஸம் என்கிற வசநங்களின் ஸ்வாரஸ்ய
த்தாலே இவனுடைய §அணுத்வம் ஆபேக்ஷிகமாயி
யாமத்தனை போக்கி நித்யமாகவற்றோ வென்னில்;
அணுத்வத்தை ஸ்வரூபநிரூபகமாகச் சொல்லுகிற
வாக்யம் ப்ரப³லமாகையாலும், நிர்விகாரஶ்ருதிவிரோத⁴
த்தாலும், முக்தத³ஶையில் சொல்லுகிற விகாஸமும்
அநேகஶரீரபரிக்³ரஹமும் [1]"ப்ரதீ³பவதா³வேஶ:" என்

---

[1] ப்³ர. ஸூ. 4. 4. 15. ‡ஓர் இடத்தில்—வ. §அணுத்வமும்—ம.

கிற கட்டளையிலே ஜீவனுக்கு ப்ரஸாதாத்மமான ஜந்மாந்-த்தினுடைய ப்ராப்தியாலே என்று கொள்ளுகை உசிதம். 13.

ஒருவனுக்கு ஒருக்காலே அநேகஶரீரபரிக்ரஹம் கூடுமென்னும் தோற்றுகிற வசநங்களில் ஸ்வாரஸ்யத்தைக் குலையாதே ஸகலஶரீரங்களும் ஒருவனுக்கே சரீரமாக ப்ராப்தமாகையால் ஏகஜீவவாதம் ப்ரஸக்தமாகாதோ வென்னில்; *இது ஸகலத்ர ஸா-வத்ரவ்யப்ரதிஸந்தாநாதிகள் இல்லாமையாலே நிரஸ்தம். அநேகஶரீரம் ஒருக்காலே எடுப்பார்க்கு அப்போது அவ்வோ சரீரங்கள் எல்லாவற்றிலும் உள்ள ஸுகது:காதிகளுக்கு ப்ரதிஸந்தாநமுண்டாயிறே இருப்பது. அஸங்கரணாதி ஹேதுத்தாலே ப்ரதிஸந்தாநம் பிறவா தொழிகிறது என்று காட்டுவதொரு வசநம் இல்லை. †இப்படி நிஷ்டுரமாகக் கழிக்கப் பார்த்தால், இது தேஹாதிஹேதுப்ரதிபத்தியாலே நிரஸ்தம். 14.

இப்படி ஏகத்திற்கு உபாயிஹேதுத்தாலே ப்ரதிஸந்தாநாஸாவம் கூடாதாகில், அவதாரங்களில் [1]"பவாந் நாராயணோ தேவ:" என்றும், [2]"ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றும் இக்கட்டளையில் வசநங்களாலே ப்ரதிஸந்தாநம் இல்லை என்று தோற்றுகையாலே அவதாரம்தோறும் ஆத்மபேதம் கொள்ளவேண்டி, ராமக்ருஷ்ணாதிரூபங்களெல்லாம் ஒரு ஈஶ்வரனுடைய அவதாரம் என்கிற ஸமயமும் விருத்தமாகாதோ என்னில்;

[1] ரா. யு. 120. 13. [2] ரா. யு. 120. 11. *'இதுஸகலத்ர' இதி நா—க. †'இப்படி' இதி நா.க.

இது ஸர்வஜ்ஞனான ‡ஈச்வரன் அஜ்ஞாநதசைகளிலே ஸர்வஸ்வாபிகளை தன் லீலாதிகளாலே அபிநயிக்கிறான் என்று சொல்லுகிற [1]“தேந வஞ்சயதே லோகாந்”, [2]“மோஹயிஸ்யாமி ஜகத் ஸர்வம்” இத்யாதிவசநங்களாலே ஸித்தம். ‘ஸர்வஜ்ஞனாயிருக்கிற ஈச்வரன் தன் குணத்தாலே அவதாரங்களிலே அஜ்ஞாநதசைகளை உண்டாக்கிக்கொள்ளுகிறான்’’ என்கிற பக்ஷம் ஹோஹோஹோதிகங்கள் போலே ஸித்தாந்தம். ஸர்வகர்த்தாவாய் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியான ஈச்வரன் தானே பரமாத்வைதத்தை உத்தாரித்து, அதுகண்டு தானே சோகிக்கிறான் என்றால், இது [3]‘ஜாரஸ்வாதி’ வாக்யதாத்பர்யமாம். 15.

இப்படி ஈச்வரன் ஸர்வஸ்வாபிநயம் பண்ணுகிறானாகில், ஆவேசாவதாரங்கள் என்று சில கொள்ள வேண்டுமோ? எல்லாம் ஸாக்ஷாதவதாரமாய், அங்குள்ள ஸர்வஸ்வாதி வ்ருத்திஸாம்யமும் ஈச்வரன் அநுஷ்டித்துக் காட்டினதாக அமையாதோ? இப்படியானன்றோ ஆவேசாவதாரங்களுக்கும் ப்ரதிஷ்டாவநாதிகளைச் சொல்லுகிற சாஸ்த்ரம் கூடுவது என்னில்;

---

[1]பார. உத். 17. 25. (யாநஸந்தி) [2]பார. மௌ. 8. 26

[3]ஜாரஸ்வம் காமுகவாக்யகாதாரம் ஆரி ஸிதோ மாயதி ஸஞ்காணி। தம் ப்ராஹ்மணீ வ்ருத்தி வாக்யகாரா ராஜந் ராஜ்யம் முமாநவம் கொரவாம்॥ என்று அர்த்தமில்லாத ச்லோகம்.

‡ஈச்வரன் ‘தேநவஞ்சயதே லோகாந் மாயாயோகேந கேசவ:’ ‘மோஹயிஷ்யாமி ஜகத் ஸர்வம்’ இத்யாதிகளிற்படியே அஜ்ஞாநதசைகளை லீலாதிகளாலே நடத்துகிறான் என்று தோற்றுகையாலே ஸித்தம்-வ.

இதுவும் ¹“ஸ்ருஷ்டம் தத: கரிஷ்யாமி ஸர்வமேவ ப்ரஜாபதிம்” என்றும் ²“அநந்தரம் ஸ்ருஷ்டவாந் ஸர்வதே வஸ வஸீம் ஸ்ருஷ்டம்” என்றும், ³“ஆவிஷ்டமாத்ராவேஷ்ட வாந்” என்கிற இப்படிகளில் வசநங்களாலே ப்ரஸித்தம். ஷட் ஸ்ருஷ்டாதிகள் ஸம்வதாவேஸமில் தாம் அகப்பட உண்டாயிறே இருப்பது. ஆவே வதாரங்களில் ஸ்ருஷ்டாஷ்டாதிகளெல்லாம் ஸ்ருத ப்ரஷ்டகவிருத்யாதிகளின் ந்யாயத்தாலே அவ்வோ வ விஸிஷ்டவராஹவிஷயங்களாதல், அவ்வோ ஜீவர்களை *ஆவேஸிக்கும் அதற்குத் தாத்காலிகமான ஸாக்ஷாத வதாரவிஷயங்களாதலாம். இப்படி ஆவேஸாவதாரம் கொள்ளாதொழியில், விஸத்ருஸந்யாயத்திலே சொன்ன வையுமெல்லாம் ஸாக்ஷாதவதாரங்களாகக் கொள்ளப் ப்ரஸங்கிக்கும். 16.

ஸம்ஸ்வராவதாரங்களில் தோற்றின அஜ்ஞாநாதிகளெல் லாம் அபிநயவிஸேஷமாற்போலன்றிக்கே வாஸ்தவமாக அஜ்ஞராய், ப்ராந்திகளாய், அஸ்வதந்த்ரராயிருக்கிற ஸம் ஸாரிகளுக்கு ஜ்ஞாந - ஆநந்த - ஐஸ்வர்யாதிகள் நித்ய விஷயங்களாகக் கூடுமோ என்னில்; ஸ்வரூபம் ப்ரகா ஸிக்கையும், வேறே சில ப்ரகாஸியாதொழிகையும், ஸ்வரூபம் ஸாநந்தமுமாயிருக்கையும் வேறே சில ப்ராதிகூல்யமாயிருக்கையும், ஸ்வரூபத்தில் விகாரா திகளுங்கள் அற்றிருக்கையும், கர்மாயத்தாலே ஸம்ஸ ஸித்தவிஷயமாய் அதின் ஸங்கங்களை அநுபவிக்கை யும் விருத்தமன்று. 17.

¹ ² வி. தர்மம். 103. 50. ³ *ஆவேசிக்குமதுக்குத் துல்யகாலமான — க.

திக்ருதாஶ்ரிகளோடு ஸஜாதீயனும் ப்ரதிபா
தநாதிருக்கும் பொழுதும், ¹நிர்வாணமய ஏவாய
மாத்மா ஜ்ஞாநமயோऽமல꞉ । து꞉காஜ்ஞாநமலா தர்மா꞉ ப்ரக்ரு
தேஸ்தே ந சாத்மந꞉ ॥ என்று சொல்லி ஸ்வரூபத்தைப் பற்
றிக்கிற ஜ்ஞாநத்துக்கு து꞉காஜ்ஞாநமலங்கள் ஔ
பாதிகத்வமாத்ரத்தைப் போக்கி, ஸ்வரூபத்தில்
ஸ்வாபாவிகமாகக் கூடுமோ என்னில்; மல்லிகைப்பூவிற்கு
சிகப்பும் வெளுப்பும் வாராநின்றால், ஒன்று ஔபா
திகத்ரவ்யமாய், ஒன்று ஸ்வாபாவத்ரவ்யமாய் இருக்
கிறப்போலே, இங்கு ‡தர்மபூதஜ்ஞாநவிகாஸவிரோ
திகளான தோஷாதிகள் உபாதித்ரவ்யங்களாய், உபா
திகழிந்தால் $ஸஜாதீயங்களோடொக்க ஸ்வாபாவத்ரவ்ய
மான ஆகாரம் §உண்டாகக் குறையில்லை. தோஷாதி
களைப் ப்ரக்ருதிஸம்பந்தங்கள் என்கிற விடம் ப்ரக்ருதிஸம்
ஸம்பந்தப்ரயுக்தங்கள் என்றபடி. 18.

ஸ்வரூபஜ்ஞாநமில்லாமையாலே அநாதியாக க்ஷேத்ர
ஜ்ஞர்களுக்கு *தேஹாத்மப்ரமாதிகள் நடவாநிற்க, ஸ்வாத்ம
ஸ்வரூபம் ஸ்வயம் ப்ரகாஶிக்கிறது என்கை கூடுமோ
என்னில்; அதிஷ்டாநமான ஸ்வரூபம் ப்ரகாஶிக்கையும்,
அதில் கிடக்கிற †விஶேஷாகாரங்கள் தோற்றாமை
யாலே. வேறொன்றை அதிலே ஆரோபிக்கையும்
ஸர்வப்ரமங்களுக்கும் பொதுவாகையாலே, இங்கும்
ஆத்மஸ்வரூபம் ‡ப்ரகாஶிக்கைக்கும் தேஹாதிகளிற்

¹ வி. பு. 6. 7. 22. ‡ தர்மபூதஜ்ஞாநவிகாஸவிஷயங்களான---க.
$ ஸஜாதீயரோடொக்க—வ. § உண்டாக்க—க.
* தேஹாத்மப்ரமாதிகள்—க. †விஶேஷங்களாகிற ஹேதுக்கள்—க.
‡ ப்ரகாஶிப்பிக்கைக்கும்—க.

காட்டில் ஸஹஜமான தர்மங்கள் தோற்றாமையாலே தேஹாத்மாபிமாநாதிகள் நடக்கைக்கும் விரோதமில்லை. 19.

ஆத்மா ஜ்ஞாநஸ்வரூபனாய் ஸ்வயம்ப்ரகாசனாய் இருக்கிறான் என்று கொள்ளில், ஸுஷுப்த்யாதிகளிலும் தோற்றவேண்டாவோ? ஸுஷுப்தியில் தன்னையும் தான் அறியாதிருக்கிறான் என்றன்றோ சாஸ்த்ரம் சொல்லுகிறது? ஆகையாலே ஜ்ஞாநஸ்வரூபனாய் ஸ்வயம்ப்ரகாசனாய் இருக்கிறான் என்கிறவிடம் தர்மபூதஜ்ஞாநத்தாலே தனக்குத் தான் தோற்றுகையாலே உபசரித்ததாமத்தனையன்றோ என்னில்; இது ஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஜ்ஞாநகுணகனுமாய் இருக்கிறான் என்று பிரியச் சொல்லுகிற ச்ருத்யாதிவாக்யங்களாலே பரிஹ்ருதம். ஸுஷுப்த்யாதிகளிலும் ஸ்வரூபம் ப்ரகாசியாநிற்க ஆகாராந்தரவிசிஷ்டமாய்த் தோற்றாமையாலே வைசத்யம் இல்லாதவளவேயுள்ளது. அவ்வளவாலே அப்போது தன்னையும் § அறிகிறிலன் என்கிற வாக்யங்களுக்கும் விரோதமில்லை. 20.

இப்படி ஜ்ஞாநஸ்வரூபனாகில் ஜ்ஞாநாச்ரயத்வம் சொன்னவிடம், 'ஞானம் அறியாநின்றது', 'கண் காணாநின்றது' என்கிற இடங்களிற் போலே உபசாரமாகாதோ? ஜ்ஞாநத்திற்கு ஜ்ஞாநாச்ரயத்வம் இல்லை என்னுமிடம் தர்மபூதஜ்ஞாநத்திலே கண்டிலோமோ வென்னில், இது உபஸம்ஹாரத்தாலும் அந்யதாஸித்தி சொல்லவொண்ணாத ச்ருத்யாதிவாக்யங்களாலும் ஸித்தம். ஸஜாதீயங்களுக்கு தர்மதர்மிபாவம் கூடுமோ என்கிறதுவும் நிரஸ்தம். எங்கும் தர்மதர்மி

§ அறிகிலேன் — க,

கருக்கு ஓர் ஆகாரத்தாலே ஸாத்யத்வமும் ஓர் ஆகாரத்தாலே ஸித்தத்வமும் உண்டாயிறே இருப்பது. ஸத்யஸங்கல்பத்வத்திற்கு பாதகம் இல்லை என்னு மிடம் கண்டபடிகொண்டோம். 21.

[1]"புமாந் ந தேவோ ந நர:" [2]"ந பஶுர் ந ச பாதப:" இத்யாதிகளிற்படியே ஶாஸ்த்ரவாக்யாதிகளாலே தேஹாதிவிலக்ஷணனாக தன்னைத் தெளிந்தவனுக்கு பின்னையொரு கர்தவ்யமும் உண்டோ? சில ஜாத்யாதிகளை முன்னிட்டுக் கொண்டன்றோ கர்தவ்யங்களை ஶாஸ்த்ரங்கள் விதிக்கின்றன. ஆனால் தன் ஸ்வரூபத்தில் வர்ணாஶ்ரமாதிகள் ஒன்றுமில்லை என்று தெளிந்தால், அவ்வோகர்மங்களில் அதிகாரியாம்படி எங்ஙனேயென்னில், தன் ஸ்வரூபத்தை தேஹாதிவிலக்ஷணம் என்று தெளியாதவனுக்கே வர்ணாஶ்ரமாதிகளுக்குப் போலே ஶாஸ்த்ராதிகாரம் இல்லையாவது; தெளிந்தவனுக்கு தன்னிற்காட்டில் பிரியத்தோற்றின க்ருஹக்ஷேத்ராதிகளோடு உண்டான ஸம்பந்தத்தாலே ராஜாஜ்ஞாதிகளால் வரும் சேவைகள் போலே இங்கு தன்னில் பிரியத்தோற்றின ஶரீராதிகளோடே தனக்கு உண்டான ஸம்பந்தவிஶேஷத்தாலே, [3]"ராஜாதிராஜ: ஸர்வேஷாம் விஷ்ணுர் ப்ரஹ்மமயோ மஹாந் । ஈஶ்வரம் தம் விஜாநீமஸ் ஸ பிதா ஸ ப்ரஜாபதி:" என்கிறபடியே ஸர்வருக்கும் ராஜாதிராஜனான ஸர்வேஶ்வரனுடைய ஶாஸநவிஶேஷங்கள் அடியாகக் கர்தவ்யவிஶேஷங்கள் உண்டாகக் குறை இல்லை. 22.

---

1 [2]வி. பு. 2. 13. 98. [3]பார. ஆஶ்வ. 43. 13.

ஆனாலும், [1]"யஸ்த்வாத்மரதிரேவ ஸ்யாத் ஆத்மத்ருப்தஶ்ச மாநவ: । ஆத்மந்யேவ ச ஸந்துஷ்டஸ் தஸ்ய கார்யம் ந வித்யதே" இத்யாதிகளிற்படியே ஆத்மாநுபவத்ருப்தனுக்குக் கர்த்தவ்யமுண்டோ வென்னில், இப்படி ஶாஸ்த்ரீயமான கர்த்தவ்யநிஷேதம் பண்ணுகிற வசனங்கள் யோகதஶையிலும் ஸாக்ஷாத்காரதஶையிலுமாகக் கடவதென்று ஶாஸ்த்ரங்கள்தானே நியமித்தன. இங்ஙனல்லாதபோது ஜ்ஞாநிக்கு ஸ்நாநாதிகர்த்தவ்யங்களும் தவிரப் ப்ரஸங்கிக்கும். அவற்றைத் தவிர்ந்தால், தோஷங்கள் வரக்காணா நின்றோமென்னில், *தனக்கடுத்த ஶாஸ்த்ரங்களை ஸாமாந்யத்ரிவிததஶையில் தவிர்ந்தாலும், தன் அதிகாராநுகுணமாகத் தோஷங்கள் வரும் என்னுமிடம் ஶாஸ்த்ரங்களாலே காணா நின்றோம். 23.

இப்படி ஸ்திரப்ரஜ்ஞனுடையவனுக்கும் ஸாமாந்ய யொழிந்த †தஶையில் கர்த்தவ்யாம்ஶம் உண்டானாலும் ஸமாதிநந்யாஸாதிவிஶேஷஸம்பத்துக்கத் தன்னைத் தெளிந்தவனுக்கு அநிஷ்டம் வரும்படியான அக்நிஹோத்ராதி ஸ்நாநாதி கர்மங்கள் கர்த்தவ்யங்களாமோ? இவன் தேவதா ஜீவவாஸிகளைப்போலே யாஜ்ஞயாஜியாக வன்றோ ‡ப்ராப்தன் என்னில்; ஸமவிஶேஷஜ்ஞானமுடைய வாஸுதே காணிக்கும் தன் அதிகாரவிஶேஷத்தாலே அக்நிஹோத்ராதி ஸவநங்களைக்கொண்டு யஜித்தாலும், த்ரைவர்ணிக்ய ஶரீரகனாகப் பரமாத்மாவை உபாஸிக்குமிடத்தில், அவ்வோ அசித்துக்கள் நின்ற ஊத்தும்; அக்நிஹோத்ராதி

[1]கீதை. 3. 17. *தனக்கடுத்த ஶாஸ்த்ரார்த்தங்களை—வ. †தசையிலும்—க. ‡ப்ராப்தம்—ம.

ஶரீரகனான பரமாத்மாவை உத்தேஶித்துப் ப்ரவ்ருத்திக்குமவனுக்கு இவ்விஶேஷணங்கள் ஸ்வதந்த்ரங்களாய் ஆராத்யங்களாக உத்தேஶ்யமல்லாமையாலும் சில இடங்களில் அநந்யஸாதாரணலிங்கங்கள் §இல்லாதபோது [1]"ஸாக்ஷாதப்யவிரோதம் ஜைமிநி:" என்கிற கட்டளையிலே இந்த்ராதிஶப்தங்கள் தானே வ்யுத்பத்திவிஶேஷத்தாலே பகவதஸாதாரணங்களான திருநாமங்கள் போலே ஸாக்ஷாத் பகவத்வாசகங்களாகையாலும், இப்ப்ரதிபத்திவிஶேஷமுடையவனுக்கு எங்கும் ஸமயாஜித்வமேயாகையால், அந்யயஜநதோஷமில்லை. சில காரணவிஶேஷத்தாலே பகவத்விஶேஷணமான நிலையைப் பாராதே தேவதாந்தரங்களைப் பற்றுவார்க்கு அந்யயஜந தோஷம் வரும். 24.

ஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஜ்ஞாதாவுமான இவ்வாத்மாவினுடைய தர்மபூதஜ்ஞாநத்திற்கு உத்பத்திவிநாஶாதிகள் ப்ரத்யக்ஷாதிஸகலப்ரமாணங்களாலும் காணாநிற்க, இவனுடைய தர்மபூதஜ்ஞாநம் நித்யம் என்னப் போமோ? இப்படிச் சொன்ன இடங்கள் ஸம்ஸாரஜ்ஞாந விஷயமாமத்தனையன்றோ என்னில்; இது [2]"யதா ந க்ரியதே ஜ்யோத்ஸ்நா மலப்ரக்ஷாலநாந்மணே:" இத்யாதிவசநங்களாலே ஜீவனுடைய ஜ்ஞாநம் நித்யமாய் கர்மவிஶேஷத்தாலே ஒருக்கால் திரோஹிதமாய், ஒருக்கால் ப்ரகாஶிக்கிறது என்கையாலே ஸித்தம். இப்படி நித்யம் என்று ப்ரமாணஸித்தமான தர்மபூதஜ்ஞாநத்திற்கு அவஸ்தாபேதத்தாலே உத்பத்திவிநாஶாதிவ்யவஹாரம் உபபந்நம். 25.

[1] சா. ஸூ. 1. 2. 29. [2] வி. தர். 104. 55. § இல்லாதவிடத்தில்—க.

ஆனாலும் ஸ்வயம்ப்ரகாஶஸ்வபாவமான ஜ்ஞானம் ஒன்றாலே திரோஹிதமாய் ப்ரகாஶியாதே கிடக்கிறது என்றால், §காணாதாதிகள் சொல்லும்கட்டளையாகாதோ? ஆனபின்பு ¶ப்ரகாஶியாதபோதே ஞானம் இல்லையாக வேண்டாவோ என்னில்; தர்மபூதஜ்ஞானத்தினுடைய நித்யத்வத்தைக் குலையாமைக்காக இது *விஷயப்ரகாஶகாலத்திலே ஜ்ஞானாந்தரநிரபேக்ஷமாக ப்ரகாஶிக்கும் என்று இப்படியே இதினுடைய †ஸ்வயம்ப்ரகாஶத்வத்தை நியமித்தபடியாலே, ப்ரகாஶியாதகாலத்திலும் ‡தர்மபூதஜ்ஞானஸ்வபாவத்திற்கு விரோதமில்லை. 26.

ஜ்ஞானமாவது புருஷனுடைய தர்மவிஶேஷமாக வன்றோ ப்ரத்யக்ஷாதிகளால் தோற்றுகிறது. இப்படியானால் ஆத்மஸ்வரூபத்தை ஜ்ஞானம் என்கை விருத்தமன்றோ வென்னில்; தர்மபூதமான ஜ்ஞானமும் தர்மியான ஜ்ஞானமும் வேறாகையால் விரோதமில்லை. தர்மியையும் [1]"ஜ்ஞானஸ்வரூபமத்யந்தம் நிர்மலம்", [2]"ஜ்ஞானானந்தமயஸ்த்வாத்மா" என்கிறபடியே ஸ்வாநுகூலப்ரகாஶமாகையாலே ஜ்ஞானமென்னக் குறையில்லை. ஆத்மஸ்வரூபத்தினுடைய ஸ்வாநுகூலத்வம் ஸாகாரத்வம். ஸர்வஜ்ஞருடைய தர்மபூதஜ்ஞானத்திற்கு ஸ்வாநுகூலத்வம் ப்ரதிகூலத்வதஶையாலும்

[1] வி. பு. 1. 2. 6. [2] §காணாதஷி சொல்லும்—க.
¶ப்ரகாஶியாதபோது—க. *விஷயப்ரகாஶத்திலே—க.
†ஸ்வயம்ப்ரகாஶத்வம் நியமித்தபடியாகையாலே—க.
‡தர்மபூதஜ்ஞானத்திற்கு—க.

உபாஸ்திதசையாலும் இடையிடப்பட்டு நாநா ப்ரகாரமாயிருக்கும். 27.

இப்படி ஆத்மஸ்வரூபமும் நித்யமாக ப்ரகாசிக்கிறதாகில் திரோஹிதமாய்க் கிடந்து மோக்ஷதசையிலும் ஸம்ஸாரதசையிலும் ப்ரகாசிக்கிறது என்கை விருத்தமன்றோ என்னில்; ஸ்வதமான ஆநந்தமும் நிர்விகார ஸ்வரூப ப்ரகாசத்தாலே எப்போதும் தோற்றி தீவ்ரமான அநந்தமும் அநாதிகர்மஸம்பந்தவத்தஜந்மவிசேஷத்தாலே திரோஹிதமாய், பின்பு மோக்ஷாதிதசைகளிலே ஸம்யக்ஜ்ஞாநத்தாலே அநுபாவ்யமாகிறது. ஆகையாலே ப்ரகாசதிரோதாநங்கள் பிந்நவிஷயமாகையாலே விரோதமில்லை. 28.

இப்படியானால் ஸ்வதமான ஆநந்தமும் நித்யாநுபாவ்யமாய் நின்றது; ஸம்ஸாரதசையில் அநுபவிக்கும் தீவ்ரமான ஸ்வரூபாநந்தமும் திரோதாயகங்களான ஸம்பந்தங்களும் கழிகையாலே ப்ரகாசாநுபவாநந்தத்தோடே கூட நிற்கவேண்டி §இருந்தது; மோக்ஷதசையில் ஸ்வரூபாநுபவமும் உபாயகோடியிலே சொருகி நின்றது. இப்படி இருக்க சப்தாதிவிஷயாநுபவத்தோடும் பகவதநுபவத்தோடும் கூடாத ஸ்வரூபாநுபவம் என்று ஒரு புருஷார்த்தத்தை ஹேமகோஷங்களோடொக்க $பிரிய எண்ணுகை யுக்தமோ என்னில்; மோக்ஷஸாதநதசையிலே ஆத்மாவினுடைய தீவ்ராநந்தத்தைக் கண்டாதல், முன்பே கேட்டாதல், கர்மவிசேஷவசத்தாலே *அவ்

§இருந்தது—க. $பிரியவேண்டு மென்கை—ங. *அநுபவாநுவ்ருத்தியிலே—க

ப்ரஹ்மாநுபவவ்ருத்தியிலே ஆசையுடையனாய், அதுக்கீடான உபாயாநுஷ்டாநம் பண்ணி, அப்படி ¶அநுபவிக்கையில் விரோதமில்லை. *இவ்வளவு அநுபவமுடையவனை முக்தனென்றவிடம் [1]"யஸ்யாஸக்தம் மநஸ:" இத்யாதிகளிற் போலே உபசாரம். 29.

[2]"கைவல்யம் பகவந்தம் ச மந்த்ரோऽயம் ஸாதயிஷ்யதி" என்று ஸ்வாத்மாநுபவத்தைக் கைவல்யம் என்கையாலும், [3]"ஜ்ஞாநீ கைவல்யநிர்வாணச்ரேயோ-நிச்ச்ரேயஸாம்ருதா" என்று பர்யாயங்களாகப் படிக்கையாலே கைவல்யரூபமும் ஜ்ஞாநிவாசகரூபமாகையாலும், ந்யாயலக்ஷணாதிமதங்களிற்போலே ஸ்வாத்மாநுபவமே மோக்ஷமாய் பகவதநுபவம் இவ்வாத்மாநுபவஸித்திக்கு உபாயமாதல், ஸ்ரீவிஷ்ணுதர்மாதிகளிலே மோக்ஷவிஷயமாதல் ஆனாலோ என்னில், இது †முக்தனுக்குப் பரமாத்மாவை ஸமாநன் என்று சொல்லுகிற ச்ருதி - ஸ்ம்ருதி - இதிஹாஸாதி - ஸர்வப்ரமாணங்களாலும் விருத்தம். இப்படி பகவதநுபவரூபமோக்ஷத்தில் கைவல்யரூபம் ஸர்வவிரோதிகளும் கழிகையாலே உபபந்நம். ஆத்மாநுபவமாத்ரத்தில் கைவல்யரூபம் கேவலாநுபவவிசேஷயாலே ப்ரயோகிக்கப்படுகிறது. 30.

[4]"யே து சிஷ்டாஸ்த்ரயோ பக்தா: பலகாமா ஹி தே மதா: । ஸர்வே ச்யவநதர்மாண: ப்ரதிபுத்தாஸ்து மோக்ஷகா:" என்கையாலே ஐச்வர்யம் போலே

[1] [illegible] 5. 2. 8. [2] ப்ரு. ஹா. ஸ்ம்ரு. 3. 40. [3] அமர. 10. 146.
[4] பார. சா. 350. 35 ¶ அநுபவிக்கவிரோதமில்லை—க.
* இவ்வநுபவமுடையவனை—வ. † முக்தனுக்கும்—க.

ஶுத்தாத்மாநுபவமும் நித்யம் என்று கொள்ளுவா ருண்டு. விஷயாநுபவவிமுகரான ஸர்வஜ்ஞ ருக்குக் கழிப்பாலே ரிண்டு ஸர்வாத்ம உண்டா டோ என்னவொண்ணாது. இரண்டுபடியும் கூடாதொ ழிந்தால் வேறொரு நிலையில்லாமையாலே இவ்வாத்மா வுக்கு கைவல்யம் என்று சொல்லப்படுகிற மோக்ஷா வஸ்துவிஶேஷம் ஸித்தியாதபடி இருந்ததே என்னில்; இதுவும் ஸாதநமும் ஶுத்தாத்மாநுபவமாத்ரமான உபாயவிஶேஷங்களாலே இப்புருஷார்த்தத்திற்கு அந்த காலத்தில் விஷயாநுபவமின்றிக்கே இருக்குமத்தனை; இவ்வாத்மாநுபவம் †நிவ்ருத்தமான வளவில், பூர்வகர் மங்களாலே பின்பு வைஷயிகபோகம் வரக்கூடுகை யால் மீட்சிக்கும் குறையில்லை. இவ்வநுபவமுடைய வர்களிலே சிலர் மோக்ஷாந்தரோபாயத்தையும் பற்றிவைக்கையாலே, ப்ரஹ்மவித்யாதிகளில் கணக்கிலே சிறிதுகாலம் இவ்வாத்மாநுபவம் பண்ணி பின்பு பரமாத்மாநுபவத்தோடே தலைக்கட்டவுமாம். இப்படி ஶுத்தாத்மாநுபவம் நித்யமல்லாமையாலே [1]“[illegible]” என்றதுவும் சேரும். ஶுத்தாத்மாநு பவாநந்தரமாக பரமாத்மாநுபவம் பிறந்தால் அதம் பிறந்த ஶுத்தாத்மாநுபவத்திற்கு [illegible]மின்றிக்கே மேல் வற்றமான அநுபவம் வருகிறவளவேயாகையாலே, இவ்விஶேஷம் அடியாக இவ்வாத்மாநுபவம் நித்யம் என்றார்களித்தனை. 31.

ஒரு ராஜாவுக்கு மஹாஸாமந்தனாயிருப்பானொருத்தன் ராஜாவின் அடியார்க்கு அடியனாமோ? இப்படியாம்

[1] பார. சா. 350. 35. †நிவ்ருத்தமாய்—க.

போது இவனை அடிமைகொண்டவனுக்கும் ராஜத்ரோஹமாகாதோ ? ஆனபின்பு ஸ்வதந்த்ராபஹார பகவத்த்வேஷத்வமும் ‡ஜீவசேஷத்வமும் கடிக்குமோ என்னில்; ராஜஸ்வாதந்த்ர்யத்தாலே ராஜதாஸன் ததீயதாஸனாம்போது விரோதமில்லை. இங்கும் அப்படியே பகவத்ஸ்வாதந்த்ர்யத்தாலே ஒரு ஜீவனுக்கு ஒரு ஜீவன் தாஸனாகக் குறையில்லை. அதில் [1]"அடியார்க்கு என்னை ஆட்படுத்த விமலன்" என்கிறபடியே பாகவதவிஷயத்தில் வரும் தாஸ்யம் ஸ்வரூபஸத்ருசமாய் நிறம் பெற்றிருக்கும்; இதரவிஷயத்தில் வரும் தாஸ்யம் அடியாரைத் தண்ணியவர்களுக்குத் தேவை ¶செய்ய விடுத்தாற்போலே விஸத்ருசமாய் நிக்ருஷ்டதமமாம். 32.

இப்படியாகில் ஸ்வாதந்த்ர்யத்தாலே பாகவதவ்யதிரிக்தவிஷயங்களிலே §லௌகிகவைதிககார்யங்களிலே ஸ்வஜாதீயமான தாஸ்யமுண்டானால், காம்யவிசேஷாதிகளில் சோதிதமான ஆகாரத்தை யொழிய சரீரத்தை விடில் ஆத்மஹத்யாதிதோஷம் உண்டாம்; *தப்பிப்போகில் கள்ளனும்; தேவதாந்தரபரரான விபரீதரை அநுவர்த்திக்கில் தேவதாந்தரபஜநத்திலும் காட்டில் கஷ்டமாம். இது [2]"பரஸ்பரநாசாய ந தேவநாரவ:" என்றும், [3]"நின் சாயை அழிவு" என்றும் சொல்லுகிறபடியே $ஈஶ்வரனுக்கும் ஸ்வத்வமாம். இப்படிப்பட்ட ஸம்ஶ்லேஷத்தில் இவனை உபஸ்ருஷ்டனாக்கி

[1] அமல. 1. [2] ஸ்தோ. ர. 25. [3] . §லோகவைதிக-க.
‡ஜீவவிசேஷத்வமும்—க. ¶செய்யவந்தாற்போலே—க.
*தப்பிப்போகிற—க. $ஈஶ்வரனுக்கு—வ

லும், உத்தரார்த்தங்களில் *ப்ராமாதிகத்திலும் புத்திபூர்வோத்தரார்த்தத்தில் ப்ராயச்சித்தாதிமுகத்தாலே அக நிவ்ருத்திக்கும் ப்ரமாணாநுகுணமாகச் சொன்ன கட்டளையிலே கண்டு கொள்வது. 95.

இப்படி ஸர்வபாபஸமூஹத்திற்கு ஸங்கோசமில்லாதபடி கொள்ளில், ப்ராரப்தகர்மமும் நிஶ்ஶேஷமாகக் கழிந்து ப்ரபந்நரெல்லாரும் அந்த க்ஷணத்திலே முக்தராக வேண்டாவோ என்னில், இங்கு 'மா ஶுச:' என்கிற வாக்யஸாமர்த்யத்தாலே ஶோகவிஷயமானவை யெல்லாம் கழிகையிலே †தாத்பர்யமாகையாலே, தீவ்ரஸம்வேகம் இல்லாதார்க்கு [1]"ப்ராரப்தேதரஹாநந்து தத்க்ஷணாச் ஸமவாப்நுயா:" இத்யாதிகளிற்படியே ‡ப்ராரப்தஶரீராதிகள் நிற்கக் குறையில்லை. 96.

இப்படி ப்ரபந்நனுக்கு ப்ராரப்தகர்மம் கழியாதாகில், உபாஸகனுக்குப் போலே §இவனுக்கும் ப்ராரப்தகர்மாவஸாநத்திலே மோக்ஷமாகவேண்டாவோ என்னில், $இதற்கும் "மா ஶுச:" என்கிற இத்தாலே பரிஹாரம்; எங்ஙனேயென்னில், இவனுக்கு கர்ப்பவாஸாதிகளில் ¶உத்வேகஸம்பவத்தாலே ப்ராரப்தத்தில் ஜந்மாந்தராதிஹேதுவான அம்சம் கழியும்; இஶ்ஶரீ

1 *ப்ராமாதிகத்தாலும் நோராநிற்கும் புத்திபூர்வோத்தராகத்தில் ப்ரமாணாநுகுணமாக ப்ராயச்சித்தாதிமுகத்தாலே-க. †தாத்பர்யம். ஆகையாலே—க ‡ப்ராரப்தசரீராதிகளுக்கீடாகக் குறையில்லை-க. சரீராதிகள் கிடக்க—ங. §இவருக்கும்—க. $இங்கு மா ஶுச: என்கிறத்தாலே பரிஹாரம். இவனுக்கு கர்ப்பவாஸாதிகளில்—க. ¶உத்வேகாதிஶயத்தாலே—ங.

ரம் தன்னிலும், இவனுடைய உத்வேகத்தளவுக்கீடாக ||காலவ்யவஸ்தையும் ஸித்திக்கும். 97.

இப்படி ப்ரபத்திவஶீக்ருதனான ஈஶ்வரன் அநிஷ்டமெல்லாம் கழிக்கிறானாகில், ப்ராரப்தஶரீரத்தில் து:கஹேதுவான பாபாம்ஶம் கழியவேண்டாவோ என்னில், இவன் அவ்வம்சத்தையும் பற்ற உதாஸீநனாய் ப்ரபத்தி பண்ணுமையாலும், அவ்வளவில் இவன் ஸம்ஸாரதோஷம் மறவாமைக்காகவும், ஶிக்ஷார்த்தமாகவும், ப்ராரப்தத்தில் பாபாம்ஶகார்யமான க்லேஶங்களை ஹிதபரனான ஈஶ்வரன் அநுபவிப்பிக்கிறான்: [1]"ஹரிர்து:கானி பக்தேப்யோ ஹிதபுத்த்யா கரோதி ஹி । ஶஸ்த்ரக்ஷாராக்நிகர்மாணி ஸ்வபுத்ராய யதா பிதா ॥" இத்யாதிகளுக்கும் இஶ்ஶரீரத்தில் ப்ராரப்த பாபகார்யமான து:கங்களிலே தாத்பர்யம். 98.

இப்படியானாலும் *இஶ்ஶரீராநுபந்தியான க்லேஶமெல்லாம் ஶமிக்கவேண்டும் என்று ப்ரபத்தி பண்ணினவனுக்கு முக்தருக்குப்போலே ஸர்வக்லேஶநிவ்ருத்தி உண்டாகவேண்டாவோ என்னில், †இங்ஙன் ப்ரபத்திபண்ணுகை கூடாது: சரீரம் இருக்கவேண்டும் என்று நினைக்கிறபோதே ஶரீராநுபந்தியான து:கங்களுக்கு ஹேதுவான ஊணும் உறக்கமும் ஶத்ருஜயாதிகளும் இஷ்டங்களாகையாலே, [2]"க்ஷுந்தே: ஶீதேந தாபஸ்ய த்ருஷா ஹேதவஸ்ஸ்வ க்ஷயா । க்ரியந்தே ஸாப்யகத்ருச்யம் ததிரோதஸ்ய சேதஸ:" இத்யாதிகளிற்படியே க்ஷுத்பிபாஸாதிகளையொழிய இவ்

1 [2]வி. பு. 1. 17. 64. ||காலவ்யவஸ்தை—க.
*இச்சரீரநுபந்தியுமான—க. †இங்கிவன்—க.

பாபங்கள் பலியாமையாலே, சரீரத்தோடே இருக்க இசைந்த காலம் ப்ராரப்தநிவ்ருத்தியைக் கணிசிக்கக் கூடாது. விசேஷித்து வ்யாத்யாதிக்லேசங்களைப் பற்ற [illegible]-ஸாதந-வைகுண்யமற ப்ரபத்தி பண்ணினால், அவை ஶமிக்கக் காணாநின்றோம். 99.

ப்ரபந்நனைப் பற்ற 'மா ஶுச:' என்று சொன்னால், இவன் ஏதேனும் ஒன்றைப் பற்ற ஶோகிக்கில் தன் நிஷ்டைக்கு விருத்தமாகாதோ? வ்யாஸவஸிஷ்டாதிகளான மஹாயோகிகளும் கூட ஓரளவிலே ஶோகிக்கக் காணா நிற்க, சரீரத்தோடிருப்பானொருவனுக்கு ஸர்வஶோகங்களையும் விட்டிருக்கை ஶக்யமன்றே என்னில், இவ்விடத்தில் அஜ்ஞாநஶக்த்யாதிகளாயிருக்கிற தனக்கு உபாயாந்தரங்களில் அநர்ஹதையாலே பிறந்த ஶோகத்தையும் கோலின பலத்தையும் பற்ற ஸந்தேஹம் உண்டோ என்று இப்புடைகளில் உள்ள ஶோகங்களையும் கழிக்கிறதாகையாலே, லௌகிகஶோகங்களுக்கும் ஸ்நேஹவிஶ்லேஷாதிகளால் வரும் ஶோகங்களுக்கும் ப்ரபத்திநிஷ்டையோடுவிரோதமில்லை. 100.

இதி ஶ்ரீதே சரமஶ்லோகே விசேஷாத்பாபமோக்ஷணம் ।
ஶங்காதத்பரிஹாராணாம் ஸரணிஸ்ஸமுதாஹ்ருதா ॥

இதி விரோதபரிஹாரே
சரமஶ்லோகாதிகார: த்ருதீய: ॥

திருமந்த்ரமும் த்வயமும் மந்த்ரங்களானபடியாலே ஸங்கோசித்து உபதேசிக்கவேண்டுகையாலே இவற்றை ரஹஸ்யங்கள் என்னப் ப்ராப்தம்; [1]"ச்ராவயேச் சதுரோ வர்ணாந் க்ருத்வா ப்ராஹ்மணமக்ரத:" என்று திரளிலே கேட்பிக்கலான இதிஹாஸத்திலே *ஏற்பட்டுக் கிடக்கிற சரமச்லோகத்தைக் கூட்டி 'ரஹஸ்யத்ரயம்' என்று உபதேசிக்கைக்கு அடியென்னென்னில், திருமந்த்ரமும் த்வயமும் சப்தார்த்தங்கள் இரண்டாலும் ரஹஸ்யங்களாயிருக்கும்; சரமச்லோகம் சப்தம் ப்ரகாசமாய்ச் சொல்லலானாலும், அதிரஹஸ்யமான அர்த்தவிசேஷத்தாலே ரஹஸ்யமாயிருக்கும். ஆகையால் இவை மூன்றும் முமுக்ஷுக்களுக்குப் ப்ரதாநோபஜீவ்யங்களான ரஹஸ்யங்களாகையால், 'ரஹஸ்யத்ரயம்' என்று ஆதரிக்கப்படுகிறது. 101.

இப்படி இவை மூன்றும் ஆதரணீயங்களாக வேண்டுமோ? சரமச்லோகத்தில் உபாயவிசேஷத்தை விளங்கக் கண்டு, த்வயத்தைக் கொண்டு அநுஷ்டித்து க்ருதக்ருத்யனாய் விடலாயிருக்க, முமுக்ஷுவாய் ப்ரபத்தி பண்ணுகிற அதிகாரிக்கு திருமந்த்ரத்தாலே ப்ரயோஜநமென்னென்னில், இவ்வதிகாரிக்கு அநந்யார்ஹ சேஷத்வாத்யர்த்தங்கள் தெளியவேண்டுகையால் அதற்காக யதாதிகாரம் வைதிகதாந்த்ரிகக் கட்டளையிலே திருவஷ்டாக்ஷராநுஸந்தாநம் உபஜீவ்யமாகையால், திருமந்த்ரம் அவச்யாபேக்ஷிதம். 102.

*ஏற்றப்பட்டு—க. ஓதப்பட்டு—**வ.**

இப்படியாகில் திருமந்த்ரம் தன்னாலே ஆத்ம ஸமர்ப்பணமும் ஸாத்யமாயிருக்கையால், த்வயத் தால் அபேக்ஷையென்னென்னில், திருமந்த்ரத்தால் ஆத்மஸமர்ப்பணம் ஸக்யமேயாகிலும், விஶதாநுஸ ந்தாநம் ஸக்யமன்று; ஆகையால் பூர்வோத்தரவாக்ய ஜந்யமான அர்த்தங்களையும், விஶிஷ்டமான வ்யவஸாயத்தையும், விஶிஷ்டமான ப்ரபத்தியையும், ப்ரபந்நனான ஈஶ்வரன் தானே ப்ராப்யனாய் நிற்கிற நிலையையும், ஸர்வாதிகார மான வஶீகரண விஶேஷத்தையும், தெளிய ப்ரகா சிப்பிக்கிற த்வயம் ஸ்வரக்ஷாபரஸமர்ப்பண தஶையில் அநுஷ்டாநஸௌகர்யத்தால் அவஶ்யாபேக்ஷ்யம். 103.

இப்படியானாலும் திருமந்த்ரத்தாலே ஶேஷத்வபா ரதந்த்ர்யாதிகளை அநுஸந்தித்து, மற்றும் அபேக்ஷிதங் களையும் த்வயத்தாலே தெளிந்து, பூர்வோத்தரவாக்ய ஸாரபூதவிஶிஷ்டப்ரபத்தி பண்ணி, நிஶ்சிந்த னாய் வேறொன்றால் அபேக்ஷையற்று, [2]"அயமர்த்தாநு ஸந்தாநஸஹ ஸத்தைவம் வக்தா" என்கிறபடி இது வே காலக்ஷேபமாயிருக்கிற அதிகாரிக்கு சரமஶ்லோ கத்தாலே அபேக்ஷையென்னென்னில், அகிஞ்சநனாய் ஸ்வரக்ஷாபரஸமர்ப்பணம் பண்ணுகிறவனுடைய அதி காரவிஶேஷமும், இவ்வதிகாரிக்கு ஸர்வோபாயஸ்தா நத்திலே இவ்வுபாயம் நிற்கிற *நிலையும், அதினுடைய நைரபேக்ஷ்யமும் துணையுடைமையும், ஶரண்யஸௌல ப்யமும், ஶரண்யஸர்வஜ்ஞத்வத்தாலே ஸர்வாநிஷ்டநிவ்ரு த்தியானமையும், இவ்வுபாயம் ப்ராரப்தத்தையும் கழிக்க வற்றானபடியும், இவனுக்குக் கோலின ஸாத்யத்தைப்

[1] சாண். கத். *நிலையையும்—க.

பற்றத் தான் நிஷ்க்ரியனாய் நிரதிசயப்ரீதியோடே இருக்கலான நிலையும், எல்லாம் சரமச்லோகத்தில் விசதமாக அநுஸந்திக்கலாமாகையாலே, ஸர்வதர்மா நுஷ்டாநத்திற்கு முன்பே ஸர்வதர்மவ்யாபகமான இச்சரமச்லோகம் அவச்யாநுஸந்தேயம். 104.

இப்படியாகில், *'ஜிதந்தே', ச்லோகத்வயம் முதலான வற்றையுமெல்லாம் ரஹஸ்யங்களாகச் சேர்த்து அநுஸந்திக்கத் தட்டென்னென்னில், விஸ்தராபேக்ஷை உள்ளபோது அவையும் உபஜீவ்யங்களாகிலும், அவற்றிலுள்ளவையெல்லாம் இவற்றில் உண்டாகையாலும், ச்ருதிவ்ருத்தஸம்ப்ரதாயத்தாலும், இவை மூன்றையும் ப்ரதாநங்களாக பூர்வர்கள் அநுஸந்தித்தார்கள். ஆகையால் இவை மூன்றும் அர்த்தவிஷய சப்தராசியில் †ஸாரதமம் என்னும் அர்த்தத்தை ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாரநிஷ்கர்ஷாதிகாரத்திலே ஸமர்த்தித்தோம். 105.

ஒரு முமுக்ஷுவுக்கு இப்படி ரஹஸ்யத்ரயசிக்ஷை வேண்டுமாகில் [1]"விஜ்ஞாய ஜகத்ஸம்பூதிம் வாஸுதேவ ஹ்ருஷீகேசம் । நிர்வாஸதயா ஜக்தும் மதாதநா மோ வசநாக்கா" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே எட்டும் இரண்டும் அறியாத இடைச்சிகள் மோக்ஷம் பெற்ற படி எங்ஙனேயென்னில், அவர்களும் பூர்வஜன்மங் களிலே அபேக்ஷிதசிக்ஷை பண்ணி, ஒரு உபாய விசேஷத்திலே துவக்குண்டு, ப்ராரப்தகர்மவிசேஷ ங்களாலே சில ஜன்மங்களுண்டாய், அந்திமசரீரத்தில்

[1] வி. பு. 5. *ஜிதந்தையில் ச்லோகத்வயம்—க.
†ஸாரதமங்களாக ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரத்திலே—க.

ஒருபரீக்ஷை இல்லையேயாகிலும், பகவத்பாகவதாதிகள் உபகரித்து ஸம்யக்ஶ்ரவணமுண்டாய் ப்ரபத்த்யுபாயமும் பெறுகிறார்களாகையாலே ஏதேனுமொரு ஜன்மத்திலே அபேக்ஷிதரஹஸ்ய ஜ்ஞானத்தாலே எல்லாரும் ஈடேறுவார்கள் என்னுமிடம் ஸித்தம். 106.

இப்படி சிலஜ்ஞாநஸம்ஸ்காராதிகள் உபகரிக்க அநுகூலஸ்வபாவராய்ப்பிறந்து முக்தராகப் ப்ராப்தரானாலும் ஜ்ஞானங்களிலும் ப்ரதிகூலனாய், அதிஶயஜ்ஞானத்திலும் தான் படுமளவும் எதிரம்புகோத்து நின்ற ஶிஶுபாலனுக்கு [1]"ப்ரதிபவமபராத்துர்முக்த ஸாயுஜ்யதோ பூ:" என்கிறபடியே மோக்ஷம் கொடுத்தபடியென்னென்னில், அடியிலே ஸ்ரீவிஷ்ணுலோகத்திலே ஸாரூப்யமும் பெற்றார் இரண்டு க்ஷேத்ரஜ்ஞர் பாகவதாபசாரவிஶேஷத்தாலே மூன்று ஜன்மம் ப்ரதிகூலராய்ப் பிறந்து, அவ்வவதார பர்யவஸாநத்திலே பழைய பதம் பெற்று க்ரமேண முக்தராய் நின்றார்கள் என்று புராணஸித்தமாகையாலே இப்படிப்பட்ட விஷயங்களிலும் மூன்புற்றை அபராதப்ரதிக்ஷேபபடியாக மோக்ஷம் என்னுமிடம் ஸித்தம். 107.

இப்படி *ரஹஸ்யத்ரயவிஷயமாக வரும் சங்கைகளுக்குப் பரிஹாரங்கள் உதாஹரித்தாலும், மாயாவாதாதி ஸித்தாந்தங்களாலே மயங்கின மநுஷ்யாதிகளுடைய மதிமாந்த்யத்தாலே வரும் சங்கைகளுக்கு எல்லையுண்டோ? அவை எல்லாம் பரிஹரித்து ஒருவனுக்கு விஶதஜ்ஞானம் தேடக் கடைப்படுமோ என்னில், உக்தப்ரகாரத்தாலே

---

[1] ஸ்தோ. ர. 63. †முக்தராக ப்ராப்தமானல்—க. முக்தராக ப்ராப்தம். ஜந்மாந்தரங்களில்—வ. *ரஹஸ்யவிஷயமாக—க.

வ்யாக்யாநம் தெளிந்தால், இவ்விடக்காலே மற்றுமுள்ள சங்கைகளுக்கெல்லாம் பரிஹாரங்கள் பல ஶாஸ்த்ரங்களிலும் ஸ்ரீபாஷ்யாதிகளிலும் †வ்யுத்பந்நராய், [1]"திருந்தக் கண்டு எனக்கொன்று உரையாய்" என்னும்படி நிற்கிற தெளிவுடைய விஜ்ஞரோடே சேவித்துத் ||தெளியக் கண்டு கொள்ளலாம். 108.

வ்யாக்யாநமல்லாத அம்சத்தில் தெளிவு இல்லாத போதும் வ்யாக்யாநம் தெளிகையாலே ஸம்ப்ரதிபத்தி உண்டாம். 109.

அலர்ந்தவம்புயத்திருந்து தேனருந்தி யின்னகல்
அல்குலாரசைந்தடைந்த நடைகொளாததனமென்னே
நலம்தவிர்ந்ததாலதென்கொல் நாவின்வீறிழந்ததால்
நாவணங்குநாதர்தந்த நாவின் *வீறிழந்ததென்
சலம்தவிர்ந்துவாதுசெய்து சாடிமூண்டமிண்டரைச்
சருவிலாரெனக்கனைத் துரைத்த ¶வேதிராசர்தம்
வலம்தருங்கைநாயனார் வளைக்கிசைந்த கீர்த்தியால்
‡வாரிவாலதாமதென்று மாசில்வாழிவாழியே. 33.

ஸ்ரீமத்வேங்கடநாயகேந ரசிதா
ஶேஷாவிரோதாஹ்வயா ஸதாம்
ஶேஷாஸீவிஷநாதவஜ்ரகிரணஸ்பஷ்டாஶா-
ஸஹ்யாயதக்ஷூஸ்ரியா ।

[1] 6. 1. 8. †ப்ராப்தஜ்ஞராய்—வ ||தெரிய—க
*வீறழிந்ததென்—வ. ¶எதிராசர்தம்—வ. ‡வாரிபாலதாம்—

ஸ்ராவ்யாரோபிததத்த்வஸூக்திகவசே
ஸ்ராவ்யாத்ருஷ்யாத்மநாம்
ஸ்வஜ்ஞாநாம் ஸந்ஹாராவதந்த்ரியம்
ஶிஶ்ராத்வோ ஹஸ்தா ॥

ஸ்தோத்ரம் ஶ்ரீஸ்தவஸூக்தி-
ஸுதா ஸோஹ்யம் ஸஹ்ருத்யம் ஜகத:
கிம் ஶ்ரீரங்கரங்கேஶ்வரஸ்ய
ஸர்வஸ்வ ஸர்வம் தஸ்யார்ஷம் ।
ஶிஷ்யா: ஶ்ருதிஶிக்ஷிதவாஸய:
ஶ்ருதிவஶே யேஷாம் வயம் யே ச ந:
தத்ஸ்வோக்ஷஸவபூர்ணகக்ஷோதிதம்
ஸாமந்தரை: கிம் பரை: ॥

$சடையன் திறலவர் கள்பெரு
ஞானக் கடலதனை
இடையமிழா துகடக்கினும்
ஈதள வென்றறியார்
விடையுட னேழன் றடர்த்தவன்
மெய்யருள் பெற்றநல்லோர்
அடைய அறிந்துரைக்க
அடியோமுமறிந்தனமே.

இதி ஶ்ரீரங்கநாயிகாஸ்தவ: ஸமாப்த: ।

$இந்தப் பாசுரம் முந்தின இரண்டு ச்லோகங்களுக்கும் முன்னால் 33-வது பாசுரத்திற்குப் பிறகு அச்சிடப்பட்டிருக்கிறது—க.

𑌇𑌤𑌿 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌸𑌿𑌂𑌹𑌸𑍍𑌯 𑌸𑌰𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌸𑍍𑌯
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌸𑍍𑌯 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌕𑍃𑌤𑌿𑌷𑍁
𑌵𑌿𑌰𑍋𑌧𑌪𑌰𑌿𑌹𑌾𑌰𑌃 𑌸𑌂𑌪𑍂𑌰𑍍𑌣𑌃 ॥

ஸ்ரீ: ॥

# ஸ்ரீ நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த ரஹஸ்யங்களில் 28-வது ரஹஸ்யமான முநிவாஹநபோகம்.

[illegible]
[illegible] ।
†[illegible]
[illegible] ॥

§பாவளரும் தமிழ்மறையின் பயனே கொண்ட
பாண்பெருமாள் பாடியதோர் பாடல் பத்தில்
காவலனும் கணவனுமாய்க் கலந்து நின்ற
காரணனைக் ‡கருத்துறநாம் கண்ட பின்பு
கோவலனும் கோமானும் ஆன வந்நாள்
குரவைபுணர் கோவியர்தம் குறிப்பே கொண்டு
சேவலுடன் பிரியாத பெடைபோல் சேர்ந்து [மே.35.
தீவினையோர் தனிமையெல்லாம் தீர்ந்தோம் நா

காரணவிசேஷம் இன்னது என்று அறுதியிட அரிதாயிருப்பதொரு [illegible]கடாக்ஷத்தாலே [illegible] [illegible] விவேகத்தை உடையராய், [illegible]ங்களான

---

*[illegible] ॥ என்று அதிகமாக ஒருசுலோகம்—வ. [illegible] ॥ —க.

†[illegible]

§இந்தப் பாசுரம் 37வதாகவும், அது 35வதாகவும் மாறியிருக்கிறது—வ. ‡கருத்துற நான்—க.

க்ஷேத்ரமாஹாத்ம்யபுராணாதிகளையும், க்ஷேத்ரமாஹாத்ம்யஸ்தோத்ராதிகளையும், க்ஷேத்ரமாஹாத்ம்யப்ரவ்ருத்திகளையும் தப்பின தம்முடைய கரணத்ரயமும் இப்போது ப்ராப்தமான ஏகவிஷயத்திலே அநந்யப்ரயோஜநாநுகூலவ்ருத்தியை யுடைத்தானபடியைக் கண்டு ஸந்தோஷயுக்தரான திருப்பாணாழ்வார் பின்பு பரமபதத்திலே பெறும் பேற்றை இங்கே பெரியபெருமாள் $திருவடிகளிலேபெற்று, இப்பேற்றை அடிதொடங்கி, ‘அமலன் ஆதி பிரான்’ முதலான பத்துப் பாட்டாலே அநுபவபரீவாஹமாக அருளிச் செய்கிறார்.

இப்ப்ரபந்தம் அதிவிஸ்தரம், அதிஸங்க்ஷேபம், *அதிக்ருதாதிகாரகம், உத்க்ரூஹகம், உபரவைராக்யாபூகம், ஸம்ஶயாதிஜநகம், †விரஹக்லேஶம், உக்தவைஷணம், பரோபதேஶம், பரமதநிரஸநம் என்றாற்போலே மற்றுள்ள அந்யாதப்ரபந்தங்களில் உள்ளவையொன்றுமின்றிக்கே ‡அநுபவபரீவாஹமாயிருக்கிறது முதற்பாட்டான ‘அமலனாதி பிரான்’ தொடங்கி, ‘கொண்டல்வண்ணனை’ என்கிற ||தலைக் கட்டும் பாட்டளவும்.

இதில் மூதற்பட்ட மூன்றுபாட்டுக்கு முதலான §அக்ஷரங்கள் மூலமாகிய ஒற்றை எழுத்தின் முதல் நடுவிறுதியானவை. இதில் முதற்பாட்டு திருமந்த்ரத்

$திருவருளாலே—க. *அநதிக்ருதாதிகாரகம்—க.
†விரஹக்லேஶவர்த்தகம், உக்தவைஷணபாஷணாந்விதகம், பரோபதேஶபரவசகம், பரமதநிராஸாந்விதகம் என்றாற்போலே—ங. ‡பகவதநுபவ—ங. §அக்ஷரம்—க
||தலைக்கட்டு—க.

திலும் த்வயத்திலும் முமுக்ஷுவுக்கு ஸ்வரூபாநு ஸந்தேயங்களான அர்த்தங்களை ஸூசிப்பிக்கிறது. ¶

அமலனாதி பிரான்
அடியார்க்கு என்னையாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன்
விரையார்பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன்
நீள்மதிளரங்கத்தம்மான் திருக்
கமலபாதம் வந்து என்கண்ணின்
உள்ளன வொக்கின்றதே. 1.

---

¶ 'இந்த ரஹஸ்யத்திற்கு மூலப்ரபந்தம்' என்று அதிகம்—க.

அமலன்—ஸகல தோஷங்களுக்கும் எதிர்த்தட்டானவனாய் (அதாவது பிறருடைய ஸம்ஸாரமாகிற தோஷத்தைப் போக்கி மோக்ஷத்தை அளிப்பவனாய்), ஆதி—ஸர்வ ஜகத்காரணனாய், பிரான்—ஸர்வோபகாரகனாய், அடியார்க்கு—அவனுடைய தாஸர்களுக்கு, என்னை, ஆட்படுத்த—தாஸனாம்படி செய்த, விமலன்—ஒருவித குற்றமற்றவனாய், விண்ணவர் கோன்—நித்யஸூரிகளுக்கெல்லாம் அதிபதியாய், விரை ஆர் பொழில் வேங்கடவன்—வாஸனை நிறைந்த சோலைகளையுடைய திருமலையிலே நிற்கிறவனாய், நிமலன்—(அனுகூலவொட்டாமை என்னும்) தோஷமற்றவனாய், நின்மலன்—(தன் அடியார்களின் தோஷத்தைக் காணுதல் என்னும்) குற்றமற்றவனாய், நீதிவானவன்—(ஸ்வாமி, தாஸன் என்கிற) முறைதப்பாத பரமபதத்திலே நித்யவாஸம் பண்ணுகிறவனாய், நீள்மதிள்—உயர்ந்த மதிள்களையுடைய, அரங்கத்து அம்மான்—ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வ ஸ்வாமியானவனுடைய, திருக்கமலபாதம்—அழகிய செந்தாமரை போன்ற திருவடிகள், வந்து—(தானாகவே) வந்து, என் கண்ணின் உள்ளன ஒக்கின்றவே—என்னுடைய கண்ணுக்கு உள்ளே இருப்பதுபோல் இருக்கின்றன.

(அமலன்) என்றது ஹேயப்ரத்யநீகன் என்றபடி; இத்தால் மோக்ஷப்ரதத்வம் சொல்லிற்றாயிற்று. இது ப்ரதாநமான லக்ஷணமாகையாலே பிரியப் பேசப்படுகிறது. (ஆதி)- §"ஸர்வ கர்த்தா ந க்ரியதே" இத்யாதிகளிற்படியே ஸமஸ்தஜகதேககாரணபூதன். இத்தால் 'காரணமே *ஶரண்யம்' என்கிறபடியே முமுக்ஷுவுக்கு சரணமாகப் பற்றப்படுமவன் என்று ஸூசிதம்: இக் காரணத்வமும் மோக்ஷப்ரதத்வமும் ஸத்தாவாசகங்கள் போலே ஸமஸ்தலோகஶரண்யனுக்கு விஶேஷணங்கள். (பிரான்)— †"[illegible]" இத்யாதிகளிற்படியே ‡ஸர்வோபகாரகன். இங்கு ஆத்மாக்களுடைய §ஸத்தாஸ்தாபநம் முதலாக, ஸர்வஜ்ஞ ஸர்வாத்ம ப்ராப்தி பர்யந்தமாக ப்ரத்யுபகாராதி நிரபேக்ஷனாயிருக்கும் அவனுடைய உபகாரங்களெல்லாம் ஸாமான்யேந சொல்லப்படுகிறது. இதெல்லாம் ப்ரதாநமான லக்ஷணங்கள்; இவை தம்மளவில் பர்யவஸித்தபடியிலே இம்மூன்று பதத்திற்கும் தாத்பர்யம். இது மேல் பாசுரங்களிலும் காணலாம்.

(அடியார்க்கு என்னை ஆட்படுத்த) என்கிற இடத்தில் 'அடியார்' என்கிற இத்தாலே த்ருதீயாக்ஷரத்திலே சொன்ன ஜீவஸமஷ்டியும், ஜீவர்களுக்கு ஈஶ்வரனைக் காட்டில் வேறுபாடும், அந்யோந்யம் பிரிவும் காட்டப்படுகிறது. 'அடியார்' என்றால் ஸாதாரணமாக சதுர்த்தியில் சொன்ன தாஸ்யபூர்வர்களையெல்லாம்

§ஸர்வ கர்த்தா க்ரியதே-ஸ. *சரணம்-க. †[illegible]-ஸ. ‡ஸர்வோபகாரணம்-க. §ஸத்தாஸ்தாபநம்-க.

காட்டிற்றேயாகிலும், இங்கு 'அடியார்' என்கிறது [1]"யோ ஹ்யநந்ய பரஶ்ஷோ தேவா ஸ்வாமி நந்தம் விதுர்:" என்னும்படி ஸ்வநிஷ்டராய் அநந்யார்ஹரான ஶேஷத்வஜ்ஞாநரஸிகரை. இப்படி 'அடியார்க்கு' என்று விஶேஷோபாதாநம் பண்ணுகையாலே உபயாக்ஷரத்தின் படியே நிருபாதிகஶேஷிகள் வேறு இல்லாதபடியும் ஸோபாதிகஶேஷிகளோடு தமக்குத் துவக்கற்றபடியும் சொல்லிற்றாயிற்று. ஸர்வஶேஷியாகையாலே ஸர்வத்தையும் யதேஷ்டமாக விநியோகிக்கப் ப்ராப்தனாய், நிரங்குஶஸ்வதந்த்ரனாகையாலே ஸர்வத்தையும் யதேஷ்டமாக விநியோகிக்க ஶக்தனுமான ஸர்வேஶ்வரன் அநந்ய ப்ரயோஜநரான ஆஶ்ரிதர்க்கு ஸர்வமும் ஶேஷமாகக் கடவது என்கிற விநியோகவிஶேஷத்தாலே ஸர்வருக்கும் பாகவதஶேஷத்வம் நித்யஸித்தமானால், அநந்யப்ரயோஜநரான ஆஶ்ரிதர்க்கு பாகவதஶேஷத்வம் ஈஶ்வரன் தன்னையும் *பாகவதரையுமொழிந்த அந்யரைப்பற்ற †ஶேஷத்வமில்லாதபடி வருகிறதாய், இதின் பலமான கைங்கர்யமும் இப்படி வருகிறதாகையாலே 'என்னை அடியார்க்கே ஆட்படுத்தினான்' ‡என்கிற அவதாரணம் இங்கே விவக்ஷிதம். [1]"மற்றுமோர் தெய்வம் உளதென்றிருப்பாரோடுற்றிலேன்" என்றிறே இவர்களுடைய பாசுரம். (என்னை ஆட்படுத்த) [2]"யதீந்த்ரியஜிதா:" என்னும்படி ஜிதேந்த்ரியனாய்வைத்து அதற்குமேலே [3]"ஈஶ்வரோऽஹம்" என்று இருக்கக்கடவ

---

[1] தி. மொ. 8. 10. 3. [2] [3] கீதை. 16. 14. *பாகவதரை யொழிந்த—க. ‡என்று-க. †சேஷத்வப்ரஸங்கமில்லாதபடி வருகிறதாயிற்று- -வ.

என்னை [1]"ஸுதோஹம் ஸர்வதா தாஸ:" என்னப் பண்ணின உபகாரத்திற் காட்டிலும் [2]"உற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்னப் பண்ணின இதற்கு மேலொரு உபகாரமுண்டோ என்று இப்பரமோபகாரத்தையும் பிரியப் பேசுகிறார். இது நமஸ்ஸின் தாத்பர்யமும்.

கீழ்ச் சொன்ன §கர்த்ருத்வாதிகளிலே [3]"எருத்துக் கொடியுடையான்" முதலான ருத்ராதிகளுக்குப் போலே அஜ்ஞாநாதிதோஷங்கள் இவனுக்கு உண்டாகில், இவன் முன்பு சொன்ன ஸாக்ஷாத் மோக்ஷப்ரதாநம் பண்ணவல்லனே என்ன, (விமலன்)— நித்யநிர்தோஷன். இத்தால் ஸகலேதரவிலக்ஷணன் என்றதாயிற்று. இவ்வளவு ஸூரிகளுக்கும் இல்லையோ என்ன, (விண்ணவர் கோன்)- பரமஸாம்யயோகத்தையுடையரான ஸூரிகளைக் காட்டில் வேறுபட்டவன்; இத்தாலே ஸூரிஸேவ்யமான பரத்வமும் தோன்றுகிறது. இப்படி எட்டாநிலத்திலே இருக்குமிருப்பு இங்குள்ளார்க்கு நிலமன்றே என்ன, (விரையார்பொழில் வேங்கடவன்). பரிமளம் வடிவு கொண்டாற் போலே இருக்கிற திருச்சோலைகளையுடைய திருமலையிலே [4]"கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்கிறபடியே எல்லாருக்கும் ஆஸ்ரயிக்கவும் அநுபவிக்கவுமாம்படி [5]"இருள்தருமாஞாலத்துள் குன்றத்திட்ட விளக்காய் $நிற்கிறவன். அந்தமில் பேரின்பத்துள்வாருடைய

---

[1] மந்த்ரராஜபதம். [2] தி. மொ. 8. 10. 3. [3] பெரி. தி. 5. 3. 6.
[4] 1. 8. 3. [5] 10.6.1. §கர்த்ருத்வாதிகளாலே—வ $நிற்கிறவவன்-க.

ஸௌலப்யத்தைக் காட்டில் [1]"எம்பெருமான் பொன்மலை மேல் ஏதேனுமாவேனே" என்னும்படி பிறந்த ஸ்தாவரங்களுடைய ஸௌலப்யம் அதிஶயிதமாயிருக்கும். இப்படி ஸுலப-ஸுசீலனானாலும், [2]"அவ்வண்ணத்தவர் நிலைமை கண்டும் தோழீ அவரை நாம் தேவரென்று அஞ்சினோமே" என்னும்படி நிற்குமோவென்ன, (நிமலன்)- *ப்ரஹ்மருத்ராதிகளும் அஞ்சி அருளப்பாடு முன்னாக அணுகவேண்டும்படியான ஐஶ்வர்யத்திலே †குறும்பறுத்த நம்பிக்குக் கூசாதே நிரந்தர ஸம்ஶ்லேஷம் பண்ணலாம்படி தன் ஈஶ்வரத்வமாகிற ஆஶ்ரயண விரோதிதோஷத்தை மறைத்து, [3]"ஸுலபஸுகவராயீநா

[1]பெரு. தி. 4.10. [2]தி. நெடு. 21. [3]ஸ்ரீரங்க. ஸ்த. 2.
*ப்ரஹ்மருத்ராதிகள் அஞ்சி—க †குறும்பற்றநம்பி—க.

†குறும்பறுத்தநம்பி—முக்குறும்புகளையும் (குலம், தொழில், ஐச்வர்யம் என்றவற்றால் வரும் கர்வங்களை) நீக்கின பெரியார். குயவர் வகுப்பில் பிறந்தவரான ஒரு பக்தர் குறும்பறுத்த நம்பி எனப்படுவர். இவர் மண்ணாலே திருவேங்கடமுடையானுக்குத் திருமேனி ஏற்படுத்தி, அவருக்கடிமை செய்துகொண்டு வந்தார். தினமும் தன் தொழிலான மண் பாண்டங்கள் செய்வது முடியுமளவில், கையில் ஒட்டிய மண்ணைக் கழுவி, ஒரு புஷ்பமாகச் செய்து, அப்பெருமாள் திருமுடியில் அதைப் பரமபக்தியுடன் சாத்திவருவார். அக்காலத்தில் ஒரு ராஜபுத்திரன் ஸ்வர்ண புஷ்பங்களால் மாலைசெய்து திருவேங்கடமுடையானுக்குச் சாத்துவித்தான். அவன் முக்குறும்புள்ளவனாகையால், அது திருமுடியில் தங்கவில்லை. ஆவேசமுகத்தாலே 'குறும்பறுத்த நம்பி இடும்பூ நமக்கு உண்டு' என்று நியமனமாயிற்று. இப்படி குறும்பறுத்த நம்பி என்பவர் தம் ஜாதிவ்ருத்த நிகர்ஷத்தைப் பாராதே திருமுடிக்குப் பூ இட்டார் என்கிற சரித்திரம் இங்கே குறிப்பிடப்பட்டது. (காமம், வெகுளி, மயக்கம் என்பவைகளையும் முக்குறும்பு என்பர்.)

அவிஜ்ஞாதஸ்ருதி:” என்கிறபடியே ஆஶ்ரிதவாத்ஸல்யத்தை ‡வெளியிட்டுநிற்குமவன். இப்படி ஸௌலப்யஸௌஶீல்யங்கள் உண்டானாலும், ஆஶ்ரிததோஷத்தைக் காணுமாகில் அணுகக் கூசார்களோ என்னில், (நின்மலன்)- [1]“அவிஜ்ஞாதா” என்றும், [2]“என்னடியார் அது செய்யார்” என்றும் சொல்லுகிறபடியே ஆஶ்ரிதருடைய தோஷதர்ஶநமாகிற ஶரண்யதோஷமில்லாதவன். ஸர்வஜ்ஞனாயிருக்கச் செய்தே ஆஶ்ரிததோஷத்தைக் காணான் என்றது, §காணுமதுவும் இவர்களுடைய தோஷத்தைக் கழிக்கைக் குறிப்பாம் என்றபடி.

‘விமலன்’ என்று தொடங்கி இவ்வஞ்சுபதங்களாலே நாராயணஶப்தத்தில் உபாயத்வோபேயத்வங்களுக்கு உபயுக்தமான உபயலிங்கத்வமும் உபயவிபூதிநாயகத்வமும் சொல்லிற்றாயிற்று; மேல் இவன் ஸ்வரூபப்ராப்தகைங்கர்யரூபமான $நீதியிலே நிரதரான நித்யஸூரிகளுக்கு ஸேவ்யனுமாப்போலே நமக்கும் ஸேவ்யனும் என்று சதுர்த்தியில் ¶கருத்தாலே கைங்கர்யப்ரதிஸம்பந்தித்வத்தை அநுஸந்திக்கிறார் (நீதி வானவன்). இங்கு ‘வான்’ என்கிற சப்தம் ஸூரிஸேவிதமான பரமபதத்தைச்சொல்லுகிறது. ‘நீதியை நடத்துவிக்கும் வானிலே வர்த்திக்குமவன்’ என்னவுமாம். [3]“தேந வஞ்சயதே லோகாந் மாயாயோகேந கேஶவ:” என்கிறபடியே கலக்குவாரும், [4]“அவஜாநந்தி மாம் மூடா:” என்கிறபடியே கலங்குவாருமில்லாத தேச

---

[1]ஸஹஸ்ரநாம. [2]பெரி. தி. 4 9.2. [3]பார. உத். 67. 15.
[4]கீதை. 9. 11. ‡வெளியிடாநிற்குமவன்—ஐ.
§காணுமென்றதுவும்—க. $நீதியிலே—க. ¶கருத்தான-ஐ.

மாகையாலே [1]“ஞாஸ்யெஸ்யயோமெந ஜ்ஞாதீநாம் வ கஸேஜஷம்” என்றும், [2]“வாஸேஸு ஸம்ஜ்ஞாஜ கிஜநோ யஷஸிதெ” என்றும் இங்கு பிறக்கும் ஸம்ஸ்ஸீதவத்தின் மாருட்டமில்லாத பரமபதத் திலே நித்யவாஸம் *பண்ணுகிறவன் என்றதாயிற்று.

இப்படி ஸர்வஸேவ்யனை †ஸர்வஸேஷி [3]“விபீ டணற்கு வேருக நல்லான்” என்கிறபடியே தமக்கு இப்போது விசேஷித்து அநுபவிக்கலானபடியைப் பேசுகிருர்: (நீள்மதிளரங்கத்தம்மான்): ‘சுயொஜெ’ என்றும், ‘சுவாஜிதெ’ என்றும் சொல்லுகிற கலங் காப் பெருநகரத்தின்படியை கொடியணி நெடுமதிள் களாலே ஸாரக்ஷிதமான ‡ஸ்தலவிஶேஷத்திலே காட்டி அயர்வறுமமரர்களுக்கும் அதிபதியான தன்படியை [4]“செங்கோலுடைய திருவரங்கச் செல்வனுரான” ஆகாரவிஶேஷத்தாலே அறிவித்துக்கொண்டு,ஶேஷிக்வ த்தின் எல்லையிலே தான் நின்ருற்போலே §ஶேஷக்வ த்தின் எல்லையிலே என்னை நிறுத்தின ஸ்தஜு ஸ்லாவி. ‘அரங்கத்து அம்மான்’— நீர்மைக்கும் மேன் மைக்கும் எல்லையானவன்.

இவனுடைய உவாயக்வஉராவக்வங்களில் உறப் புண்டான திருவடிகளை அநுபவிக்கிருர்: (திருக்கமல பாதம்). வாவநக்வஹொமக்வங்களாலே ஸாஹாஶ்யங்க ளான திருவடிகள்; திருவுக்கு லீலாகமலம் போலே

1 [2]வி. பு. 1 17. 23. [3]தி. மொ. 6 10. 4. [4]நா. தி. 11. 3.
*பண்ணுகிறவிமலன் என்றதாயிற்று—வ. †ஸர்வசேஷித்வேந செல்வ விபீடணற்கு—வ. ‘விபீடணற்கு நல்லான்’ என்று பிரபந்த பாடம். ‡ஸ்தல விசேஷத்தாலே அயர்வறுமமரர்களுக்கு அதிபதி யானபடியை—க. §சேஷத்வநிலையிலே நிறுத்தின—க.

இருக்கிற பாதம் என்னவுமாம். (வந்து)- 'வந்து' $என்கிற இத்தாலே ஓடின தம்மைத் தொடர்ந்தபடியும் ஸ்வயந்தவஸ்யங்களானபடியும் தோன்றுகிறது. இத்திருவடிகளில் வைத்த கண் வாங்க வொண்ணாதபடியான போக்யாதிசயத்தை ஒரு உத்ப்ரேக்ஷையாலே அருளிச் செய்கிறார் (என் கண்ணினுள்ளன ஒக்கின்றவே). தேவாதிகளில் தலைவரான ப்ரஹ்மாதிகளுடையவும், ஸநகாதிகளான யோகிகளுடையவும் திவ்யசக்ஷுஸ்ஸுக்களுக்கும்கூட தூரமாயிருக்கக்கடவவை க்ஷுத்ரனான என்னுடைய மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களுக்கும் ஸுத்ராவஸமாயிராநின்றன என்று ஆச்சர்யப்படுகிறார். 'நீள்மதிளரங்கத்தம்மான் திருக்கமலபாதம்' என்று த்வயத்தில் பூர்வவாக்யார்த்த நாராயணசரணாரவிந்தத்தையும் அசரணசரணாரவிந்தத்தையும் அநுஸந்தித்தபடி.

இப்பாட்டால், ரக்ஷகத்வமும், *ஜகத்காரணத்வமும், சரண்யத்வமும், மற்றும் ஸர்வப்ரகாரோபகாரகத்வமும், க்ருபாவிசேஷத்வமும், ஸ்வாதந்த்ர்யமும், அவற்றில் ஸாரதமமான உபகாரவிசேஷமும், நித்யநிர்தோஷத்வமும், நித்யஸூரிநிர்வாஹகத்வமும், நித்யவிக்ரஹவத்த்வமும், ஸர்வஸாக்ஷித்வமும், ஸௌசீல்யமும், வாத்ஸல்யமும், கைங்கர்யப்ரதத்வமும், †கைங்கர்யஸ்தாநவிசேஷவத்த்வமும், ஸர்வஸ்வாமித்வமும், திருவடிகளினுடைய பாவநத்வமும், போக்யத்வ

$ என்கிற இடத்திலே ஓடிவந்தெம்மைத் தொடர்ந்த—க.

*ஜகத்காரணத்வமும் மற்றும் ஸர்வப்ரகாரோபகாரகத்வமும், அவற்றின் ஸாரதமமான உபகார விசேஷத்தையும்—க,

†கைங்கர்யஸ்தான விசேஷமும்—வ, விசேஷத்வமும்—க.

மும், அவற்றைத் தான் ஸாக்ஷாத்காரமாக ‡ஸாக்ஷாத்கரிஷ்டு களாகக் கொண்டு அநுபவிக்கப் பெற்றபடியையும் $முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீயஃபதியினுடைய ¶ஸாரூப்ய ஸாமீப்யங்களான குணவிசேஷங்களை ஸாதிப்பித்தார்.

அவற்றில் ஸம்ஸாரநிவர்த்தகத்வகாஷ்டையாவது— களையற்ற கைங்கர்யத்தைக் கொடுக்கை; *காரணத்வ காஷ்டையாவது— காரணாந்தரங்களெல்லாம் தான் இட்ட வழக்காய், தனக்காதல், தன்னுடைய ஜ்ஞாந ப்ரகாசாதிகளுக்காதல், ஒரு காரணஸத்பாவமென்றிக் கே இருக்கை; ஶரண்யத்வகாஷ்டையாவது—தன்னை ரக்ஷகனாகப் பற்றினார்க்குத் தன்னையொழிய மற்றொருவரை ரக்ஷகராகப் பற்ற வேண்டாதபடி இருக்கை. †உபகாரகத்வகாஷ்டையாவது— ஒரு க்ஷுத்ரவ்யாஜத்தை அவலம்பித்து, உபயவிபூதிவிசிஷ்டனான தன்னை ஸர்வஸ்வதானமாகக் கொடுத்தும், அதற்குமேல் கொடுக்கலாவது இல்லாமையாலே நிருத்யைணியாயிருக்கை; க்ருபாகாஷ்டையாவது— ஶத்ருவினுடைய ஸம்பந்தி களும்கூட த்யாஜ்யம் ‡என்ற பரிவர் முன்னே 'ஶத்ரு தானும் இசையில் ஸ்வீகரிப்பேன்' என்று எதிர்பேசும் படியான இரக்கத்தையுடையனாய், §அவர்கள் தாங்களும் இவனைக் கைக்கொள்ளும்படி பண்ணுகை; வாத்ஸல்யகாஷ்டையாவது- தன்னையும் பிறரையும் தான்

‡ அநந்யத்ருஷ்டியாக? $முன்னிட்டு ஸ்ரீய:பதியினுடைய—க.
¶ஸாரூப்யஸாமீப்ய குணவிசேஷங்களை—க.
*காரணகாஷ்டையாவது—க. †உபகாரத்வகாஷ்டையாவது—க.
‡என்றும் பரிவார்—க. §அவர் தாங்களும்—க.

நினைத்த நிலைகளிலே நிறுத்தும்போது விலக்கவல்லா ரன்றிக்கே யிருக்கை; நிர்தோஷத்வகாஷ்டையாவது— தோஷப்ரத்யநீகங்களான ஸ்வாபாவிகங்களோடு உண்டான ஸம்ஸர்க்கத்தாலும், பிறர்க்கு அஜ்ஞாநதோஷஹேதுக்க ளானவற்றைத் தான் அநுஷ்டித்தாலும், தனக்கு அஜ்ஞாநதோஷங்கள் வாராதிருக்கை; ஸ்வாமித்வகாஷ்டை யாவது- விபூதிகளையெல்லாம் தனக்கு விபூதி யாக உடையனாயிருக்கை; ஸௌஶீல்யகாஷ்டையாவது— அகல நினைப்பார்க்கும் அகலவொண்ணாதபடி அணுக நிற்கை; ஸௌலப்யகாஷ்டையாவது- தன் பக்கல் ஸௌஹார்த்தத்தை ஸங்கிப்பார்க்கும் வெளியிடுவார்க்கும் தானே மறுமாற்றம் சொல்லி, மேலும் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகை; வாத்ஸல்யகாஷ்டையாவது— §அஜ்ஞரா யிருப்பாரும் ஆச்ரிதவிஷயத்தில் ஆயிரங்கோடி குற்றம் காட்டிலும் அநாதரம் பிறப்பிக்க வொண்ணாதிருக்கை; ஔதார்யகாஷ்டையாவது— தன் விசேஷணமாக வல்லது மற்றொரு ஔதார்யமில்லாதிருக்கை; ஆச்ரித பக்ஷபாதித்வகாஷ்டையாவது- *ஸர்வஸமனான தான் ஆச்ரிதஸங்கல்பத்தோடே விரோதித்த தன் ஸாமா ன்ய ஸங்கல்பத்தை அஸத்யமாக்கி, அநிதரஸாதாரண மான ஆதிக்யத்தைப் பண்ணுகை; போக்யத்வ காஷ்டையாவது— தன் ஸ்வரூபத்தை அநுபவித்தால் தன் விசேஷணமாக ஸர்வத்தையும் அநுபவிக்குமது அதின் திவலையோடு ஒத்திருக்கை; அயத்நஸௌம்யத்வ

§அந்தரங்கராயிருப்பார்க்கு ஆச்ரயவிஷயத்தில் ஆயிரங்கோடி குற்றம் காணிலும் அநாதரம்—க. *ஸர்வவர்ண ஸமனான—க.

காமெஷியாவது— *ஹொமாயமான கரணஹெரண மும் வேண்டாதபடி தென்றலும் பரிமளமும் வந்தாற் போலே வந்து விலக்கவொண்ணாதபடி ஈஙாஹாவனா யிருக்கை. இவையெல்லாம் இப்பதங்களில் அடைவே ஆழ்வார் அநுபவித்தபடியை ஈஙாவஸிப்பது. 1.

இவன் திருவடிகளில் சிவப்புக்கு நிகரான திருப் பீதாம்பரம் தன் சிந்தைக்கு விஷயமாகிறதென்கிறார்:

உவந்தவுள்ளத்தனாய்
  உலகமளந்தண்டமுற
†நிவந்த நீண்முடியன்
  அன்று நேர்ந்த நிசாசரரைக்
கவர்ந்தவெங்கணைக் காகுத்தன்
  கடியார் பொழில் அரங்கத்தம்மான் அரைச்
சிவந்த ஆடையின் மேல்
  சென்றதாம் என் சிந்தனையே 2.

---

*ஹொமாயமாக—க. †நிமிர்ந்த; நிமிர்ந்த.

உவந்த உள்ளத்தனாய்—ஸந்தோஷங்கொண்ட மனத்தை யுடையவனாய், உலகமளந்து—எல்லா லோகங்களையும் (தன் திரு வடிகளாலே) அளந்து, அண்டம் உற—அண்டகடாஹத்திலே இடிக்கும்படி, நிவர்ந்த—நிமிர்ந்த, நீள்முடியன்—பெரிய கிரீடத் தையுடையவனாய், அன்று—(ஸகல ஸாதுக்களுக்கும் துன்பம் நேர்ந்த) அன்று, நேர்ந்த—எதிர்த்துவந்த, நிசாசரரை—(தாட கை முதல் ராவணன் வரையிலுள்ள) ராக்ஷஸர்களை, கவர்ந்த— விழுங்கின (கொன்ற), வெங்கணை—மிகக்குரூரமான பாணங்களை யுடைய, காகுத்தன்—ஸ்ரீராமனாய், கடி ஆர்—பரிமளம் நிறைந்த பொழில்—சோலைகள் சூழ்ந்த ஸ்ரீரங்கத்திற்குள்ளே கண்வளர்ந் தருளுகிற ஸர்வஸ்வாமியான பெரிய பெருமாளுடைய, அரை— திருவரையில் சாத்திய, சிவந்த ஆடையின்மேல்—திருப்பீதாம் பரத்தின்மேலே, என் சிந்தனை—என்னுடைய மனது (கூட) சென்றது ஆம்—சென்றதே! (என்று ஆச்சர்யப்படுகிறார்).

(உவந்த உள்ளத்தனாய்)- மஹாபலியாலே அபஹ்ருதமான ராஜ்யத்தை மீட்டுத்தரவேண்டும் என்று இந்த்ராதிகள் இரக்க, [1]"உதாரா: ஸர்வ ஏவைதே" என்கிறபடி இவர்கள் பக்கலிலே ப்ரீதமான திருவுள்ளத்தையுடையனாய், அஸுரனேயாகிலும் *ப்ரஹ்லாதனோடு உண்டான குடல்துவக்குப் பாவித்து, ஆச்ரிதவிரோதியான மஹாபலியை அழியச் செய்ய நினையாதே அவனுடைய ஔதார்யத்திற்கு அநுரூபமாகத் தான் இரப்பாளனாய்ச் சென்று அவன் கொடுக்க வாங்குகையாலே அவனளவிலும் அநுக்ரஹயுக்தனாய், ஸாபேக்ஷ நிரபேக்ஷமாக எல்லார் †தலையிலும் தன் திருவடிகளை வைக்க, விலக்காதவளவாலும் ஸர்வவிஷயத்திலும் உவந்தவுள்ளத்தனாய், (உலகமளந்து)— ‡'அளவுபடக் கொடுத்தோம்' என்றிருக்கிற அஸுரன் முன்னே எல்லா லோகங்களையும் தன் திருவடிகளாலே அளவுபடுத்தி (அண்டம் உற நிமிர்ந்த நீள் முடியன்)- மேலே கவிற்ற அண்டகபாலத்தும் போலே இருக்கிற §ப்ரஹ்மாண்டபித்தியிலே கிட்டும்படி விஜ்ரும்பித்த பெரிய திருவபிஷேகத்தையுடையவன்; அவன்தன்னைப் போலே திருவபிஷேகத்திற்கும் அவனோடொக்க வளருகைக்கீடான சக்தி உண்டு. கர்மவஶ்யதை தோற்றும்படி பிறவி தொடக்கமாகச் சடையும் குண்டிகையும் சுமந்து திரிகிற ||ப்ரஹ்மேஶ்வரர் பார்த்து நிற்க இப்படி

[1] கீதை 7. 18. *ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானோடு உண்டான—வ. குடல்துவக்குப் பாவித்து—க குடல்துவக்கால் ஆநுகூல்ய—வ. †தலையிலும் திருவடிகளை—க. ‡அளவுபட்டுக்கொடுத்தோமென்றிருக்கிற—க. §ப்ரஹ்மாண்டத்தில்—க. ||பரிச்சின்னரான ஈச்வரர்பார்த்து-க.

முடிசூடி நிற்கையாலே உபயவிபூதிநிர்வாஹகத்வமும் அபிவ்யக்தமாகிறது. இத்த்ரிவிக்ரமாவதாரம் சொன்ன இத்தாலே ஸம்ஸாரஸ்வ*ஸங்காவிஷயரான இந்த்ராதிகள் இரப்பாளரானபடியும், [1]“குறைகொண்டு நான்முகன்” இந்த்ராதிகளிற்படியே ப்ரஹ்மா திருவடி விளக்கி ஸநாதனானபடியும், ருத்ரன் தீர்த்தஸ்பர்சம் பெற்று பூதனானபடியும் சொல்லித்தாயிற்று. இத்தால் †முன் பாட்டில் சொன்ன இஷ்டப்ராபகத்வத்தையும் உதாஹரித்ததாய், இனி அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும் உதாஹரிக்கிறார்: (அன்று நேர்ந்த நிசாசரரைக் கவர்ந்த வெங்கணைக் காகுத்தன்). ‡தேவர்களும் ரிஷிகளும் கூடக் குடியிருக்கவொண்ணாதபடி த்ரைலோக்யக்ஷோபம் பிறந்து தேவர்கள் சரணாகதரானவன்று சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்து, தாடகா - தாடகேய - விராத - கபந்த - வாலி - கரதூஷணாதிகளை நிராகரித்து, லங்கைக்குப் பரிகையான லவணார்ணவத்தை பர்வதங்களாலே பண்பு செய்து, கொம்பிலே தத்தித் திரியும் குரங்குப் படையைக் கொண்டு லங்கையை அடைமதிள்படுத்தினவன்றும் பெருமாளுடைய ப்ரபாவம் அறியாதே §விளக்குவிட்டில் போலே வந்து எதிர்ந்த ¶பகல்போர் அறியாத கத்யோதிகளையெல்லாம் ‘எனக்கு எனக்கு’ என்று இரையாகக் கைக்கொண்ட தீப்தபாவகஸங்காசங்களான திருச்சரங்களையுடையனாய், [2]“வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்” நின்றவன்; (காகுத்தன்)—

[1]4. அ. 9. [2]பெரு. தி. 10. 1. *சங்காவிஷயமான—க. †முன் பாட்டினில்........ உதாஹரித்ததாய், அநிஷ்ட-க. ‡தேவர்களுக்கும் ரிஷிகளுக்குட் கூடியிருக்க—க. குடியிருக்க—வ. §விளக்குவீட்டில் போலே—க. ¶பகல்போது அறியாத—வ.

மாயாவிகளான ராக்ஷஸரும் கூட மோஹிக்கும்படி உத்கர்ஷஸ்வபாவத்தை முன்னிட்டு *நின்றவன். (கடியார் பொழில் அரங்கத்தம்மான்)— ஸூரிகள் முதலாக ஸாத்வஸத்வங்களைக்கொண்டு நித்யஸேவாபராய் நிற்கிற ஸூரிஜனங்களாலே சூழப்பட்ட கோயிலாழ்வாருக்குள்ளே ப்ரஹ்மாதிகள் ஆராதிக்க, ஸர்வஸ்வாமித்வம் தோற்றக் கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய. (அரைச் சிவந்த ஆடையின்மேல்)— [1]"படிச்சோதி யாடை யொடும் பல்கலனாய் நின்பைம்பொற்கடிச் சோதி கலந்ததுவோ" என்னும்படி திகழாநின்ற திருவரை யிலே ஸௌந்தர்யஸாம்ராஜ்யத்தாலே போல வாத்ய மாய் ஸூர்யகிரணங்களிலே வாஸ்தவம் பரந்தாற் போலே †இருக்கிற திருப்பீதாம்பரவிஷயமாக. (சென் றதாம் என் சிந்தனையே)— அநாதிகாலம் அநுசித விஷயங்களிலே ஓடி, அவர்கள் ‡ஆடையிலே கட்டு ண்ட என்சிந்தை இவன் திருவடிகளைப் பற்றின என் றாலும் மீட்கவொண்ணாதபடி திருப்பீதாம்பரத்திலே சென்று துவக்குண்டது. 'என் சிந்தனை சென்றதாம்' என்கையாலே ஆஸ்சர்யம் தோற்றுகிறது. 'சென்றது'- §நான் ப்ரேரிக்கப் போந்ததன்று; விஷயவைலக்ஷண் யத்தாலே ஆக்ருஷ்டமாயிற்று. 2.

இப்படி இரண்டு பாட்டாலே பகவச்சேஷத்வவ்யவ ஸ்தானத்தையும் அந்யசேஷத்வநிவ்ருத்தியையும் அநு ஸந்தித்து, அநந்தரம் சேஷபூதமான சேதநாசேதந

[1] 3. 1. 1. *நின்றவன் காகுத்தன்—க. †இருக்கிற பீதாம்பர-க, ‡அவர்களாளுடையிலே-க; அவர்கள் இடையிலே—வ. §நாம்—க.

வமஹுஷ்ருதிவாசகமான த்ருதீயாக்ஷரம் முதலான த்ருதீயமாமெயாலே மேஷக்வஜ்ஞாநஹீநராயும், விசேஷமில்லாத மேஷக்வஜ்ஞாநமுடையராயும், காசாசிதக மேஷக்வஜ்ஞாநவான்களாயுமுள்ள ஜீவர்களெல்லாம் தந்தாமுடைய ஜ்ஞாநாநுரூபமாக ஷ்ருதிகருமாநுசுமொஹயவியஷ்ருவ்ருத்திகளிலே நிற்கிற நிலையை உதாஹரித்துக் கொண்டு, ஸமவசநாஹவத்தில் தமக்கிடையிலே பெற்றதொரு ஷ்ராவணத்தை சுநாஹமிக்துப் வீதராகிருர்.

மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்
சந்திசெய்யநின்ருன் அரங்கத்தரவினணையான்
அந்திபோல் நிறத்தாடையும் அதன்மேல்
அயனைப் படைத்ததோர் எழில்
உந்திமேலதன்ருே அடியேனுள்ளத்தின்னுயிரே. 3.

மந்தி—ஆண் குரங்குகள், பாய்—(ஒரு கிளையிலிருந்து மற்ருெரு கிளையில் இடைவிடாமல்) பாய்ந்தபடியே யிருப்பதாய், வட—(தமிழுக்கு) வடவெல்லையும், வேங்கடம்—வேங்கடாத்ரி என்னும் பெயரையுடையதுமான, மாமலை—பெரியமலையிலே, வானவர்கள்—முக்தரும் நித்யரும் (தேசத்திற்குத் தக்க சரீரங்களோடு), சந்தி செய்ய நின்ருன்—(புஷ்பங்களைக் கொண்டு) ஆராதிக்க நின்றவனுய், அரங்கத்து—ஸ்ரீரங்கத்திலே, அரவின் அணையான்—ஆதிசேஷனுகிற மெத்தையிலே கண்வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளுடைய, அந்திபோல் நிறத்தாடையும்—செவ்வானம்போன்ற நிறத்தையுடைய பீதாம்பரமும், அதன் மேல், அயனைப்படைத்தது—ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த, ஓர் எழில்—ஒப்பற்ற அழகையுடைய, உந்திமேலதன்ருே—திருநாபி கமலத்தின்மேலல்லவா இருக்கின்றது, அடியேன் உள்ளத்து—அடியேன் மனஸ்ஸில் பிரகாசிக்கிற, இன் உயிர்—இனிதான ஆத்மஸ்வரூபம்.

(மந்திபாய் வடவேங்கடமாமலை)— ஸகலமான ஸம்ஸாரிகளுக்கு நிச்சயமான வாஸஸ்தானம் *நாநா ஸாரங்களையுடைய க்ஷேத்ரங்களைப் புஜிப்பதாக [1]"மதாமதம் சாசாசா மஹேசே" என்கிறபடியே ஒன்றைவிட்டு ஒன்றிலே பாய்ந்து திரிகைக்கு நிலமாய், கலியுகத்தில் ஸாமவதஸூவனையுடைத்தாக ஸ்வராண ஸித்தமாகையாலே ஆழ்வார்கள் அவதரிக்கப்பெற்ற சுமஹ்ஸாஷாசேஷத்திற்கு †உத்தராவதியாயிருந்து ஸ்வராண ப்ரஸித்தமாய், ஈஶ்வரன் தன்னைப் போலே ஸ்வரூபவகாண விஷேதிஷ்டாவங்களால் உண்டான ஈஷ்தத்தை யுடைத்தான திருமலையிலே. (வானவர்கள் சந்திசெய்ய நின்றான்) பரமபதத்திலே கைங்கர்ய ஸாம்ராஜ்யத்திற்கு அபிஷிக்தரான முக்தரும் நித்யரும் சேஷோசித மான தேஹங்களைக்கொண்டு உசிதமான கைங்கர்யத்தைப் பண்ணி, இவர்கள் ஆஶ்ரயிக்கைக்கு உதேஶ்யனாய் நின்றான்.

(அரங்கத்தரவினணையான்)- ஏற்றமுள்ளவளவும் ஏறவேண்டும்படியான திருமலையாழ்வாரும் ஸாசவேஷ ஸாநீயம் என்னும்படி எளிதாகக் கிட்டலாம்படியான கோயிலாழ்வாருக்குள்ளே [2]"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்யும்" வானவர்களுக்குப் ‡படிமாவாய், நிஶ்ஷஜமஷாயாஸமாஸவான தன்னை யாரிக்கைக்கீடான ஜ்ஞாநபலாஸ்கஷ்டத்தை யுடையனாய், ஸாஸிஸாகாஸ§ஶீதளமான திரு

---

[1] கீதை 9. 21. [2] 3. 3. 1. *நாநாரஸாவ்வியிலுள்ள—க.

†உத்தராவதியாயிருந்துள்ள புராணஸித்தமாய்—க.

‡படிமா=ஒப்பு; அதாவது திருஷ்டாந்தம். §சீதளமான—க.

வரவணையிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய (அந்திபோல் நிறத்தாடையும்)-ஆஶ்ரிதருடைய அஜ்ஞாநாந்தகாரத்தைக் கழிக்கவல்ல ஸம்யக்ஜ்ஞாந ஸூர்யோதயத்திற்கு பூர்வஸந்த்யை போலவும், அவர்களுடைய தாபத்ரயங்களைக் கழிக்கைக்கு பஶ்சிம ஸந்த்யை போலவும், *புகர்ந்த நிறத்தையுடைத்தான [1]செவ்வரத்தவுடையாடையும்; இது மேலில் ஆதாரத்தை அவலம்பிக்கைக்கு ஆதாராந்தரத்தை †அபேக்ஷித்தபடி. மேல் ஆதாரமும் ஏதென்ன, (அதன்மேல் அயனைப் படைத்ததோர் எழில் உந்தி)- ஆதாரமான திருப்பீதாம்பரத்திற்கு மேலாய், இதன் நிறத்திற்கு நிகரான சிவந்த தாமரைப் பூவையுடைத்தாய், அதின்மேலே ஸ்ருஷ்டிஸமயத்திலே முற்பட அயோநிஜனான ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்த அத்விதீயமான அழகையுடைத்தான திருவுந்தி. ப்ரஹ்மாவினுடைய ஸ்ரஷ்ட்ருத்வம் சொல்ல, கைமுதிகந்யாயத்தாலே ருத்ரேந்த்ராதிகளுடைய ‡ஸ்ரஷ்ட்ருத்வமும் சொல்லிற்றும். இத்தாலே ப்ரதிவாதிகளுக்கு ஶ்ரிய:பதியை யொழிய காரணாந்தரமும் ப்ராப்யாந்தரமும் இல்லை யென்றதாயிற்று. இங்கு ப்ரஹ்மாவைச் சொன்னது முமுக்ஷுக்களை ஸ்ருஷ்டித்த உபகாரத்திற்கு உதாஹரணமுமாகிறது. (மேலதன்றோ) என்றது இத்திருவுந்தியையே ஆதாரமாகக் கொண்டன்றோ இருக்கிறது என்னவுமாம். §இதனுடைய அநுபவம் இது இட்ட வழக்

[1] தி. மொ. 8. 1. 7. 1 சிவந்தநிறத்தையுடைய ஆடையும்—வ.
* புகர்த்த—க. † அநுபவித்தபடி—க. ‡ ஸ்ரஷ்ட்ருத்வம்—க.
§ இவனுடைய அநுபவமிட்ட வழக்காய்—க.

காயிருக்கிறது என்னவுமாம். (அடியேன் உள்ளத்தின் னுயிரே)- [1]"சூக்ஷ்மாஸம் ஹரெ: ஸ்தூலம் *ஸ்தூலாவம் ச வஷா ஸர" என்கிறபடியே பரமகாருணிககடாக்ஷத் தாலே ஸ்தூலாவஷாஸவு்ருதிவொய முடையேனுன என் னுடைய ஸசேஷாத்ரமான மநஸ்ஸிலே ப்ரகாசிக்கிற ஸ்தூலசித்மான என் ஆத்மஸ்வரூபம். 'உள்ளம்' என்று ஹ்ருதயஸ்ருசெய்த்தைச் சொல்லவுமாம். 'இன் னுயிர்' என்று ஸமவதாநஸவத்திற்கு அநுரூபமாகை யாலே †இனிதான ப்ராணாதிகளைச் சொல்லவுமாம். [2]"ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம் ... ததஜீவநஃ" [3]"மச்சித்தா மத்கதப்ராணாஃ" இத்யாதிகளை இங்கே அநுஸந்திப் பது.

இரண்டாம் ‡பாட்டாலும் மூன்றும் ‡பாட்டாலும் ப்ரஹ்மருத்ராதிகளுடைய §கர்மாதிகாரித்வமும் கர்ம ஸமாராதநாதிகளும் சொல்லித்தாயிற்று. நாலாம் பாட் டாலே ப்ரஹ்மருத்ராதிகள் வரம்கொடுத்து வாழ்வித்த இராவணனை நிராகரித்த வ்ருத்தாந்தத்தாலும் தேவதாந்தர ங்களுடைய க்ஷுத்ரத்வத்தை. [4]"ப்ரஹ்மா ஸ்வயம்பூச் சதுராநநோ வா ருத்ரஸ்த்ரிநேத்ரஃ" இத்யாதிகளிற் படியே அவர்களுடைய அஸ்வதந்த்ரத்த்தையும் அநு ஸந்தித்துக்கொண்டு ப்ரஹ்மாதிகளையெல்லாம் ¶அகம்படி யிலே வைத்து உய்யக்கொண்ட ஸௌசீல்யத்தையை உடைத் தான திருவயிற்றினுடைய $சிறுமை பெருமைகளால்

---

1 [2]கீதா. ஸங். 24. [3]கீதை 10. 9. [4]ரா. ஸு. 51. 45.

*ஸ்தூலாவம் ச—க. †இனித் தான் ப்ராணாதிகளை—க.

‡பாட்டிலும்—வ. §கர்மாதிகாரத்வமும்-க. ¶அகம்படியிலே ஏக தேசத்திலே வைத்துக்கொண்ட—க. ¶அகம்படியிலே—உள்ளே.

$சிறுமை பெருமைகளுண்டான—க. சீர்மை—வ.

உண்டான [illegible]க்கு அடையவளைந்தான் போலே இருக்கிற *உதரபந்தம் நம்முடைய சிறிய †திருவுள்ளத்திற்குள்ளே வெளியிற்போலே இடம்கொண்டு உலாவா நின்றது; இது ஒரு ஆஸ்சர்யம் என்கிறார்.

கீழ் மூன்று பாட்டாலும் ப்ராப்யத்வமும் ப்ராப்தி ஷிதமாய், நாலாம் பாட்டாலே [1]"ந நமேயம் து கஸ்யசித்" என்ற வணங்கலில்லரக்கனைத் தலைசாய்த்து [2]"[illegible] யாதநம் கோரம்" என்கிறபடியே முமுக்ஷுக்களுடைய மநஸ்ஸை அஹங்கார மமகார தூஷிதமாகாதபடி பண்ணிக்கொடுக்கிற சக்ரவர்த்தி திருமகனுடைய சரித்திரத்தை முன்னிட்டு 'நானும் என்னுடையதன்று; மற்றும் என்னுடையதாவன ஒன்றுமில்லை' என்கிற நமஸ்ஸில் அர்த்தத்தை மறைபொருளாக அநுஸந்திக்கிறாராகவுமாம்.

சதிரமாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்(து)
உதிரவோட்டி ஓர் வெங்கணைஉய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமாவண்டுபாட மாமயில்
ஆடரங்கத்தம்மான் திருவயிற்(று)
உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே. 4.

---

[1] ரா. யு. 36. 11 [2] ஸாத்வ. ஸ. * திருவுதரபந்தம்—வ.
† திருவுள்ளத்திற்குள்ளே கண்டுவேயிற்போலே—க.

சதிர - வலிமையுள்ள, மாமதிள்சூழ் - உயர்ந்த மதிள்களாலே சூழப்பட்ட, லங்கைக்கு இறைவன் - லங்கைக்கு அதிபதியான ராவணனுடைய, தலைபத்து உதிரவோட்டி - (முதல் நாள் சண்டையில் வீட்டிற்குப் போகும்படி ஓட்டி மறுநாள்) பத்துத் தலைகளும் சேர்ந்தால்போல் உதிரும்படியாக, ஓர் வெங்கணை - கோபத்தை

(சதிரமாமதிள் சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து உதிர) குலபர்வதங்களைச் *சேர்த்து இசைத்தாற் போலே [1]செறிவும் திண்மையும் உயர்த்தியும் உடைத்தாய், எட்டுத் திக்குகளிலுள்ள திக்பாலர்களுக்கும் எட்டிப் பார்க்கவொண்ணாதிருக்கிற மதிள்களாலே †இத்தவிடம் முறிந்தவிடம் இல்லாதபடி எங்குமொக்க சூழப்பட்டு ஜலதுர்கம் - கிரிதுர்கம் - வநதுர்கங்களாலே துர்கங்களுக்கெல்லாம் ‡உபமானமாம்படி ப்ரஸித்தமான லங்கைக்கு ஈஶ்வரனாய், துர்கபல - ஸைந்யபல - ஐஶ்வர்யபலங்களாலே செருக்கனாய், மால்யவான் அகம்பநன் மாரீசன் முதலான ராக்ஷஸரோடு ஹநுமான் விபீஷணன் முதலான ஸத்த்வ ப்ரக்ருதிகளோடு வாசியற [2]அவிகீதமாகப் பேசப்பட்ட பெருமாள் பெருமையை §அறிந்து வைத்தும் கண்டுமதிகெட்டான்படியே [3]“தேந ஸத்ருஶவதே

[1]செறிவு = நெருக்கம். திண்மை = உறுதி. [2]அவிகீதமாக = அபிப்ராயபேதமில்லாமல் [3]ரா. யு. 26 21.
*சேர்த்திச் சேர்த்தாப்போலே—க. சேர்த்தாற்போலே—வ.
†இத்திடமுறிந்திடமில்லாதபடி—க. ‡மூப்பாம்படி—வ.
§அறிந்துவைத்துக் கண்டுமதி கேட்டானபடியே—க.

உடைய ஒப்பற்ற பாணத்தை, எய்த்தவன் - ப்ரயோகித்தவனும், ஓதவண்ணன் - கடல்போல் ச்யாமளமான திருமேனியையுடையவனும், மதுரமா வண்டு பாட - இனிமையான சிறந்த வண்டுகள் பாட, மாமயில் ஆட - உன்னதங்களான மயில்கள் ஆட, அரங்கத்து அம்மான் - ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரனை பெரியபெருமாளுடைய திருவயிற்று உதரபந்தம் - திருவயிற்றின் மேல் அணியப்பட்ட உதரபந்தம் என்னும் அரைப்பட்டிகை, என்னுள்ளத்துள் நின்று - என் மனதினுள்ளேயும் இருந்து, உலாகின்றது - வியாபிக்கின்றது.

யதி ஜீவிதுமிச்சஸி" என்ற தாய் வாய்ச் சொல்லுக்கே யாதே, [1]"அராக்ஷஸமிமம் லோகம் கர்த்தாஸ்மி நிஶிதைஶ் ஶரை: । ந சேச் சரணமப்யேஷி மாமுபாதாய மைதிலீம்" என்று பெருமாள் அருளிச்செய்துவிட்ட பரம ஹிதமான பாசுரத்தையும் அநாதரித்து *அடைகோட்டைப் பட்டவளவிலும் பூசலுக்குப் புறப்படவிட்ட ஸஹாயரான படை முதலிகள் எல்லாரையும் †படக் கொடுத்து, ‡தான் ஏறிப் பொருதவன்று [2]விஷண்ணாஸ்ய வக்த்ரரான பெருமாள் §சரச்செருக்கு வாட்டி 'நம்மூடனே பொருதும்படி இளைப்பாறி நாளை வா' என்று விட, நாணாதே போய், மண்டோதரி முதலான ||பெண்கள் முகத்திலே விழித்து, தன்னிற் பெரிய தம்பியையும் மகனையும் படக்கொடுத்து, தான் [3]சாவேறாக வந்து ¶ப்ரதிஹதஸகலாஸ்த்ரனான பின்பும் சினம் தீராதே [4]சேவகப்பிச்சு ஏறி நின்ற ராவணனை, $இனி தலையறுக்குமதொழிய வேறொரு பரிஹாரமில்லை' என்று திருவுள்ளம் பற்றி, ஒரு தலைவிழ வேறொரு தலை கிளைக்க முன்பு பண்ணின வித்யுத்ப்ரகாரமன்றிக்கே

[1] ரா யு. 41. 66. [2] ரா. யு. 50. 56. [3] சாவேறு=பகையரசனைச் சூழ்ந்துகாக்கும் படைமீது ஒருமுகமாய்ப் பாய்ந்து ஊடறுத்துச் செல்லமுயன்று, அந்நிலையில் உயிர்துறத்தலையே விரதமாகக் கொண்ட வீரர்தொகுதி. [4] சேவகப்பிச்சு=வீரன் என்னும் இறுமாப்பு

*அடைகோட்டை=முற்றுகையிடப்பட்ட கோட்டை.

*அடைகோட்டடைப்பட்ட—க. †படைக்கொடுத்து—க.
‡தான் நேரில் பொருதவன்று—வ. §ஶௌர்யச்செருக்கு—வ.
||பெண்டுகள் முகத்திலே விழித்தி-க. ¶ப்ரதிஹதஸர்வாஸ்த்ரனுமான—க, $இனித்தான் இவனையழிக்குமதொழிய—வ.

ஒருக்காலே பத்துத் தலையும் *உதிரும்படியாக. (ஓட்டி ஓர் வெங்கணை உய்த்தவன்)- 'தானேபோய் ராவணன் தலை பத்தும் கைக் கொள்ளவேணும்' என்று சின மூடைத்தாய் ஈஷித்யமாய் இருப்பதொரு திருச்சரத்தை தகையாதே ஓடவிட்டு †இரைபோர்ந்த இலக்குப் பெறுகையாலே அத்திருச்சரத்தை உய்யப்பண்ணின வன். சரத்தினுடைய ஆஶுகாரித்வத்தாலும் ராவண னுடைய வெய்ட்த்தாலும் தலைபத்து உதிர்ந்த பின் னும், அவன் உடல் கட்டைப் பனைபோலே சிறிது போது இருந்து நிற்கும்படியாயிருந்தது. 'தலைபத்து உதிர ஓட்டி' என்றது முன்னில் பூசலிலே ராவண னைத் தலை சாய்த்து [1]"ஹஹா நாஜா நாஹி" என்று துரத்தி விட்டபடியாய், 'ஓர் வெங்கணை உய்த்தவன்' என்றது பின்பு அவனுடைய வயாயமாக ஈஷித்யமான அஸ் த்ரத்தை விட்டவன் என்னவுமாம்.

(ஓதவண்ணன்) கண்டவர்களுடைய பாபத்தை யும் தாபத்தையும் ‡கழிக்கவற்றும் ஸமுத்ரம்போலே ஶ்யாமளமான திருமேனியை உடையவன். (மதுர மா வண்டு பாட மாமயிலாடரங்கத்தம்மான்)— ராவணவதம் பண்ணின வீரலக்ஷ்மியுடனே நின்ற அழகைக் கண்டு ப்ரஹ்மாதிகள் ஸ்தோத்ரம் பண்ண, அப்ஸரஸ்ஸுக்கள் ந்ருத்தம் பண்ணினாற்போலே [2]"ஆது நா ஊநாஷு உஹு" என்கிற பெருமாளுடைய

[1] ரா. யு. [2] ரா. யு. 120. 10. * திரும்படியாக—க †இரைபொந்த விளக்குபெருகையாலே—க. வில்லுக்கு—வ. ‡ கழிக்கவைற்றும்—க.

[1]பூமிகைக்கு அநுரூபமாக முக்தரும் [2]நித்யரும் ஸமவாயம் கொண்டு வந்தார்கள் என்னலாம்படி அதிசயங்களாய் [3]ஜ்ஞாநாதிகுணஸாரத்தையுமுடைய ஸேவ்யமான வண்டுகள் [4]காலப்பண்கள் பாட, பாட்டுக்கு அநுரூபமாக குணாதிகங்களான நீலகண்டங்கள் ந்ருத்தம் பண்ண, இக்கீதந்ருத்தங்களாலே [5]லோகோத்தரமான கோயிலாழ்வாருக்குள்ளே ஸுஷுப்தியானபடி தோற்றக் [6]கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய. (திருவயிற்று உதரபந்தம் என் உள்ளத்துள் நின்று உலாகின்றதே) *"தாமோதரம் பஹுமதம்" என்கிறபடியே பஹுமதத்துக்கு மோக்ஷஹேதுவான தாமோதரத்வத்தை வெளியிடா நின்ற திருவயிற்றில் 'திருவுதரபந்தம்' என்று திருநாமத்தையுடைத்தான திருவாபரணம் அதிக்ஷாத்ரனை என்னுடைய சதிராமத்ஸூஷிதமான ஹ்ருதயத்தினுள்ளே அதுவே நிவாஸஸ்தலம் என்னும்படி நின்று அள்வற்ற ஸௌந்தர்ய [7]ப்ரகாசந வ்யாபாரங்களைப் பண்ணா நின்றது. [8]இது திருமந்திரத்திலும் திருமேனியிலும் மத்யத்திலே வரும் அநுபவம். 4.

மேல் இரண்டு பாட்டால் நாராயணஸப்தார்த்தம் முன்னீடாக பெரியபிராட்டியாருடைய [10]நிவாஸத்தால்

---

* [1]ரூபத்தை ரமிக்கைக்கு—வ, [2]நித்யரும் கூடிவந்தார்கள். [3]ஞானாதிகுணவத்தையுடைய—வ. [4]காலமணங்கள்—க. [5]லோகோத்தரமான—வ. [6]கண்வளருகிற—க. [7]ப்ரகாசவ்யாபாரங்களை—க [8]இது திருமேனியிலும் மத்யத்திலே வரும்—க. [9]பாட்டில்—க [10]நிவாஸத்தாலும் நிகரில்லாத திருமார்வையும். [அநுபவிக்கிறார்—க.

[1]பூமிகை = மாறுவேஷம்.

நிகரில்லாத திருமார்வையும் திருக்கழுத்தையும் அநு பவிக்கிறார்:

பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத் தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி என்னுள்புகுந்
கோரமாதவம் செய்தனன் கொல் [தான்
அறியேன் அரங்கத்தம்மான் திரு
வார மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே. 5.

(பாரமாய பழவினை பற்றறுத்து)- *காலதத்வமுள்ளதனையும் ப்ராயஸ்சித்தம் பண்ணினாலும் கழிக்கவொண்ணாதபடி [1]உபசிதமாய்க்கொண்டு, அநாதிகாலம் நடக்கிற ஸாம்ஸாரிக ஸம்பந்தத்தை ஸவாஸநமாக என்னுடன் துவக்கறுத்து; (என்னைத் தன் வாரமாக்கி வைத்தான்)— இப்படி ஸம்பந்தராய், இந்த்ரியகிங்கரராய், தாஸ்யரான ஜந்துக்களை எடுத்துச் சுமந்து [2]தனிசு தீராதே பொலிசை இறுத்துத் திரிகிற என்னை ஸம்ஸாரஸாகரத்திலிருந்து, †ஸ்வாமிகார்யத்திற்கு எல்லை

[1] உபசிதமாய்=சேர்க்கப்பட்டதாய்க்கொண்டு.
[2] தனிசு=கடன்; பொலிசை இறுத்தல்=வட்டிசெலுத்துதல்.

பாரமாய - மிகவும் பாரமாய், பழவினை - அநாதிகாலமாய் ஸம்பாதிக்கப்பட்ட பாபங்களை, பற்று அறுத்து - வேரோடு போக்கி, என்னை, தன்வாரமாக்கி வைத்தான் - தன்னிடத்திலே அன்புடையவனாய்ச் செய்தான். வைத்ததன்றி - இப்படி வைத்ததற்கு மேல், என்னுள் புகுந்தான் - என் மனதில் வந்து புகுந்து கொண்டான்; (இப்படி என்னைப் பெறுகைக்கு) கோரமாதவம் - கடுமையான பெரிய தபஸ், செய்தனன்கொல் - செய்தானோ, அறியேன். அரங்கத்து அம்மான் - ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற ஸர்வஸ்வாமியானவனுடைய, திருவாரமார்பதன்றோ-பிராட்டியையும், ஹாரத்தையுமுடைய திருமார்பன்றோ, அடியேனை, ஆட்கொண்டது - அடிமைகொண்டது. *காலமுள்ளதனையும்—க. †ஸ்வாமிகார்யத்திற்கு-வ.

நிலமாய், *ஸத்ரிஹோத்ரனை தனனுடைய அங்கவாஸஸ்ரீகளைப் போலே அந்யர்க்குக் கூறு இல்லாதபடி பண்ணி, ஸாம்ராஜ்யத்தைத் தந்து மேலொருக்காலத்திலும் மாறாதபடி வைத்தான்.

(வைத்ததன்றி என்னுள் புகுந்தான்)-அநந்யனுக்கி வைத்தவளவன்றிக்கே, முன்பு ப்ரயோஜநாந்தரபரவனான என்னுடைய ஹ்ருதயத்திலே, அநந்யப்ரயோஜநாஸ்வவிஷயமாய்க்கொண்டு,[1]தஸ்யுக்களால் அபிபூதமான தன் படைவீட்டிலே தஸ்யுக்களை ஓட்டிப் புகுருமாப் போலே புகுந்தான். (கோரமாதவம் செய்தனன் கொல் அறியேன்)— அநாதிகாலம் இழந்த வஸ்துவைப் பெறுகைக்கு அநுரூபனான ஈஸ்வரன் தானே அவதாரக்ஷேத்ரமான திருவயோத்யையையும் விட்டு, ஆஸ்ரிதன் இருப்பிடமான லங்கையிலும் போகாதே, [2]'கங்கையில் புனிதமானகாவிரி' நடுவுபாட்டிலே அதிகோரமாய் அதிஸஹத்தாயிருப்பதொரு தபஸ்ஸைப் பண்ணினனோ அறிகிலேன். இது அதிவாதமாகமாக உத்ப்ரேக்ஷித்தபடி. ஸர்வஸம்ஹாரநிவர்த்தகமாய் †அஸோஹமாயிருப்பதொரு 'மோக்ஷயிஷ்யாமி' என்கிற ஸங்கல்பரூபமான தபஸ்ஸைப் ‡பண்ணினன் என்று தாத்பர்யம். அங்ஙனன்றிக்கே இப்பெரிய பேறு பெறுகைக்கு அயோக்யனான நான் இதற்கு அநுரூபமாய் அஸோஹமாய் இருப்பதொரு மஹாதபஸ்ஸைப் பண்ணிப்

[1] தஸ்யு=திருடர். படைவீடு=ராஜதானி. [2] திருமாலை 23.

*ஸாந்த்ரபோக்யனை—வ

†ஆமோக்ஷமாயிருப்பது—ம. ‡பண்ணினு என்று—வ.

பெற்றேனல்லேன். இதற்கு [1]"அபி நிஹிதஸௌஸ்ஸி ஸௌஸ்ஸம் யத:" என்றும், [2]"தவ ஸௌஸ்ஸகாரிஷி யாபீடிகே" *என்றும் சொல்லுகிறவித்தொழிய, இப்போது நானும் பிறரும் அறியலாவது எனக்கு ஒரு ப்ரவ்ருத்தி காண்கிறிலேன் என்று ஈஸ்வரனுடைய இரக்கத்தின் ப்ரகாரத்திலே தாத்பர்யமாகவுமாம்.

இப்படி க்ஷேத்ரஜ்ஞனை என்திறத்தில் இரங்கினவன் தான் தேறவொண்ணாத திருவில்லாத் தேவரில் ஒருவனல்லன்; [3]"அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல்மங்கை உறைமார்பன்" என்னுமிடத்தையும், ஸௌஹார்த்தனை தமக்கு ஸ்ரீயானே கௌஸ்துபவ்ருத்திஸம் வஹதி என்னுமிடத்தையும், திறம்பாத சிந்தைக்கு சிக்கெனக் காட்டிக் கொடுக்கிறார்: (அரங்கத்தம்மான் திருவாரமார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே). ஸர்வருக்கும் அநுபவிக்கலாம்படி ஸந்நிஹிதனாய்க்கொண்டு †கோயில்வாழ்வாருக்குள்ளே கண்வளர்ந்தருளுகிற ஸௌந்தர்யத்தோடுவிரோதியாத ஸ்வாபாவிகமான ஸௌந்தர்யத்தையுடையரான பெரிய பெருமாளுடைய ஸௌந்தர்யத்திற்கு லக்ஷணமான திருவையும், அழகுவெள்ளத்திற்கு அணைகோலினாற்போலே இருக்கிற ஹாரத்தையும் உடைத்தான திருமார்வன்றோ ‡ஸூஹாவிகஸௌஷ்ப ஸாநுஸ்வாவலிகளாய், அதற்கு மேலே

[1] வரத. ஸ்த. 91. [2] ஸ்ரீரங்க ஸ்த 102. [3] 6. 10. 10
* என்றும் சொல்லுகிறபடியே — க. என்றுமித்தொழிய — அ.
† கோயில்வாழ்வார்க்குள்ளே நின்றலப்ப — க. ‡ ஸூஹாவிகஸௌஷ்ப ஸாநுஸவ — க

[1]'ஜ்ஞாநாநந்தைகஸ்வரூபம்' ஆன என்னை ஸ்வரூபாநுரூபமான ஸேஷத்வாதிஸேஷவ்ருத்தியிலே மூட்டி, அதற்கு இலக்காய் நின்றது.

இப்பாட்டில் பதங்களினடையே நாராயணஸப்தத்தில் விவக்ஷிதமான ஈஸிதவ்யத்வமும், ஸேஷித்வமும், உள்ளும்புறம்பும் வ்யாபித்து நிற்கும்படியும், நித்யஸ்ரீயும், உபாயத்திற்குப் ப்ரதானமான ஸௌலப்யமும், ப்ராப்யத்திற்குப் ப்ரதானமான ஸ்வாமித்வமும், ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீயஃபதித்வமும், ஸத்ருஷணாதிஸாதநங்களாக ஸாதநங்களை தரிக்கிற போக்ய ஹேதுமான விரோதிநிரஸநமும், *நாராயணாத்யமான ஜீவாத்மஸ்வரூபமும், ஜீவாத்மஸ்வரூபமாகப் ப்ராப்யமாக்கப்படும் கைங்கர்யமும் அநுஸந்தேயம். 5.

"துண்டவெண்பிறையன்" இத்யாதி. கீழ்ப்பாட்டில் கைங்கர்யப்ராப்தியான தம்முடைய கைங்கர்யவிரோதிகளான நிருபாதிகஸ்வாமித்வாஜ்ஞாநாதிகங்களை யெல்லாம் நிராகரித்தபடியை அருளிச்செய்தார். இப்பாட்டில் ஸௌலப்யப்ராப்திகளான ஸௌலப்யவிரோதியான ஸிக்ஷாதிகளையைக் கழிக்கும்படியை உதாஹரிக்கிறார்.

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில் சூழ்
அரங்கநகர் மேயவப்பன்

[1]ஈ. கி. 4.12. *நாசப்தார்த்தமான—க.

அண்டரண்ட பகிரண்டத்தொரு
மாநிலம் எழுமால்வரை முற்றும் [டதே. 6.
உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக்கொண்

(துண்டவெண்பிறையன் துயர் தீர்த்தவன்)—
*ஈஶ்வரன் என்னும் பேரைச் சுமந்த தனக்கும் பூர்ணத்வம் இல்லை என்கைக்கு ஜ்ஞாபகம் போலே ஶகலரூபமாய்க் கொண்டு ப்ரகாசிக்கிற சந்த்ரகலையைத் தரிக்கிற ருத்ரன் ப்ரஹ்மாவினுடைய புத்ரனாய் வைத்து, பிதாவின் திறத்திலே அபராதம்பண்ணி, அத்தாலே †மஹாபாதகனாய், 'இப்பாதகத்தைத்தீர்க்கவல்லாரார்' என்று காகழிதகவாமனாய்க்

---

*ஈச்வரன் என்று பேரைச்சுமந்ததனக்கு பூர்ணத்வமில்லை—க.
†மஹாபாதகனாய்—வ.

துண்ட - கலாமாத்ரமாய், வெண் - வெளுப்பாய் ப்ரகாசிக்கிற பிறையன் - சந்திரகலையையுடைய ருத்ரனின், துயர்தீர்த்தவன் - (கையில் கபாலத்தோடு இருக்க வேண்டும்படியான சாபத்தினாலுண்டான) துக்கத்தைத் தீர்த்தவனும், அம்-அழகிய, சிறைய-சிறகுகளை உடைய, வண்டுவாழ் - வண்டுகள் வாழும், பொழில் சூழ் - சோலைகள் சூழ்ந்த, அரங்கநகர்மேய - ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுகிற அப்பன் - ஸர்வலோகபிதாவுமான பெரியபெருமாளுடைய, அண்டர் - ப்ரஹ்மாண்டத்திற்குள்ளே வஸிக்கும் ஸகலசேதனர்களையும், அண்டம் - எல்லா அண்டங்களையும், பகிரண்டம் - அண்டங்களுக்கு வெளிப்பட்ட அண்டாவாணங்களையும், ஒருமாநிலம் - ஒப்பற்று விசாலமான பூமியையும், எழுமால் வரை - எழுகுலபர்வதங்களையும், முற்றும் - ஒன்று விடாதபடி, உண்ட - அமுதுசெய்த, கண்டம் கண்டீர் - திருக்கழுத்தன்றோ, அடியேனை உய்யக்கொண்டது - (தன் ஸ்வரூபத்தை உணர்ந்த) என்னை உஜ்ஜீவிக்கும்படி செய்தது.

கொண்டு *திரிந்து, ஓரளவிலே கெடுமரக்கலம் கரை சேர்ந்தாற்போலே காருணிகனான †ஸர்வேச்வரனே வந்து கிட்டி, [1]"என்னெந்தாய் சாபம் தீர்" என்ன, இவனுடைய சாபத்தைத் தீர்க்கவல்லவன். இத்தால் 'ஈச்வரன் என்று பேருடைய ருத்ரன் கர்மவச்யன்' என்னுமிடமும், தன்னைத் தான் ரக்ஷித்துக்கொள்ள மாட்டாத இவன் வேறு ருத்தருக்கு நிரபேக்ஷரக்ஷகனாகமாட்டான்' என்னுமிடமும், 'ஸர்வேச்வரனே ஸர்வாநிஷ்டநிவர்த்தகன்' என்னுமிடமும் சொல்லிற்றாயிற்று.

(அஞ்சிறைய வண்டு வாழ் பொழில் சூழ் அரங்க நகர் மேய அப்பன்)— ஆச்ரிதருடையார் அபேக்ஷித்தால் அவர்களுக்கு ஸம்ச்லேஷமும் பண்ணுகைக்கும், [2]"மாசின் மலரடிக்கீழ்" அவர்களைச் சேர்க்கைக்கும் ஹேதுவான மதிக்கு ஸாதநங்களாய், ஸுந்தரங்களான சிறகுகளையுடைத்தான வண்டுகள் ஸஹிதஹோமத்தோடே வாழ்கிற உத்யாநங்களாலே சூழப்பட்ட ஸ்ரீரங்கநகரத்திலே நித்யவாஸம் பண்ணுகிற ஸர்வலோகபிதாவானவன். இத்தால் காரணபூதனாய், கரணகளேபரங்களைக் கொடுத்து உபகரித்தவன் கண்ணுக்கிலக்காய் வந்து கண்வளர்ந்து, கரணங்கள் பட்டி புகுராதபடி காக்கிற உபகாராதிசயத்தை ‡உதாஹரித்ததாகிறது. [3]"நராஜ்ஜாதாநி தத்வாநி" இத்யாதிகளின் அர்த்தமும் இங்கே அநுஸந்தேயம்.

---

[1] திரு. மொ. 1. 5. 8. [2] திரு. வி. 54. [3] நாரத. கல். 1. 34.

* திரிந்தோரளவிலே-க. திரிந்ததோரளவிலே-வ. †ஸர்வேச்வரனைக் கண்டு என்னெந்தாயென் சாபம்—க. ‡உதாஹரிக்கிறதாகிறது-க.

காரணாவஸ்தையில் 'எல்லாக் கார்யங்களையும் தன்பக்கலிலே உபஸம்ஹரித்து, பின்பு *ஸ்ருஷ்டிக்கும்படிக்கு உதாஹரணமாக [1]"வெற்றிப் போர்க்கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி உய்யக்கொண்ட" உபகாரத்தைக் காட்டி, [1]"நெற்றிமேல் கண்ணனும் நான்முகனும்' முதலாக [1]"எம்பெருமான் உண்டு உமிழ்ந்த எச்சில் தேவரல்லாதார் தாம் உளரே" என்னும் அர்த்தத்தைப் பேசிக்கொண்டு, தம்மை இப்போதும் ஸம்ஸாரார்ணவம் விழுங்காதபடி உய்யக்கொண்டபடியை உபபாதிக்கிறார்: (அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலம் எழுமால்வரை முற்றும் உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக்கொண்டதே). ஸப்தாம்புதிகளான த்வீபாந்தரங்களையும், அண்டங்கள் தன்னையும், ஸப்தாவரணங்களையும், அண்டங்களுக்குள்ளே பஞ்சாஶத்கோடிவிஸ்தீர்ணமான மஹாப்ருதிவியாலும் குலபர்வதங்களாலும் உபலக்ஷிதங்களான ஸர்வகார்யங்களையும் எல்லாம் திருவயிற்றிலே வைத்து ரக்ஷிக்கைக்காக விழுங்கின திருக்கழுத்துக் கண்டீர் ஸ்வரூபத்தை †உணர்ந்த என்னை ஸ்வாநுபவத்தாலே உஜ்ஜீவிப்பித்தது. அண்டாதிகளைப் பற்றச் சிறியவான குலபர்வதாதிகளைப் பிரியப் பேசுகையாலே, அவ்வளவு விழுங்குகையும் ‡ஆஶ்சர்யம் அன்று என்று தோன்றுகிறது. 6.

---

[1] தி. மொ. 11. 6. 3, 2. *ஸ்ருஷ்டிக்கும்படி உதாஹரண—க.

2 நெற்றிமேல் கண்ணனவன் முதலாக நான்முகனும்.—க.

†உணர்த்த என்னை ஸ்வாநுபவத்தாலே உஜ்ஜீவிப்பித்து, அண்டாதிகளைப் பற்றி சிறியவன் குலபர்வதாதிகளை—க.

‡ஆச்சர்யம் என்று தோன்றுகிறது—க.

மேல் *நாலுபாட்டாலே [illegible]யில் ப்ரார்த்தநீயமான கைங்கர்யத்திற்குப் †ப்ரஸ்தாவகமான அநுபவம் தம்மை இப்போது பரவசமாக்கினபடியைப் பேசுகிறார். ‡அதில் 'கையினார்' என்கிற பாட்டில் ஆழ்வார்களோடு $பொருந்தின திருக்கையை அவலம்பநமாகக் கொண்டு ¶திருமுடியளவும் சென்று மீண்டசிந்தையை [1]தூமுறுவல் தொண்டைவாய்ப்பிரானுடைய "கோலந்திரள் பவளக்கொழுந்துண்டம் கொல்" என்னும்படியான திருப்பவளத்தில் அழகு தன் வசமாக்கிற்று என்கிறார்.

கையினார் சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் துளபவிரையார்கமழ் நீண்முடி எம் [னார்
ஐயனார் அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாய
செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே. 7.

(கையின் ஆர் சுரிசங்கு அனல் ஆழியர்)— திருக்கைக்கு ஆயுதமாகைக்கும் ஆபரணமாகைக்கும் போரும் என்னும்படி ஆர்ந்த ஸந்நிவேஶத்தை யுடைத்தாய், ||வலம்புரியான வடிவாலே ப்ரணவஸந்நிவேஶமாய், ஶுப்ரஸுகமயமாய், நிரதிஶயாநந்தஹேதுவான

[1]7. 7. 3. *நாலுபாட்டாலே ப்ரார்த்தநீயமான—க.
†ப்ரஸாயகமான—க; ப்ரதாநமான அநுபவம் தம்மைப்பரவசமாக்கின—வ. ‡'அதில் கையினார்..........என்கிறார்': இது பாசுரத்திற்குப் பிறகு அச்சிடப்பட்டிருக்கிறது—க. §பொருந்தும்—க. $திருமுடியளவுசென்று—க. ¶அவ்வலம்புரியான—க.

கையின் - திருக்கைகளிலே, ஆர் - அழகுநிறைந்து, சுரி- வலம்புரியாயிருக்கும், சங்கு - பாஞ்சஜந்யத்தையும், அனல் ஆழியர்- (சத்ருக்கள் மீது) அக்னியைக் கக்கும் சக்ரத்தையும் ஏந்தின

ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், மந்த்ரமூர்த்தியாய், *மநஸ்தத்த்வாபிமாநியான திருவாழியாழ்வானையும் உடையராய்; இத்தால் 1மந்த்ரத்தையும் மநஸ்ஸையும் அநுகூலசிந்தைக்கு அநுகுணமாக்கவல்ல உபகரணங்களை †யுடையவர் என்றதாயிற்று. இவ்வாயுதாழ்வார்கள் 2பெரியபெருமாளுடைய திருக்கைமலர்களில் ஒதுங்கிக்கிடந்து, 2பெருமாள் திருமேனியிலே தோன்றிநிற்பர்கள். (நீள்வரைபோல் மெய்யனார்)— ஸ்வரூபம்போலே ஸூக்ஷ்மத்ருஷ்டிகள் காணுமளவன்றிக்கே, மாம்ஸசக்ஷுஸ்ஸுக்களும் காணலாம்படி ‡மலை இலக்கான திருமேனியை

*மநஸ்ஸத்வாபிமாநியான திருவாழியாழ்வானையுடையராய்—க.
†உடையார்—க. ‡மலையிற்காண—வ.

1சப்தப்ரஹ்மமயமான பாஞ்சஜந்யம் மந்திரத்தையும், மனஸ்தத்வாபிமானியான சக்ரம் மனஸ்ஸையும் அநுகூலமாக்கும் என்று கருத்து.

2'பெரியபெருமாள்' என்று ஸ்ரீரங்கத்தில் பள்ளிகொண்டிருக்கும் மூலவருக்கும், 'பெருமாள்' அல்லது 'நம்பெருமாள்' என்று உத்ஸவருக்கும் திருநாமங்களாக வழங்கிவருகின்றன.

வரும், நீள்வரைபோல்-உயர்ந்தமலைபோன்ற, மெய்யினார் - திருமேனியையுடையவரும், துளப-திருத்துழாயினுடைய, விரை-வாஸனை, ஆர் - பூர்ணமாகும்படியாக, கமழ் - வாஸனைகமழ்கின்ற, நீள்முடி - உயர்ந்த கிரீடத்தையுடைய, எம்ஐயனார் - ஸர்வலோகபிதாவானவரும், அணி அரங்கனார் - (இரண்டுவிபூதிக்கும்) ஆபரணம் போன்ற ஸ்ரீரங்கவிமானத்தை சயனஸ்தானமாக உடையவரும், அரவின் அணைமிசைமேய - ஆதிசேஷனாகிற திருப்பள்ளியின்மேல் கண்வளர்ந்தருளுகிற, மாயனார் - ஆச்சர்யச் செய்கைகளை உடையவருமான பெரியபெருமாளுடைய, செய்யவாய் - சிவந்தவாயானது, என்னைச் சிந்தை கவர்ந்ததுவே - என் சிந்தையைப் பறித்துக்கொண்டது. ஐயோ - ஆச்சரியம்-

உடையவர். (துளபவிரையார் கமழ் நீள்முடி எம் ஐயனார்)- ஸௌரப்யஸ்தபகமான திருத்துழாயின் பரிமளத்தைப் பரிபூர்ணமாக்கும்படி கமழ்ந்து, விலக்ஷண ஆதிராஜ்யவ்யஞ்ஜகமான திவ்யகிரீடத்தையுடைய ஸர்வலோகபிதாவானவர். (அணி அரங்கனார்)— வாத்ஸல்யஸௌசீல்யாதிகளைக் காட்டில் ஸௌந்தர்யத்தாலே ஆஶ்ரிதர்க்கு *ஹ்ருத்யமானபடியாலே விபூதி இரண்டுக்கும் ஏகாபரணம் என்னலாய், ஸௌஹார்த்யம் உண்டாம்படியான ஸ்ரீரங்கவிமானத்தை ஸ்தானமாக உடையவர். †அணிமையாலே 'அணியரங்கனார்' என்கிறதாகவுமாம். (அரவினணை மிசைமேயமாயனார்)— தம்முடைய ஜ்ஞானபலங்கள் வடிவுகொண்டாற்போலே இருக்கிற திருவநந்தாழ்வானாகிற ஸுகஸ்பர்ஶதிவ்யபர்யங்கத்தின்மேலே ‡அளவறத் தேங்கின அம்ருததடாகம் போலே ஆஶ்ரிதர்க்கு அநுபவிக்கலாய், [1]"விஜ்ஞாநிநோ ஜ்ஞாநம் உதந்வதி ஶயாந:" என்னும்படி ஸதாஸ்வாத்யரான வருடைய (செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை கவர்ந்ததுவே)-[2]"வாலியதோர் கனிகொல்" என்னலாம்படியான வர்ணஸௌந்தர்யாதிகளை உடைத்தாய் [3]"வைய மேழும் உள்ளே காணலாம்"படியானசெய்யவாய் என் சிந்தையைப் பறித்துக் கொண்டது. 'ஐயோ' என்றது ஆஶ்சர்யத்தையாதல், §அநுபவித்து ஆற்ற

---

[1] ஸ்ரீரங்க. ஸ்தவ. 1. 8. [2] 7. 7. 3. [3] *ஹ்ருதயங்கமானபடியாலே—வ. †அணுமை—க. (= ஸமீபம்). ‡அளவறத் தேங்கின-க. அளவாகத்தேங்கின—வ. §அநுபவித்து அரிதான-க.

அரிதானபடியையாதல், அநுபவரஸத்தையாதல்காட்டுகிறது.

7

*தம்மை [1]"ஜிதம் தெ வுண்டரீகாக்ஷ" †இத்யாதிகளிற்படியே தோற்பித்துத் திருவடிகளிலே ‡விழப்பண்ணி, மேலேமேலே அநுபவத்தை உண்டாக்கின தாமரைக்கண்களுக்குத் தாம் அற்றுத் தீர்ந்தபடியை ஆஶ்ரிதவிரோதிநிராகரணவ்ருத்தாந்தபூர்வகமாக அநுபவிக்கிறார்.

பரியனாகிவந்த அவுணனுடல் கீண்ட அமரர்க்கு
அரிய ஆதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்துக்
கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து
செவ்வரியோடி நீண்ட அப்
பெரியவாயகண்கள் என்னைப் பேதைமைசெய்தன [வே. 8.

[1]ஜிதந்தே—1. *'பரியனாகி இத்யாதி' என்று அதிகம்—க. †இத்யாதிகளிற்படியை—க ‡விழப்பண்ணிமேலே அநுபவ—க.

பரியனாகி - (வரபலத்தாலே) பருத்தசரீரத்தையுடையனாய், வந்த - எதிர்த்துவந்த, அவுணன் - அஸுரனான ஹிரண்யகசிபுவினுடைய, உடல் கீண்ட - சரீரத்தைக் கிழித்துப்போட்டவனும், அமரர்க்கு - தேவதைகளுக்கு, அரிய - (ப்ராஹ்லாதனைப்போல் அணுகவும் அனுபவிக்கவும்) அரியனுமான, அரங்கத்து அமலன் முகத்து - ஸ்ரீரங்கத்திலே கண்வளர்ந்தருளி, (பிறருடைய தோஷத்தையெல்லாம் போக்குவதனாலே தானும்) தோஷமற்றவனான பெரியபெருமாளுடைய திருமுகத்திலே, கரியவாகி - (கருவிழிகளால்) கறுத்து, புடைபரந்து - விசாலமாய் மலர்ந்து, மிளிர்ந்து - சலித்து உல்லாஸத்தை யடைந்து, செவ்வரி ஓடி - செவ்வரிபடர்ந்து, நீண்ட - காதளவும் நீண்டு, அப்பெரியவாய-(சாஸ்த்ரங்கொண்டு அறியவேண்டிய) பெருமையையும் ஆநந்தத்தின் மிகுதியையும் உடைய, கண்கள் - திருக்கண்கள், என்னைப் பேதைமை செய்தனவே - (இவ்வனுபவத்திலே அமிழ்ந்த) என்னை மற்றொன்றுக்கு அநர்ஹனாய்ச்செய்துவிட்டன.

(பரியனாகி வந்த அவுணன் உடல் கீண்ட)- ஸர்வ லோகத்திலுமுள்ள தமஸ்ஸெல்லாம் திரண்டு ஒரு வடிவு கொண்டாற்போலே அதிஸ்தூலனாய் மஹாமேரு நடந்தாற்போலே எதிர்த்து வந்த [1]“திரண்டதோள் இரணியன் சினம் கொள் ஆகம் ஒன்றையும்” ஒரு வாழைமடலைக் கிழிக்குமாப் போலே ‘இரண்டு கூறு செய்த’ வனாய். (அமரர்க்கு அரிய ஆதிப்பிரான்)— தன்னாலே ஸ்ருஷ்டருமாய் உபக்ருதருமான *தேவர்கள் தான் காரணபூதனாய் உபகாரகனாய் நிற்கிற நிலையறிய மாட்டாமையாலே, அவர்களுக்குப் †பிரஹ்லாதன் அணுகி அநுபவித்தாற் போலே அணுகவும் அநுபவிக்கவும் அரியனாயிருக்கிற (அரங்கத்து அமலன் முகத்து)- ‡ஹேயாகாரமான ஸம்ஸாரத்திற்குள்ளே கோயிலாழ்வாருடனே எழுந்தருளிவந்து [2]“அணியார் பொழில் சூழ் $அரங்கநகர் அப்பா துணியேன் இனி நின்னருளல்லது எனக்கே” என்று இருப்பார், தம்முடைய திருவடிகளை §யடைந்து அருள்சூடி உய்யும்படி அவர்களுடைய [3]ஐயப்பாடுமுதலான ஹேயங்களை அறுத்துத்தோன்றும் அழகையுடையரானபெரியபெருமானுடைய [4]“கோளிழைத் தாமரை” இத்யாதிகளாலே பேசப்பட்ட பேரழகையுடைத்தாய், சந்திரனும் தாமரையும்ஒன்றினாற்போலே இருக்கிற திருமுகத்தில் (கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட

---

[1] திருச்ச. வி. 62. [2] தி. மொ. 11. 8. 8. [3] ஐயப்பாடு = ஸந்தேஹம். [4] 7. 7. 8. *தேவர்கள் தங்களுக்கு—வ †ப்ரஹ்லாதன் அநுதினம் அநுபவித்தாற்போலே—க. ‡ஹேயகரமான—க; ஹேயாகாரமான—வ. $அரங்கநகர்மேயவப்பா—க. §அடைந்து அடி சூடி-க.

அப்பெரியவாய கண்கள்)— நிகரில்லாத நீலரத்னம் போலே இருக்கிற [1]தாரகையின் நிறத்தாலே நீலோத்பலவர்ணங்களாய், ஆஶ்ரிதஸம்ஶ்லேஷப்ரீதியாலே அன்று அலர்ந்த தாமரைப்பூப் போலே அதிவிகஸிதங்களாய் *ஆஸந்நரானாரெல்லார்பக்கலிலும் ஆதரம் தோன்றும்படியான உல்லாஸத்தையுடையவையாய், அநந்யர் பக்கல் †அநுராகத்திற்குக் கீற்றெடுக்கலாம்படியான சிவந்த வரிகளாலே வ்யாப்தங்களாய், ‡ஸ்வாபாவிகங்களான ஆயாமவிஸ்தாரங்களையுடையவையான திருக்கண்கள். 'அப்பெரிய' என்றதற்கு இப்போது காண்கிறவளவன்றிக்கே, ஸாஸ்வதமாய் அநவதிகமான ஸௌந்தர்யாதிஶயத்தையும் ஆஶ்ரிதவாத்ஸல்யத்தையுமுடைய என்று தாத்பர்யமாகவுமாம். (என்னைப் பேதைமை செய்தனவே)— இவ்வநுபவரஸத்திலே $அமிழ்ந்த என்னை அல்லாததொரு ஜ்ஞாநாநுஷ்டாநங்களுக்கு அநர்ஹனும்படி பண்ணிற்றன. 8.

§அவயவஶோபைகளிலே ஆழங்கால்பட்ட தம்முடைய நெஞ்சு வருந்தி, எங்கும் வ்யாபித்து ஸர்வாவயவஶோபைகளோடுங்கூடின ஸமுதாயஶோபையாலே வஶீக்ருதமாய் நித்ராநுபவஸஜ்ஜையாலே முன் பெற்ற தாய் நினைத்திருந்த ஸத்தையை இழந்தது என்கிறார்.

---

[1] தாரகை—கருவிழி. *ஆஸந்நரெல்லார்—க. (=ஸமீபத்திலுள்ளார்) †அநுராகத்துக்கீற்றெடுக்க—க. ‡ஸ்வபாவஸித்தங்களாய் நவாயாமவிஸ்தாரங்களையுடையவான—க. $இழிந்த—வ.
§ஆலமாமரத்தில் 'இத்யாதி' என்று அதிகம்—க.

ஆலமாமரத்தினிலைமேல் ஒரு பாலகனாய்
ஞாலமேழுமுண்டான் அரங்கத்தரவினணையான்
கோலமாமணி யாரமும் முத்துத்தாமமும்
முடிவில்லதோர் எழில் [யே. 9.
நீலமேனி ஐயோ நிறைகொண்டது என்நெஞ்சினை

(ஆலமாமரத்தின் இலைமேல் ஒருபாலகனாய்)— ஓர் ஸ்வாஞாரவுத்யத்திலே, [1]"ஆலன்று வேலை நீர் உள்ளதோ விண்ணதோ மண்ணதோ" என்று அறிய வரிதாய், ஸநஞுமாவமாய் இருப்பதொரு வடவ்ருக்ஷத்தில் *ஓரிலையிலே தாயும் தந்தையும் இல்லாததொரு தனிக்குழவியாய், (ஞாலம் ஏழும் உண்டான்)—அடுக்குக் குலையாமல் மார்க்கண்டேயன் காணும்படி ஸர்வ லோகங்களையும் திருவயிற்றிலே வைத்தவன். (அரங்கத்து அரவினணையான்)— ஊுயகாலத்திலே வாலுனாய்க்கொண்டு ஆலிலைமேலே கண்வளர்ந்தருளுகிற

[1] 1 அ. 69. *ஒருயிலையிலே—க.

ஆலமாமரத்தின் இலைமேல்- ஓர்பெரிய ஆலமரத்தின் ஒரு இலைமேல், ஒருபாலகனாய் - (தாயும் தந்தையுமற்ற) தனிக்குழந்தையாயும், ஞாலமேழும் - ஏழுலோகங்களையும், உண்டான் - வயிற்றில் வைத்தவனாயும், அரங்கத்து அரவினணையான் - ஸ்ரீரங்கத்தில் திருவநந்தாழ்வானாகிற திருப்பள்ளிமெத்தையில் கண்வளர்ந்தருளுகிறவனாயும் இருக்கிற பெரியபெருமானுடைய, கோல- அழகியதும், மா- பெரியதும், மணியாரமும் - ரத்னங்கள் இழைத்தஹாரமும், முத்துத் தாமமும் - முத்துமாலைகளும், முடிவு இல்லது - அளவற்ற, ஓர் எழில் - ஒப்பற்ற அழகையுடைய, நீலமேனி - மேகம் போல் ச்யாமளமான திருமேனி, என் நெஞ்சினை - என்மனதையும் கூட, நிறைகொண்டது—அடக்கத்தைக்கொள்ளை கொண்டது. ஐயோ— ஆச்சர்யம்.

போதோடு, ஸர்வகாலத்திலும் கோயிலாழ்வாருக்குள்ளே ஸூரிகளுக்கெல்லாம் தலைவரான திருவநந்தாழ்வான்மேலே "உலகுக்கோர் தனியப்பன்" என்னும் படி தன் ப்ரஜைகளான †வ்யூஹாதிகள் ஆராதிக்கக் கண்வளர்ந்தருளுகிற போதோடு வாசி யற காரணத்வ ரக்ஷகத்வாதிகள் காணலாம்படியாயிருக்கிற பெரியபெருமாளுடைய (கோலமாமணியாரமும்)— நாச்சியாருக்குக் கோயில் கட்டணமாயிருக்கிற திருமார்வுக்கு ஒரு ‡ரத்நப்ராகாரம் போலே ஸ்நிக்தமாய், ஸுஸ்பர்சத்தாய், ஸ்வாபூர்வமான திருவாரமும், (முத்துத்தாமமும்)— $சன்னவீரமாயும், §ஏகாவளியாயும், த்ரிஸரமாயும், §பஞ்சஸரமாயுமுள்ள திருமுத்துவடங்களும் (முடிவில்லதோர் எழில் நீலமேனி)- இவைதனக்கும் அதிசயகரமாய், அநந்தமாய், அத்விதீயமான ஆபிரூப்யத்தை யுடைத்தாய், காலமேகம் போலே ஸ்யாமளமான திருமேனியும்; ஆபரணங்களுக்கு முடிவில்லதோர் எழிலை உண்டாக்கும்படியான நீலமேனி என்னவுமாம். (ஐயோ நிறை கொண்டது என் நெஞ்சினையே)— *தனித்தனியே திவ்யாவயவங்களை அநுபவித்த என் நெஞ்சை ஸமுதாயாநுபவத்தாலே முன்புற்ற ப்ரத்யேகாநுபவஜநிதமான ஸாம்ஸ்பர்ஶ்யத்தைக்கழித்து, இப்ப்ரத்யேகாநுபவத்திற்கு விச்சேதம்

[1]8 1. 11. †ப்ரஹ்மாதிகளாயிருக்க—க.
‡ரத்னப்ரகாரம் போலே—க. §ஏகாவலியாயும்—வ. §பஞ்சஸரமாயுமுள்ளவல்லதிருமுத்து-க. *தனியே—க. ஏகவாளி=ஒற்றை வடமான ஹாரம்; பஞ்சஸரம்=ஐந்துவடமானது.
$சன்னவீரம்= த்ரிஸரம்=மூன்றுவடமானது;

வரில் செய்வதென் என்கிற ஸந்தேஹத்தாலே [1]"பிரி
வின்றி ஆயிரம் பல்லாண்டு" என்று நித்யமங்களாசாஸ
நம்பண்ணிற்று. 9.

†இவ்வாழ்வார் 'அடியேன்' என்னுமதொழிய
இப்ரபந்தம் தலைக்கட்டுகிறவளவிலும் தம்முடைய
பேரும் ஊரும் பேச மறக்கும்படி தாம்பெற்ற அநுப
வத்திற்குப் பெரிய பெருமாள் இனி ஒரு விச்சேதம்
வாராதபடி பண்ணினபடியைக்கண்டு, தம்முடைய ஆத்மா
வயியான ஸநந்யாநுபவத்தை முக்தனுடைய
ஸாமாநத்தின்படியிலே பாடி, ஸநாதிகாலம் பரமாநு
நுபவம் பண்ணின க்லேசம் தீர்ந்து க்ருதார்த்தராகிறார்.

கொண்டல்வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணியரங்கன் *என் அமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே. 10.

---

[1] தி. பல்லா. 1. †'கொண்டல் வண்ணனை இத்யாதி' என்று அதி
கம்—க. *என்னமுதனை—க.

கொண்டல் வண்ணனை - நீருண்டமேகம் போன்ற வர்ணம்
அல்லது ஸ்வபாவத்தையுடையவனும், கோவலனாய் - இடைக்குலத்
திலே அவதரித்து, வெண்ணெய் உண்டவாயன் - வெண்ணெயை
அமுது செய்த திருமுகத்தை உடையவனும், என்னுள்ளம் கவர்ந்
தானை - (இடைச்சிகள் வெண்ணெயைப் போலே விரும்பி) என்
மனதை அபஹரித்தவனும், அண்டர்கோன் - அண்டத்திற்குட்
பட்ட (ப்ரஹ்மா முதலான) ஸகலாத்மாக்களுக்கும் அதிபதியும்,
அணி அரங்கன்' (ஸம்ஸாரத்திற்கு) ஆபரணமான ஸ்ரீரங்கத்தில்
கண்வளர்ந்தருளுகிறவனும், என் அமுதினை - எனக்கு அம்ருதமா
னவனுமான பெரிய பெருமாளை, கண்டகண்கள் - காணப்பெற்ற
கண்கள், மற்றொன்றினைக் காணாவே - வேறொன்றைப் பார்க்க
மாட்டா.

(கொண்டல் வண்ணனை)— கடலிலுள்ள நீரெல்லாம் வாங்கி, காவேரீமத்யத்திலே பணிந்ததொரு காளமேகம் போலே கண்டார்க்கு ஶ்ரமஹரமான திருமேனியை உடையவனை; அங்ஙனன்றிக்கே ஜஜ்ஜீவாவங்களெல்லாம் உஜ்ஜீவிக்கும்படி ஜஙஷஙஹாமறகாருண்யரஸத்தை வர்ஷிப்பதொரு காளமேகத்தின் ஸ்வபாவத்தை உடையவனை என்னவுமாம். (கோவலனாய் வெண்ணெய் உண்டவாயன்)— எட்டும் இரண்டும் அறியாத இடையரையும் இடைச்சிகளையும் ரக்ஷிக்கையாலே தன்னுடைய ஸவூரொகாக்ஷகக்வும் வெளிப்படும்படி இடையரில் ஒரு ரூபத்தைக் கொண்டு ஆஶ்ரிதர் உகந்த ஶ்ரவ்யமெல்லாம் தனக்கு உகப்பு என்னும்படி தோற்ற, அவர்கள் ‘ஈட்டியவெண்ணெய், [1]“சூட்டுநன்மாலையிற்படியே அவூாகூதஹொமம் போலே அநுபவித்து, அத்தாலே இப்போதும் *குணுங்கு நாறும்படியான திருமுகத்தை உடையவன். (என் உள்ளம் கவர்ந்தானை)— இடைச்சிகள் வைத்த வெண்ணெய் போலே இவருடைய திருவுள்ளம் பெரியபெருமாளுக்கு நவநீதமாயிற்று. ஞானம் †பிறந்தபின்பும் என்னது என்னும்படி அஹங்காரமகாரங்கள் வடும்பிடுகிற என்னுடைய மநஸ்ஸை வடிவழகாலும் ஸௌஶீல்யஸௌலப்யவாத்ஸல்யாதிகளாலும் வஶீகரித்து, இனி ‘என்னது’ என்னவொண்ணாதபடி கைக்கொண்டவனை. (அண்டர்கோன்)— ‡இடையர்க்கு நியாம்யனாய் நின்ற எளிமை ஶுணமாம்படி ஸுஜாயிவெதியான ஸ்ரூஹூா

---

[1] தி. வி. 21. *முணுங்கு—க †பிறந்த பின்பு என்னது—க ‡இடையற்கும் நியாம்யனாய்:—க.

முதலாக மற்றும் ஜ்ஞாநவ்ருத்தர்களான தேவாதிகளை யெல்லாம் ஸ்வாதீநராக்கி வைத்திருக்கிற ஸ்வாமிகஸ்வாதந்த்ர்யாதிகளை யுடையவன். [1]"கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும் எண்ணற்கு அரியன் இமையோர்க்கு" என்கிறாராகவுமாம், (அணி அரங்கன்)- ஸம்ஸாரிகளும் ஸ்வதேசத்தை விட்டு இங்கே வந்து ஸேவிக்கும்படி ஆகர்ஷகமான அழகையுடைத்தான ஸந்நிவேசத்திலே அடியேனை அநந்யப்ரயோஜநமாக்கினவனை. (என்னமுதினை)- பரமபதத்திலும் க்ஷீரார்ணவத்திலும் அவதாரங்களிலும் அவ்வோ நிலங்களுக்கு நிலவரானார் அனுபவிக்கும்படியான அம்ருதமாய் நின்றாற்போலன்றிக்கே, [2]"நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்கிற *நானும் அனுபவிக்கும்படி எனக்கு ஸாதாரணமாய் ஜராமரணாதிப்ரவாஹத்தை† நிச்சேஷமாகக் கழிக்கவல்ல நிரதிசயபோக்யமானவனை; ப்ரயோஜநாந்தரபரரான தேவர்கள் அநேகப்ரயாஸத்தோடே பெற்று அநுபவிக்கும் அம்ருதம்போலன்றிக்கே, அநந்யப்ரயோஜனனான நான் அயத்நமாகப் பெற்று அநுபவிக்கும்படியான அம்ருதமானவனை என்னவுமாம்.

'கண்டகண்கள்' என்கிற ‡இதிலே 'என்கண்கள்' என்னுமையாலே நிர்மலத்வம் தோற்றுகிறது; இப்படி வாயிதாநுவ்ருத்தியில்லாதபடியான தத்வஜ்ஞாநம் பிற

---

[1] தி. மொ. 11. 5. 5. [2] 3. 3. 4. *நான் அனுபவி—க.
†ப்ரவாஹத்தைக் கழிக்க—க. ‡இதிலே கண்கள் என்னுமையாலே நிர்மலத்வம் தோற்றுகிறது-க

ந்து ஸர்வத்திலும் §நிர்மமராயிருக்கிற இவர் முன்பு ||'என்கண்' என்றும், 'என் சிந்தை' என்றும், 'அடியேன் உள்ளம்' என்றும், 'என் உள்ளம்' என்றும் மமகாரம் பின் தொடர்ந்து தோன்றப் பேசுவானென்னென்னில், ஸ்வதந்த்ர ஸ்வாமியான ஈஶ்வரன் ஸ்வசேஷ$பூதமான சேதநாசேதநங்களிலே ஸ்வார்த்தமாக ஒன்றை ஒன்றுக்கு சேஷமாக அடைத்து வைத்தால் அவனடைத்தபடி அறிந்துபேசுவார்க்கு நிர்மமத்வத்தோடே சேர்ந்த ¶இம்மமகாரம் அநந்யார்ஹர் மமகாரம் போலே தோஷமாகாது. (மற்றொன்றினைக் காணாவே)- இதற்கு முன்பெல்லாம் பாஹ்யவிஷயங்களிலே ப்ரவணங்களாய், அவற்றைக் கண்டபோது ப்ரீதியும், காணாதபோது விஷாதமுமாய்ச் சென்று, இப்போது நித்யதரித்ரனானவன் நிதியைக் கண்டாற்போலே அநந்தகுண விபூதிவிஶிஷ்டமாக இம் மஹாநிதியை அநுபவிக்கப் பெற்ற கண்கள் மற்றொன்றினைக் காணாவே. *ப்ராப்த விஷயத்திலே ப்ரதிஷ்டிதமான ஸங்கத்தை யுடைத்தான படியாலே ஸர்வப்ராப்யமாக வந்து ஸேவ்யதேவதைகளாய் நிற்கும் பத்மயோநி முதலானாரையும் †பாராது.

§நிர்மமத்வராயிருக்கிற—க. ||எனக்கென்றும் என் சிந்தையென்னும்படி என்னுள்ளமென்றும்—க. $பூதமான சேதனங்களிலே-க. ¶இம்மமகாரமே—க

*தன்னையும் மற்றொருவரையும், மற்றொன்றையும் 'ஸவிஜ்ஞாநேந த்ருஷ்டிகோசர:' என்கிறபடியே யாதாத்ம்யேந காண்கையாலே ஸ்வதந்த்ரமாகவும் ஸ்வபோக்யமாகவும் ஒன்றையும் பார்க்க உபகரணமாகப்பெருது என்கிறார். இவ்வளவன்றிக்கே (ப்ராப்த விஷயத்திலே) என்று அதிகம்—வ. †பார்த்து—க,

1"வாராஷாணாம் ஸஹஸ்ரேஷு
தேஷு வை ராஜயோநிஷு ।
உஷோந உஜிநநலா உக்ஷாஷா
வாஉவாஜயக ॥"

என்கிறபடியே ப்ஹவாத்ர்களாய் 1"யஜ்ஞம் ஜிஜ்ஞா
ஸவோ ஹக்தா:" என்னுமளவரான ஏகதர், த்விதர்,
த்ரிதர் திறத்தில் ஜ்ஞாநிகளான ஸ்வேதத்வீபவாஸிகளு
டைய உநாஉரத்தை இங்கே உநஸந்திப்பது.
2"ப்ராப்ய ஸ்வேதம் உஹாத்வீபம் நாரதோ ஹயவாந்ருஷி:
உஉரா தாநேவ நராந் ஸ்வேதாம்ஸ்ந்த்ரப்ஹாந் நராந் ॥
உஜயாஉாஸ ஶிரஸா உநஸா தைஸ்ஸஉஜித:"
என்று நாரஉஹயவானளவிலும் *அவர்கள் பரிமாற்றம்
சொல்லப்பட்டது.

3"உவாவ உயாரம் ஹஜ்யோ மஸ நாரஉ ஊவிரம் ।
ஐநே ஹ்நிதீயாஹாரா உக்தாரஸ்த்ந வஉஸ ॥
ஏகாந்ரயிஜயேயஉ்ம் தேஷாம் வியோ ஹவெதி"
என்று பகவான் அருளிச் செய்த வார்த்தையையும்
இங்கே உநஸந்திப்பது. 4"கண்டு கேட்டுற்று
மோந்துண்டுழலும் ஐங்கருவி கண்ட இன்பம்" என்
கிற ஐஶ்வர்யானுபவத்திலும், 4"தெரிவரிய அள
வில்லாச்சிற்றின்பம்" என்கிற †க்ஷூத்ரஉாநஹவ

1பார. சாந்தி. 344. 54, 31. 2பார. சாந்தி. 346. 1.
3பார. சாந்தி. 347. 18. 44. 9. 10.

1வாராஷாணாம் ஸஹஸ்ரேஷுயேஷு'—க.

*அவர் பறிமாற்றம்—க. † ஆத்மமாத்ராநுபவத்திலும்—வ.

ஈஹத்திலும்தமக்கு நிஃஷுஹமெத பிறந்தபடியிலே இங்கு தாத்பர்யம். அங்ஙனன்றிக்கே ஷயாநமான அநுபவத்திலே இழிந்தபடியினாலே ஸ்ரீயஃவதிக்கு ஷகாரமாக வல்லது மற்றொன்றையும் தாம் அநுபவியாதபடியிலே தாத்பர்யமாகவுமாம். பெரியபெருமாள் திருமேனியிலே திருமலைமுதலாகக் கோயில் கொண்ட கவஷாவதாரங்களிலும், ராஉ-க்ருஷ்ண-வாஉந-வடவத்ருமயநாதிகளிலுமுள்ள ஸௌந்தைர்யெல்லாம் சேர அநுபவித்து; இவ்வாஹிரவைத்திலே ஈடுபட்ட என்கண்கள் மற்றும் வரவைஹ-விஹவாதிகளான திருமேனிகளையெல்லாம் சேரக்காட்டினாலும், ஷூநஙய த்திற்கு ஸௌந்தராஙங்கள் ஈஷியாதாற்போலே [1]"ஸாவொ நாநநு மஜதி" என்கிறபடியே அவையொன்றும் ஈஷியாது என்கிறாராகவுமாம். இது இவருடைய *கநநவுயொஜநகவகாமெஷ் இருக்கும்படி.

ஆதிமறை யெனவோங்கும் அரங்கத் துள்ளே
அருளாரும் கடலைக்கண்டவன் என் பாணன்
ஓதியதோர் இருநான்கும் இரண்டு மான
ஒருபத்தும் பற்றாக உணர்ந்து ரைத்தோம்
†நீதியறி யாதநிலை யறிவார்க் கெல்லாம்
நிலையிதுவே என்று நிலை நாடி நின்றோம்
வேதியர்தாம் விரைத்துரைக்கும் விளைவுக் கெல்லாம்
விதையாகும் இதுவென்று விளம்பினோமே. 36.

---

[1] ரா. உத் 40. 15. *அநந்ய ப்ரயோஜநகாஷ்டை—க.
†நீதி வழுவாத—வ.

காண்பனவும் உரைப்பனவும் மற்றொன் றின்றிக்
கண்ணனையே கண்டுரைத்த கடியகாதல்
பாண்பெருமாள் அருள்செய்த பாடல் பத்தும்
பழமறையின் பொருளென்று பரவு கின்றோம்
வீண்பெரிய விரிதிரை நீர் வையத் துள்ளே
வேதாந்த வாரியனென் றியம்ப நின்றோம்
*நாண்பெரியோ மல்லோம்நாம் நன்றும் தீதும்
நமக்குரைப்பார் உளரென்று நாடுவோமே. 37.

இதி கவிதார்க்கிகஸிம்ஹ:
ஸத்த்வஸ்தா: ஸாத்த்விகஶ்ரேஷ்டைத்ய ।
முநிஸஹிதஸம்கவிராயா:
உபகீதம் தேவிகோவக்ஞ: ॥

முநிவாஹநபோகோऽயம் முக்தைஶ்வர்யரஸாவஹ: ।
க்ருபயா ரங்கநாதஸ்ய க்ருதார்த்தயது ந: ஸதா ॥

இதி கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஶ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
முநிவாஹநபோக: ஸம்பூர்ண: ॥

*நான் பெரியோமல்லோம நன்றும்—க.

இதில் சேர்ந்த 29-வது ரஹஸ்யமான
யோகவித்யையும் ஸூத்ரமும்.

ஸ்ரீ: ||

ஸ்ரீ நிகமாந்தமஹாதேசிகன் அருளிச்செய்த
ரஹஸ்யங்களில் 32-வது ரஹஸ்யமான
ஸத்யவ்ரதக்ஷேத்ரமாஹாத்ம்யம் என்கிற
ஸ்ரீஹஸ்திகிரிமாஹாத்ம்யம்.

ராமாநுஜதயாபாத்ரம்
ஜ்ஞாநவைராக்³யபூ⁴ஷணம் ।
ஸ்ரீமத்³வேங்கடநாதா²ர்யம்
வந்தே³ வேதா³ந்ததே³ஶிகம் ॥ [ஶ்ருண

ஸாநாஸ்மிந் ஸத்யம் ஸத்யநய ஜயதிவ்யஞ்ஜயந்தீ
க்ஷமாவல்லபவிதாநஜ ஸமஸ்தஜநாவநம் தத்வத: ।
ஸாதந்த்ரவத் ஸந்நிதாநம் ஸதஶாவநோத்தரதரக
ஶ்ரேணீ ஶேஷதவாரிஜாத கலிகா வதந்யாக்ஷஸ்தாஶயோ ॥

வாழி யருளாளர் வாழியணி அத்திகிரி
வாழி யெதிராசன் வாசத்தோர்— வாழி
சரணகதி யென்னும் சார்வுடன் மற்றொன்றை
அரணாகக் கொள்ளாதாரன்பு. 1.

ஸகலலோகஹிதகரவிஷய விவிதவேதார்த்தோப
ப்³ரும்ஹணங்களான புராணங்களில் உபவ்ருத்தமாகை
யாலே முற்பட எண்ணப்பட்ட ப்³ரஹ்மாண்டபுராணத்
தில் ஸத்யவ்ரதக்ஷேத்ரமாஹாத்ம்ய உபவ்ருத்தத்தாலே ஸந்
ர்ஶிதமான பேரருளாளன் பெருமையை பா⁴வுகரான
ஸஹ்ருதயருடைய ஹ்ருதயரஞ்ஜநமாக மநஸ்ஸி
லே பா⁴வமும், வாக்கிலே நாமமும், கரத்திலே தாள
முமாக, பா⁴வ-நாம-தாளங்களை வகுத்த ஸாரஸ்யாத்

தின்படியே *பண்ணுமிசையில் திகழப்பார்க்கின்றோம்.
இத்தைக் குறிக்கொண்டு †கேட்டருள்மின்.

எண்டிசையும் கடலேழும் மலைகள் ஏழும்
 ஈரேழு வையகமும் படைத் திலங்கும்
புண்டரிகத்தயன் புணர்த்த பெரிய வேள்விப்
 புனிதநறும் போக்கியத்தை உகந்து வந்து
தொண்டையெனும் மண்டலத்தில் நடுவில் பாரில்
 தூநிலமெய் விரதத்தில் தோன்றி நின்ற
கொண்டல்அருள் குணமே நாம் கூறுகின்றோம்
 கூர்மதியீர் குறிப்பாகக் கொள்மின் நீரே. 2.

வம்மின் புலவீர் அருளாளப் பெருமாள் என்றும்
 அருளாழி அம்மான் என்றும்
திருமாமகளைப் பெற்றும் என்நெஞ்சம் கோயில்
 கொண்ட பேரருளாளர் என்றும் [கடலை
வியப்பா விருதூதும்படி கரைபுரண்ட ‡கருணைக்
 எவ்வண்ணம் பேசுவீர் ஈதென்ன பாங்கே. 3.

ஒன்றே புகலென்றுணர்ந்தவர் காட்டத் திருவருளால்
அன்றே அடைக்கலம் கொண்டநம்
 அத்திகிரித்திருமால் [வோம்
இன்றே இசையில் இணையடிசேர்ப்பர் இனிப் பிற
நன்றே வருவதெல்லாம் நமக்குப் பரம் ஒன்றிலதே.§4.

ஸவிஜ்ஞமதேகஸேஷியாய், ஸவிஜ்ஞமதஜ்ஞயபூரியாய், ஸவிஜ்ஞமதாதாரனாய், ஸவிஜ்ஞமதேககாரண

---

*பண்ணும் இசையும் திகழப் பாடுகின்றோம் (?)
†கேட்டருள்வீர்மின்—க. [என்று அதிகம்—க.
‡கருணைப் பெருங்கடலை—க §“இதி ஸ்வஸாவதார:”

ஸர்வஜ்ஞனாய், அகிலஹேயப்ரத்யநீககல்யாணைகதானனாய், அபாரகாருண்ய-ஸௌசீல்ய-வாத்ஸல்ய-ஔதார்ய-ஸௌந்தர்ய-ஸௌகுமார்யாதியான ஸ்ரீயப்பதி புருஷோத்தமன் [1]"ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் இல்லாவன்று" ஸ்வஸங்கல்பஸஹஸ்ரைகதேசத்தாலே ப்ரஹ்மாண்டாவயவங்களாக ஸ்ருஷ்டித்து; [2]"தேவும் எப்பொருளும் படைக்கப்பூவில் நான்முகனைப் படைத்து" [3]"திசைமுகன் கருவுள் வீற்றிருந்து; ப்ரஜாபதி-பசுபதி-ஸபாபதி-பித்ருபதி-ஜலபதி-தனபதி முதலான லோகப்ரபஞ்சத்தையும், அதல-விதல-பாதாளாதிகள் என்றும், ஸப்தத்வீபாந்தரிக்ஷ ஸ்வர்க்காதிகள் என்றும் சொல்லுகிற லோகஸ்தானங்களையும், இவற்றிலுட்பட்ட ஸாத்விக-போக்ய-போகோபகரணவிசேஷங்களையும், விவிதவிசித்ரஸந்நிவேசங்களாகப் பகுத்து; [4]"பண்டை நான்மறையும் வேள்வியும் கேள்விப் பதங்களும்பதங்களின்பொருளும் பிண்டமாய் விரிந்த பிறங்கொளியனலும் பெருகிய புனலொடு நிலனும் கொண்டல் மாருதமும் குரைகடல் ஏழும் ஏழுமாமலைகளும் விசும்பும் அண்டமும்தானாகி" நின்று; தனக்கு ஔரஸபுத்ரனுமாய், அவ்யவஹிதசிஷ்யனுமான சதுர்முகனை சதுர்முகப்ரஹ்மாண்டநிர்வாஹகனாக்கி வைத்தருள; இவ்வதிகாரம் பெற்ற ப்ரஹ்மா நாபிஜாதனாய்த் தோன்றச் செய்தே அபிஜாததமனாகையாலும், ஸர்வதோமுகமாக வேதப்ரவர்த்தனம் பண்ணுகையாலும், ஸரஸ்வதீஸஹசரிதனாகையாலும், நாலுவர்ணங்களையும் ஸ்ருஷ்டித்த நாநாவிதஸாமர்த்யத்தாலும்,

---

[1] 4. 10. 1. [2] 2. 2. 4. [3] 5. 10. 8. [4] இ. மொ. 5. 7. 1

'நமக்கு நிகர் ஆர்' என்று ஸஹஜ-விஶ்லேஷ-வ்ருத்தமனங்களும் ஸாதனத்தின் செருக்கும் ஏறி, [1]"கறந்தபாலுள் நெய்யேபோல் இவற்றுள் எங்கும் கண்டுகொள் இறந்து நின்ற பெருமாயனே" ஸ்வஸாக்ஷாத்காரஸாதனமான ஸாதனத்தைக்கொண்டு ஸாக்ஷாத்கரிக்கலாம் என்று பார்த்து, [2]"இளைப்பினை இயக்கம் நீக்கி இருந்து முன்னிமையைக்கூட்டி, அளப்பில் ஐம்புலனடக்கி, அன்பவர் கண்ணேவைத்து துளக்கமில் சிந்தைசெய்து தோன்றலும் சுடர்விட்டாங்கே, விளக்கினை விதியில் கண்டுமெய்மையைக்" காண ஒருப்பட்டவளவிலே பரஸ்வரூப ஸாக்ஷாத்காரவிரோதியாயிருப்பதொரு மானாத வல்வினை இவனை ஸாதனத்தில் நின்றும் மீட்டது. அப்பொழுது,

வம்பவிழ்போதமர் மாதர் உகந்த அம்மாநிதியைத்
தன்பலமே கொண்டு காணக்கருதிய தாமரையோன்
முன்பல குற்றத்து வல்வினை மொய்க்க முகிழ்மதியாய்
அம்புலிவேண்டிய பாலனைப் போல அழுதனனே. 5.

இப்படிக் கலங்கின ப்ரஹ்மா, 'என்னே! என்னே! நமக்கு ஸர்வாநுபாவ்யவிஷயமான ஸாதனம் கைபுகுராமைக்குக் காரணம் என்?' என்று விசாரித்து, 'நின்றவா நில்லாதே' கவிபவஸாமான ஸங்கோசணத்தின் க்ஷயவாகும் பிறவாமை' என்று பார்த்து, ஶரீராதிகளுக்கு ஹேதுவான கர்மவிஶேஷத்தைக் கழிக்கப் பெறாதே, இத்தனை நாளும் என்ன கார்யம் செய்தோம், [3]"இமையோர் வாழ் தனிமுட்டைக் கோட்டையிலே" கூறுசெய்வதாக ஏறவுமிழியவும் நெடுங்காலம் நிரயதுக்கமாக

[1] 8. 5. 10. [2] தி. குறு. 18. [3] 4. 9. 8.

காயக்லேசம் பட்டோம் என்று [1]"நெஞ்சுருகிக்கண்பனி
த்து நெடுமூச்செறிந்து நிலத்தைப் பார்த்திருந்தான்.

அடங்காக் கரணங்களைந்துடன் ஆறுமடக்கி முன்னம்
நெடுங்காலமின்னிலமே நிலையாய்ப் பூண்டு நீடுறை[வான்
சடங்கார் பெரிய தவங்கள் செய்தேனென்ன [தன்மையிதென்
திடங்காத்திருந்த திசைமுகன் தன்னை இகழ்ந்தனனே.

[2]"யுககோடி ஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: |
புநஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும"

இப்படி சதுர்யுகஸஹஸ்ரஸாத்யமான தபஸ்ஸைப் பண்ணி, அதிகாரம் என்பதோர் [3]அளற்றிலே அழுந்தி ஸநாதநத்வத்தை ப்ரஹ்மா ஸ்வயம்வ்யக்த கடாக்ஷ விசேஷத்தாலே 'மோக்ஷோபாயமான தபஸ்ஸுக்கு நிலமாவது ஏது' என்று நிரூபித்து, 'பூமியொழிந்த லோகங்கள் பதின்மூன்றும், பூமிதன்னில் ஜம்பூத்வீப மொழிந்த மஹாத்வீபங்கள் ஆறும், ஜம்பூத்வீபம்தன்னில் பாரதவர்ஷமொழிந்த வர்ஷங்கள் எட்டும் போகபூமிகளாகையாலே மோக்ஷஸாதநாநுஷ்டாநத்திற்கு உசிதக்ஷேத்ரங்கள் அன்று' என்று உபேக்ஷித்து, ஸர்வரக்ஷணமாய் ஸர்வஸாதநாநுஷ்டாந யோக்யமான பாரதவர்ஷத்தில் வந்து புகுந்தான்.

விண்ணுலகில் வீற்றிருந்த மேன்மையாலும்
வேதங்கள் ஈரிரண்டும் விரித்தலாலும்
கண்ணனைநான் கருத்துறவே காண்பன் என்னக்
காணாமல் விலக்கியதன் வினையைக் காணா

[1]4. 7. 3. [2]பாரதம். குண்டதாரோபாக்யானம் [3]அளறு—சேறு.

எண்ணியதற் புவனங்கள் ஏழும் ஆறும்
இருமூன்று தீவமும்எட் (டு) இடமும் விட்டுப்
பண்ணியநல் விரதமெல்லாம் பலிக்கும் என்று
பாரதத்தைப் பங்கயத்தோன் படிந்திட்டானே. 7.

இப்படி ப்ரஹ்மா பாரதவர்ஷத்திலே வந்து புகுந்து தான் த்யாநமாக நினைத்திருந்ததொரு புண்ய க்ஷேத்திரத்திலே ஒரு காலாலே நின்று இந்த்ரியங்களையும் உச்வாஸநிச்வாஸங்களை அடக்கியும், ஒருவராலும் அநுஷ்டிக்கவொண்ணாத தபஸ்ஸைப் பண்ணினவளவிலும், அந்த:கரணம் அத்யந்தப்ரஸந்நமல்லாமையாலே அத்யந்தவிஷண்ணனாயிருக்க; அசரீரியாயிருப்பதொரு வாக்கு ஆகாசத்திலே கிளம்பி, 'வாராய், ப்ரஹ்மாவே! நீ வெறுக்கவேண்டுவதில்லை; உனக்கு ஸர்வவிரோதியான கர்மம் கழிகைக்கு ஒரு உபாயத்தை உபதேசிக்கிறேன்; அதிகாரமாகிற ஸம்ஸாரஸாகரத்திலே அழுந்தின உனக்கு ஆயிரம் அச்வமேதம் பண்ணினாலல்லது அந்த:கரணசுத்தி உண்டாகாது; அத்யந்த ரௌரவத்திற்கும் கர்மவிபாகத்திற்கும் நீ அஞ்சினாயாகில், ஒரு அச்வமேதத்தாலே ஆயிரம் அச்வமேதத்தின் பலம் ஸித்திக்கும்படி அதிசயிதமான ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே சென்று, அதின் நடுவே ஸர்வவ்யாபியான ஸர்வேச்வரன் நித்யமாக விசேஷஸந்நிதி பண்ணியருளுகிற ஸ்ரீ ஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி, அங்கே ஸர்வயஜ்ஞங்களிலும் ச்ரேஷ்டமான அச்வமேதத்தாலே ஸர்வயஜ்ஞபோக்தாவான ஸர்வேச்வரனை ஆராதிப்பாய், *என்றது. அந்த அசரீரி

[1]என்று அந்த—க.

வாக்யத்தைக்கேட்டு, சதுர்முகனான ப்ரஹ்மா அப்பொழுதே ஸத்யவ்ரதக்ஷேத்ரத்திலே வந்து விஶ்வகர்மாவை அழைத்து. 'நாம் இங்கே ஸர்வப்ராயஶ்சித்தமாக வேதங்கள் விதித்த வைஷ்ணவமான அஶ்வமேதத்தைப்பண்ணப் பாராநின்றோம். ஶில்பவித்யாவிஶாரதனான நீ ஹஸ்திகிரியை சதுரஶ்ரமாக வகுத்து, *அதையேஉத்தரவேதியாக்கி, யாகஶாலையைச் சமைத்து, நம்முடைய யக்ஞத்திற்கு வருகிற தேவ-அஸுர-யக்ஷ-ராக்ஷஸ-கின்னர-கிம்புருஷ-ஸித்த-வித்யாதர-உரகாதிகளெல்லாம் நெருக்கமற இருக்கும்படி †நீண்டு அகன்று அமைந்திருப்பதொரு ரமணீயராஜதானியைச் சடக்கெனச் சமைப்பாய்' என்று அதித்வரையோடே ஆக்ஞாபித்தான்.

எத்திசை நிலனுமெய்தி அருந்தவம் செய்தவந்நாள்
சத்திய விரதம் செல்வாய் என்றதோருரையின் சார்வால்
அத்திசை சென்றழைத்தங்கமரரில் லெடுப்பான்தன்னை
உத்தரவேதிசெய் யென் றுரையணங்கிறையுரைத்தான்.

இப்படி ப்ரஹ்மா ஆக்ஞாபிக்க, விஶ்வகர்மாவும் ஸர்வகுணோத்தரமான ஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி, 'இது ஸர்வேஶ்வரன் ஸந்நிதிபண்ணுகைக்கு இடமாம்' என்று விசாரித்தான்.

உத்தம வமர்த்தலம் அமைத்ததொர்
எழில் தனுவுயர்த்த கணையால்
‡அத்திர வரக்கன்முடி பத்துமொரு
கொத்தென உதிர்த்த திறலோன்

---

*அதின்மேலே—க. †நீண்டு அகன்று உயர்ந்த—**வ.**
‡அத்திறவரக்கன்—**வ.**

மத்துறு மிகுத்ததயிர் மொய்த்தவெண்ணெய்
வைத்ததுணும் அத்தனிடமாம்
அத்திகிரி பத்தர்வினை தொத்தற
அறுக்கும் அணி அத்திகிரியே. 9.

இவ்வண்ணம் சிந்தித்து, *உத்தரவேதியும் யஜ்ஞசாலையும் படைவீடுமாக வகுத்து விச்வகர்மா காட்டக் கண்ட ப்ரஹ்மா தனக்கு ஸந்தோஷவிஷயமாகையாலே இந்நகரத்திற்கு 'காஞ்சீ' என்று பேராக்கினான்.

"அயோத்யா மதுரா மாயா காசீ காஞ்சீ ஹ்யவந்திகா ।
புரீ த்வாரவதீ சைவ ஸப்தைதா †மோக்ஷதா: ஸ்ம்ருதா: ॥"

திண்மணிகள் பொன்னுடனே சேர்த லாலும்
சிதையாத நூல்வழியிற் சேர்த்தி யாலும்
வண்மையெழும் ஈரிரண்டு வண்ணத் தாலும்
வானவர்க்கும் வியப்பான வகுப்பி னாலும்
உண்மையுடை வாசியொளி யோசை யாலும்
ஒருகாலும் அழியாத அழகி னாலும்
மண்மகளாற் கலங்காரம் என்ன மன்னும்
மதிட்கச்சி நகர்கண்டு மகிழ்ந்திட் டானே. 10.

இப்படி பூமிக்கு அலங்காரமாக ஒரு காஞ்சியைச் சமைத்து, அங்கே அச்வமேதயாகத்திலே உத்காதனை ப்ரஹ்மா வஸிஷ்டி முதலான ப்ரஹ்மர்ஷிகளை ருத்விக்குகளாக்கிக்கொண்டு, ஸரஸ்வதீ என்கிற ஆற்றிலே தபஸ்ஸு பண்ணுகிற தன் ப்ரியாபத்நியான 'ஸரஸ்வதியை அழைத்துக் கொண்டு வருவாய்' என்று வஸிஷ்டபகவானை அநுசாஸித்தான்.

*உத்தரவேதியையும் யஜ்ஞசாலையும்—க. †மோக்ஷதாயிகா:-வ.

காமங்கள் பலகொண்ட வேதம் கொண்டு
  கைதவமே செய்வார்க்குக் காண கில்லாப்
பூமங்கை கேள்வனைநான் கண்டு போற்றப்
  புண்ணியத்தின் நிகரில்லா விரதம் பூண்டேன்
சாமங்கள் கழிவதன்முன் சடக்கெனப் போய்த்
  தன்னாற்றில் தனியிருந்து தவம் செய்கின்ற
நாமங்கை வந்திட நீ அழைப்பாய் என்று [11.
  நன்மகனை நான்முகன்தான் நவின்றிட்டானே.

இப்படி ப்ரஹ்மாவாலே நியுக்தனான ஸ்ரீவஸிஷ்ட பகவான் ஸரஸ்வதிபக்கலிலே சென்று ப்ரணிபாதாபிவாதநங்களைப் பண்ணி, ப்ரஹ்மாவின் யாகத்தையறிவிக்க; ப்ரணயகலஹகலுஷிதையான ஸரஸ்வதி வாராதவளவில், ப்ரஹ்மா ஸாவித்ரீ முதலான பத்நிகளைக் கொண்டு யஜ்ஞம் பண்ணத் தொடங்க; தைவஸத்ருக்காஷிதரான அஸுரர்கள் இந்த யஜ்ஞத்தைக் கலைக்க நினைத்துச்சென்று ஸரஸ்வதிக்கு அறிவிக்க; அவளும் அதிகலுஷிதஹ்ருதயையாய்க் கொண்டு தக்ஷிணாபதத்திலே போந்து, வேறொரு மஹாநதியாய்ப் பெருகி, ப்ரஹ்மாவினுடைய யஜ்ஞஸம்ருத்தியை அழிப்பதாக உபக்ரமித்தாள்.

அன்னவடிவாள் அசையுமன்ன நடையாள்
  உயருமன்ன வரசேறி வருவாள்
அத்தனயன் அத்தநயன் உத்திதனை
  அத்திதென வுத்தி புரியாள்
நன்னடை விடாநட மிதென்ன நடவா நடுவுள்
  நண்ணு குடகேறி மிழிவாள்
நற்பதிக ளற்பதிகள் கற்புரள
  வற்புத மருக் கதியினல்

கன்னடைவிடா விடமில் உன்னதி சிரு விகட
மன்னுகிரி கூடமிடியக்
கட்டவிடை யிற்றுவிழ *முற்றும் விழி
யுற்றடைய விட்டருகுற
அன்னநய சீரயனி தென்னென விழாவமரர்
மன்னுபதி யேறி மகிழ
அச்சுதன் அணைத்தனுவில் அத்திசைவரத்
தகைய வற்றணுகினுள். 12.

அன்றுநயந்த வயமேத மாவேள்வி
பொன்ற வுரையணங்கு பூம்பூனலாய்-கன்றிவர
ஆதி யயனுக்கருள் செய்தணையானுன்
தாதை அரவணையான் தான். 13.

இப்படி ஸகலலோகைகஸேதுவான ஸர்வேஶ்வரன் ஸாரஸ்வதப்ரவாஹமத்யத்திலே அரவணையோடே கூட அணையாகக் கிடந்தவளவில், கண்ணும் மனமும் களிக்கக் கண்டுநின்ற த்ரைலோக்யவதிகளும் இவ் வண்ணம் பேசினுர்கள்.

தரணியில்மன்னியயனுர் தனித்தவம்காத்தபிரான் [பின்
கருணை யெனும் கடலாடித் திருவணையைக் கண்டதற்
திரணர கெண்ணிய சித்திரகுத்தன் தெரித்துவைத்த
சுருணையிலேறிய சூழ்வினைமுற்றும் துறந்தனமே. 14

இப்படி வெகவதியாய்வந்த ஸரஸ்வதியினுடைய கோபவெகமடங்கும்படி [1]வெஃகாவில் துயிலமர்ந்த †வேந்து கடாக்ஷிக்க, கலக்கமற்றுவந்த ஸரஸ்வதியையும் கூட்டிக்கொண்டு ப்ரஹ்மா அஶ்வமேதயாகத்தை

[1] தி. நெடு. 13. *முட்டவழி—அ. †வேந்தைக் கடாக்ஷிக்க—க. வேந்தன் (?)

நடத்த, அச்வமேதம் ஸம்பூர்ணமான அளவிலே ஆயிரங்கோடி ஸூர்யர்கள் உதித்தாற் போலே உத்தர வேதிமத்யத்திலே ஒரு மஹாதேஜஸ்ஸு தோன்றிற்று.

சுகலேசமெண்ணிய சூழ்வினை தீர்க்கத் துணிந்தயனார்
அகலாதவன்புடன் கொண்ட வயமேதவேதியின்மேல்
புகலோங்குபொன்மலை என்றதோர்புண்ணியகோடி
[யுடன்
பகலோன்பகல்விளக்காகப்பரம்சுடர் தோன்றியதே. 15·

சைத்ரே மாஸி ஸிதே பக்ஷே சதுர்தச்யாம் திதௌ
ஶோபநே ஹஸ்தநக்ஷத்ரே ரவிவாரஸமந்விதே ॥ [ஶுபே
அஶ்வமேதே ஸம்பூர்ணே து ப்ராதஸ்ஸவநகாலிகே ।
யஜ்ஞோத்தரவேத்யாம் ப்ராதுராஸீஜ்ஜநார்தந: ॥

இப்படிப் பெருமாள் *தோன்றினபடிக்கு நித்யஸூரிகள் ஹர்ஷத்தாலே [1]'காளங்கள் வலம்புரி கலந்தெங்கும் ஆர்த்தன.'

†ஶங்க: பாஞ்சஜந்யோऽயமாபூர்ய தேவகிநந்தந: ।
ஶப்தோ வாத்யோऽபவத்யத்ர ஶ்ராவி ச காஹலீ ॥
ப்ரணவஸ்ஸர்வலோகாநாம் நாராயண உபாகத: ॥
ஶங்கசக்ரகதாபாணிர் நாராயண உபாகத: ॥
இதி காஹலிநாதேந கர்ணபூர்த்ருதவேதநம் ।
ஜ்ஞாபயந்தா ஸஹஸா யோகாதிராஜ விதாஸஹ: ॥

பெருமையுடை யத்திகிரிப் பெருமாள் வந்தார்
பேராத வருள்பொழியும் பெருமாள் வந்தார்
அருமறையின் உச்சிதனில் நின்றார் வந்தார்
அங்கமுடன் அவையாகும் ‡பெரியோர் வந்தார்

---

[1] 10. 9. 6 *ஆவிர்ப்பவித்தருளினபடிக்கு—அ. †இந்த ச்லோகங்கள் இல்லை—க. ‡அரியோர்—க.

திருவுரையாய்த் தாம்பொருளாய் நிற்பார் வந்தார்
திருவருளால் செழுங்கலைகள் தந்தார் வந்தார்
மருவிலர்க்கு மயக்குரைக்கும் மாயோன் வந்தார்
வானேற வழிதந்தார் வந்தார் தாமே. 16.

அத்திகிரி அருளாளப் பெருமாள் வந்தார்
ஆனைபரி தேரின்மேல் அழகர் வந்தார்
கச்சிதனில் கண்கொடுக்கும் பெருமாள் வந்தார்
கருதவரம் தரும்தெய்வப் பெருமாள் வந்தார்
முத்திமழை பொழியும்முகில் வண்ணர் வந்தார்
மூலமென ஓலமிட வல்லார் வந்தார்
உத்தரவேதிக்குள்ளே உதித்தார் வந்தார்
உம்பர்தொழும் கழலுடையார் வந்தார் தாமே. 17.

இப்படி ஆவிர்ப்பவித்தருளின பெருமாளுடைய மஹாதேஜஸ்ஸிலே [illegible]மேறி ஓடின ப்ரஹ்மாவும் தேவர்களும் ரிஷிகளும் வருந்திக் குறித்துப் பார்த்து, அத்தேஜோமண்டலத்திற்குள்ளே புண்யகோடிவிமானத்தையும், அவ்விமானமத்யத்திலே ஸர்வாங்கஸுந்தரரான பெருமாள் காஞ்சீவ்ருஷ்டியாயிருப்பதொரு காளமேகம்போலே நின்றருளினபடியையும் கண்டு ஹ்ருஷ்டவிஸ்மயபரவசராய்க்கொண்டு இங்ஙனே பேசினார்கள்.

திருபரிதிசைந்த மகுடமும்
எழில்மதி திகழ்ந்த வதனமும்
இருவகை இலங்கு குழல்களில்
எதிர்பொர வுகந்த மகரமும்
ஒருதகவுயர்ந்த திருமகள்
ஒளிமறுவில் மன்னும் அகலமும்
உருவருவமிழ்ந்த உதரமும்
உலகடைய நின்ற கழல்களும்

மருவினிடை யோங்கு புனலென
 மலைகுனிய நின்ற மலையென
மருளற விளங்கும் ஒளியென
 மலரயன் உகந்த பயனென
அருவில் உறைகின்ற உயிரென
 அடியவர் உகந்த அமுதென
அருமறைகள் ஒன்றி அடிதொழ
 அருள் வரதர் நின்ற பெருமையே. 18.

இவ்வண்ணம் ஆஶ்சர்யரஸத்தாலும் ஸக்ஷாத்கா ஷத்தாலும் ஹ்ருஷ்டராய்க்கொண்டு தொழுவதெழு வதாய், 'இவருக்கு நாம் அடியோமாகப் பெறுவதே' என்று வேஷாஞ்ஜஸாரமான ஸ்வரூபத்தை இங்ஙனே விண்ணப்பம் செய்தார்கள்.

சித்தசித்தென விரித்துரைத்தன
 அனைத்தமைத் துறையும்இறைவனர்
சிறியபெரியவுரு வடையவுடலமென
 நடலம்இலதிலகு நிலையினர்
சித்திரத்தொழிலை யொத்தபத்தரொடு
 முத்தர்பித்தி யெனும் உணர்வினர்
சிதைவின்மறைநெறியி னெறியவுரு முறைகள்
 முறியசிறை யரிய நிறைவினர்
கத்துவிக்கவல கத்துவித்தைவழி
 கற்றவர்க்கசைவில் மாயனர்
கபிலர்கணசரணர் சுகதர் சமணரரர்
 வழிகள் அழியும் அருள்மொழியினர்
கத்திலக்கிலும் அருக்குலத்திலும்
 அசித்திலொக்கும்ஒரு முதல்வனர்

கரணமிடுகடிய பதினொரிருடிகமும்
அடையமுடியும் அடி யிருடியார்
ஒத்தனைத்துலகும் ஒற்றியொற்றிவரும்
இப்பவத்திசையும் இசைவினர்
உருவமருவமெனும் உலகிற் முடகிலெனில்
உவமையிலதிலகு தலைவனர்
உத்தமப்படி வகுத்தவித்தைகளில்
உத்தரிக்கவுணர் குணவனர்
உரியகிரிசைகளில் அரியதொருவிரகு
தெரியவிரையுமவர் பரிவினர்
சத்தசெத்தெனும் அனைத்தணைத்தவினை
தொத்தறுக்கவல துணிவினர்
சரியுமளவில் உரி யவரை யறிவரிய
தமனிநெறி சொருகு விரகினர்
தத்துவத்திரள் உதைத்துதைத்தடைவு
தத்துவிக்குமவர் தலைவனர்
தருகவுணருமவர் சரணமனுக
விடலரியவருள் வரதரடியமே. 19.

ஸூஹா அப்பொழுது ஸம்ஸாரஸெஞாஷ்வா ஸங்களையுடையவனைக் கொண்டு கிட்டிச் சென்று, ஸுஹிஹொர்மான ஸாஹாத்ரூயத்தை அநுபவித்துத் தான்பெற்ற பேற்றை இங்ஙனே பேசினன்.

திருமகள் மண்மகள் நீளை முதலா வெல்லாத்
தேவியரும் தன்னுடனே திகழ்ந்து நிற்கத்
தருமமிரு மூன்றுமுதல் அனைத்தும் தோனறத்
தன்னனைய சூரிகள்தன் அடிக்கீழ் வாழ
அருமறைசேர் அள்ளில்லா அவனியின்கண் [கும்
அரவணைமேல் வீற்றிருப்பால் அனைத்தும் காக்

கருமணியைக் கரிகிரிமேல் கண்டேன் என்தன்
கடுவினைகள் அனைத்தும் நான் கண்டிலேனே.

இப்படிக் [1]"கண்கள் காண்டற்கரிய" ஸௌந்தர்ய விஷயத்தைக் கண்ட ப்ரஹ்மா,

ததஸ்ஸ வீக்ஷ்ய ஸாதர꞉ ஸ்திதம் ஹரிம்
விதாநவேத்யாந்தஸீமஸம்ஸ்ரயம் ।
ஸ தச்சக்ஷுர்ணோஷ்ஹத்ஸமாவர்ணயாஸ்த்யதோ§
யயௌ ததா க்ருதக்ருத்யவிவேகஸம்பதாம் ॥
ப்ரதக்ஷிணம் சைத்ய ததா ப்ரதக்ஷிணம்
ப்ரயாதி தூரம் ஸமநேதி ஸந்நிதௌ ।
க்ரமேண ச ஸ்வஸ்ய ஸஹஜஸ்ய ததர்வ꞉
ப்ரியேண கௌஸம் பரிஷஷ்வஜே க்ஷணம் ॥

இப்ப்ரகாரத்திலே [2]"மொய்ம்மாம்பூம்பொழில்" படியே அக்ரமாக ஸாஷ்டாங்கமாக ப்ரணிபாதங்களைப் பண்ணின ப்ரஹ்மா சிறிதுபோது ஓடிக் †கூடித் தரித்து, நாச்சிமாருடனே பெரியபெருமாள் ‡எழுந்தருளியிருக்கிற நிலையை இங்ஙனே அநுபவித்தான்.

பெடையிரண்டை யொரனமடைந்து
பிரிந்திடா வகை பேசலாம்
பெருகு மருவிகள் அருகு மருவிய
பெரியமணிவரை பயிலலாம்
பிடியிரண்டொடு களபமொன்று
பிணைந்த பேரழ கோதலாம்
பிரிவிலொளியொடு நிழலுமருகுறும்
இரவி யிலகுதல் பரவலாம்

[1] 3. 6. 11. [2] 3. 5. 1. *இப்படி—வ †கூடித்திரிந்து—க. ‡எழுந்தருளி நிற்கிற—க. §ஸமாயாணம்வாஸமதோ—க.

கொடியிரண்டொடு விடவியொன்று
குளிர்ந்தவாறு குலாவலாம்
குறைவில் சுருதியும் நினைவுமிலகிய
§தருமவருநிலை இதென்னலாம்
அடியிரண்டையும் அடையுமன்பர்
அறிந்த பேரருளாளனார்
அணுகுமலர்மகள் அவனி மகளொடு
கரடிகிரிநிலை கவர்தலே. 21.

அநந்தம் அநந்தகல்யாணகுணார்ணவரான பெருமாளுடைய திவ்யகுணங்களை அநுபவிக்கத் தொடங்கி, ஒரொரு ஆகாரங்களுக்கு ஒரொரு உபமாநாபாஸங்களைத் தேடி, குணஸமுதாயத்திற்கு ஒரு *உபமாநாபாஸம் தேடவொண்ணாதென்று †கொண்டாடினான்.

வேரொப்பார் விண்முதலாம் காவுக் கெல்லாம்
விழியொப்பார் வேதமெனும் கண் தனக்கு
காரொப்பார் கருணைமழை பொழிந்திடுங்கால்
கடலொப்பார் கண்டிடினும் காணுக் கூத்தால்
நீரொப்பார் நிலமளிக்கும் தன்மை தன்னால் [நேரால்
நிலமொப்பார் நெடும்பிழைகள் பொறுக்கும்
ஆரொப்பார் இவர் குணங்கள் அனைத்தும்கண்டால்
அருளாளர் தாமெனினும் தமக்கொவ்வாரே. 22.

இப்படிப் பெருமாளுடைய குணங்களை வகையும் தொகையுமாக வகுத்து அநுபவிக்கிற ஸர்வதோஜ்ஞன ப்ரஹ்மா மேல் ப்ரேமத்தாலே யஜ்ஞவாடத்தின் மேல் பாதியிலே வெஃகாவில் துயிலமர்ந்த ‡வேந்தையும்,

§தருமவருநிலையிலென்னலாம்—க. *உபமாநாபாஸங்களும்—க.
†திண்டாடினான்—வ. ‡எந்தையையும்.

கீழ்ஸவத்தாலே உத்தரவேதியிலே நின்றருளின பெருமாளையும் சேர அநுபவித்து, இங்ஙனே ஸந்தோஷித்தான்—

"ஏகம் வேதவதீதீரே ஹஸ்திஶைலே ச த்ருஶ்யதே ।
உபாயமுபேயம் ச ஸ்வயம்வ்யக்தம் பரம் பதம் ॥" என்று.

இப்படி ப்ரஹ்மா ஹர்ஷப்ரகர்ஷபரவசனாய் முகிழ்த்த வுடம்பும் பனியரும்பின கண்களும் தழுதழுத்த மிடறும், தளர்ந்த நிலையுமாய்க் கொண்டு, தன் அதிகாரச்சுமையை மறந்து, அடிமையிலே அடிகொண்டு, ஸ்தோத்ரம் வரனை விண்ணப்பம்செய்ய, ப்ரஸாதஸம்முகரான பெருமாள் 'உனக்கு வேண்டின வரம் கொள்வாய்' என்றருளிச் செய்தார்.

வரம் வரய பத்ரம் தே யதாபிமதமாத்மந: ।
ஸர்வம் ஸம்பத்ஸ்யதே வாஞ்சிதம் த்வயி த்ருஷ்டிபதம் கதே ॥

எந்நிலமும் குரத்தால்குறிசெய்த வெழிற்பரி கொண்டு
அன்னமுயர்த்த செய்யோனன்று
வேள்வி செய்வேதியின் மேல்
முன்னிலையாகிய மூர்த்தியுடன் நான்முக! மற்றுமுனக்கு
என்னவரம் தருவோமென்று நாதனியம்பினனே. 23.

அப்பொழுது ப்ரஹ்மாவும் 'நித்யஸூரிகள் ஸதா தர்சனம் பண்ண யோக்யமான தேவரீருடைய திருமேனியை நான் கண்டநுபவிக்கப் பெற்ற இதொழிய வேறு எனக்கு வேண்டுவது ஒருவரமுண்டோ? *ஸம்ஸாரிகள் [1]"பொய் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மை இனி

[1] தி. வி. 1. *'அதொழிய' என்று அதிகம்—ஜ.

யாம் உருத்தபடி'' இங்கே தேவரீர் நித்யஸந்நிஹிதராய் நின்று வேண்டுவார்க்கு வேண்டும் வரம்கொடுத்து வாழ்வித்தருளவேண்டும்' என்று விண்ணப்பம் செய்தான்.

‘‘வைகுண்டே த்வயா லோகே யதைவ க்ஷீரஸாகரே
தயா ஸத்யவ்ரதக்ஷேத்ரே நிவாஸோஸ்து ஸதைவ ஹி ||
ஸர்வேஷாமேவ ஸத்வாநாம் ஸர்வகாலஸுகப்ரத: |
ஸர்வாபீஷ்டப்ரதோ தேவ ஸர்வகாலம் நராதிப ||’’

என்று இப்படி ஸர்வகாலத்திலும் *ஸர்வப்ராணிகளும் ஸாக்ஷாத்கரிக்கலாம்படி கோலம் செய்து †இங்கே எழுந்தருளியிருக்கவேண்டும் என்று விண்ணப்பம் செய்ய,

‘தேவதேவஸ்ய வசநம் ச்ருத்வா ப்ரீதாத்மநா மயா |
அத்ரைவ நிவஸிஷ்யாமி ஸத்யமேதத் ப்ரவீமி தே ||’

என்று இப்படிப் பெருமாள் அருளிச் செய்கையாலே க்ருதார்த்தனான ப்ரஹ்மா க்ருதுச்ரேஷ்டத்தைத் தலைக்கட்டி, காதயாமாஸ ... ப்ரீதியாலே ஸம்பூர்ணமனோரதனாய் பண்ணி, பரமஹம்ஸரான மஹர்ஷிகளைக் குறித்துத் தான் பண்ணின அச்வமேதக்ருதுவாகிய வாஜபேயக ஸமாராதனத்தை ஸங்கிரஹித்து உபதேசித்தான்.

சென்றுமலர் பறித்தென் நாதன் சேவடிப் போதுகந்து
நன்றென நீர்சுடர் தூப நன்முகவாச விலைகொடுத்துக்
கன்னலிலட்டுவத்தோடன்னம் சீடைக்கறி படைத்துப்
பின்னும் செபித்தவன் ‡பாதம்பணிமின்கள் என்
[றனனே. 24

*ஸர்வப்ராணிகளும்—க. †இங்ஙனே—க. ‡பாதமெண்ணுங்கள் முனிகளென்றான்—வ.

அநந்தரம் பெருமாளும் அதிஸந்துஷ்டராய், 'ப்ரஹ்மாவே! உனக்கு நான் தந்த அதிகாரக்குறை தீரும்படி ஸரஸ்வதீ ஸாவித்ரிகள் முதலான யுவதிகளுடனே உன்னுடைய லோகத்தேறச் சென்று, அதிகாரஶேஷத்தை நடத்துவாய்' என்றருளிச் செய்ய, ப்ரஹ்மாவும் அஜ்ஞாநாவ்ருதலோகங்களுக்கு மேலான ஸத்ய லோகத்திலே சென்று ஸத்த்வோத்தரக்ஷேத்ரமாஹாத்ம்யத்தையும் ஸத்த்வோத்தரரான பெருமாள் திருவருளையும் அநுஸந்தித்துக்கொண்டு, ஸம்பூர்ண ஹர்ஷப்ரகர்ஷ ஸஹிதஸாமக்ரீவிஶேஷத்தாலே க்ருதார்த்தனாயிருந்தான்.

ஆழிநிலை வினைகடிவானயமேத முடிந்ததற் பின்
வேழமலை நாயகனார் விடைகொடுக்க விண்ணேறி
நாழிகையில் வானவரை மாற்றியிடு நான்முகன்தான்
ஊழியெலா மழியாத யோகமடைந்திருந்தானே. 25.

ஆதியுகத்தயன் கண்டிட நின்றவருள் வரதர்
காதலுயர்த்த களிற்றைத் திரேதையில் காத்தளித்து
வாதுயர் தேவகுருவுக்கிரங்கித் துவாபரத்தில்
சோதியநந்தன் கலியில் தொழுதெழ நின்றனரே. 26.

புண்டரீக முயர்த்த புராணனார்
பொய்யின் மாமக வுத்தரவேதியில்
கொண்டலா ரருள்மாரி பொழிந்திடக்
கொண்டதோ ருயர்கூர்மதி யன்பினால்
பண்டை நான்மறை மௌலி படிந்த நான்
பாரில் மெய் விரதக் கவி பாடினேன்
தொண்டை மண்டல வேதியர் வாழவே
தூய தென்மறை வல்லவர் வாழவே. 27.

உய்விரத மொன்றின்றி அடைந்தா ருய்ய
ஒருவிரதம் தான்கொண்ட உயர்ந்த மாலைச்
செய்விரதம் ஒன்ருலும் தெளிய கில்லாச்
சிந்தையினல் திசைபடைத்த திசைமுகன் தான்
பொய்விரத நிலமெல்லாம் போயே மீண்டு
புகலிதுவே புண்ணியத்துக் கென்று சேர்ந்த
மெய்விரத நன்னிலத்து மேன்மை யேற்றி
வேதாந்த வாசிரியன் விளங்கினனே. 28.

சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
தாராரருளாளர் தாள் நயந்து—சீராக [தான்
மெய் விரத நன்னிலத்து மேன்மையிது மொழிந்
கையில் கனிபோலக் கண்டு.

கவிகதககண்டீரவஸ்யைஷா-
ஶாஸ்த்ரீ ஶ்லோகஸஹநீயா ।
ஸத்யவ்ரதமாஹாத்ம்யம் வ்யதநோத
ஶ்ருதிதயிதி வேங்கடேஶார்ய: ॥

இதி கவிதார்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீ ஹஸ்திகிரிமாஹாத்ம்யம் ஸம்பூர்ணம் ॥



# ஹஸ்திகிரி மாஹாத்ம்யம்.

## 𑌪𑍁𑌰𑌾𑌣𑌸𑍂𑌚𑍀

# தமிழ் ப்ரமாணங்கள்.

## ஹஸ்திகிரிமாஹாத்ம்யப் பாசுரங்கள்.

# பெயர்கள்.



---

# தமிழ் பிரமாணங்களின் அகாராதிஸூசிகை.

ப்ரமாணஸங்க்ரஹம் i. ஸம்ஸ்க்ருதம்.

## பிரமாணஸங்கிரஹம் ii— தமிழ்.



*கிரந்தத்தின் பெயர் குறிப்பிடாமல் கீழே ஸங்கியை கொடுத்திருப்பதெல்லாம் திருவாய்மொழிப் பாசுரங்கள் என்று ஸங்கேதம்.

## தேசிகனுடைய ஶ்லோகங்கள்.

---



## அம்ருதாஸ்வாதிநி பாசுரங்கள் —ii

## பெயர்கள்.

* சன்னவீரம் = முகப்புவைத்த முக்தாஹாரம்.

ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன்

அருளிச்செய்த

# ஸ்ரீபரமபதஸோபாநம்.



A. ஸ்ரீநிவாஸராகவன், M.A.,
புதுக்கோட்டை.

1938.

விலை அணா ஆறு.

# விஷயஸூசிகை.

ஸ்ரீ:

# பதிப்புரை.

ஸ்ரீபரமபதஸோபாநம் என்ற ரஹஸ்யம் இதற்கு முன் மூன்று நான்கு தடவைகளில் அச்சிடப்பட்டிருந்தாலும், அதன் உபயோகத்தையும் பெருமையையும் உத்தேசித்தே அடியேன் இப்போது பதிப்பிக்கத் துணிந்தேன். ஸ்ரீதேசிகனுடைய முப்பத்திரண்டு ரஹஸ்யங்களையும் கிடைத்தமட்டில் இம்முறையில் நன்றாக சோதித்துப் பதிப்பிக்கவேண்டும் என்ற விருப்பம் இருப்பதாலும் ஸாரஸாரம் முதலான பதினொரு சில்லறை ரஹஸ்யங்களோடு ஹஸ்திகிரி மாஹாத்ம்யத்தைச் சேர்த்தது போல் இதையும் சேர்த்து வெளியிடுகிறேன். பல இடங்களில் சிறந்த பொருளையுடைய மிகவும் ஸரியான புதிய பாடங்கள் கிடைத்ததும் ஒரு காரணம்.

ஸ்ரீதேசிகனுடைய கிரந்தங்கள் அழகாகவும் சுத்தமாகவும் வெளிவந்து உலகில் பரவவேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு மாத்ருகையை சோதித்தும், ப்ரமாணங்களுக்கு ஆகரங்களைத் தேடிக்கொடுத்தும், கஷ்டமான இடங்களில் பொருளை விளக்கியும் புஸ்தகம் அச்சானபிறகு பின்னுமொருமுறை சோதித்தும் இப்படிப் பலவாறாக அடியேனுசார்யரான திருக்கோட்டியூர் ஸ்ரீ. உ. வே. ஸௌம்யநாராயணுசார்யஸ்வாமி செய்தருளின உபகாரத்திற்கு அடியேன் க்ருதஜ்ஞதையை ஸப்ரணமம் வெளியிடுவது தவிர செய்யக்கூடியது வேறில்லை.

உபயோகிக்கப்பட்ட கிரந்தங்கள்.

1. திருக்கோட்டியூர் ஸ்ரீஸ்வாமி திருமாளிகையில் இருக்கும் சுத்தப் பிரதியான ஓலையேடு. இதுவே ப்ரதானமாகக் கொண்டு மூலத்தில் போடப்பட்டிருக்கிறது.

2. கும்பகோணம் ஸ்ரீ கோமளாம்பா ப்ரஸ்ஸில் சின்னமு ரெ. ஸ்ரீநிவாஸபாட்ராசார்யஸ்வாமியால் அச்சிடப்பட்டது. (1931)—க என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

3. கொ. ஸ்ரீநிவாஸராகவாசார்யஸ்வாமியால் பரிசோதிக்கப்பட்டு சென்னை ஸ்ரீ நிகேதன அச்சுக்கூடத்தில் பதிக்கப்பட்டது. (1897)—வ.

4. மஹாமஹோபாத்யாய சேட்டலூர் ஸ்ரீ நரஸிம்மா சார்யஸ்வாமியால் இயற்றப்பட்ட தமிழ் மொழி பெயர்ப்புடன் கலாரத்நாகரம் முத்ராக்ஷர சாலையில் அச்சிடப்பட்டது (1926)—ரு.

5. ஸ்ரீ பவுண்டரீகபுரம் ஸ்ரீஸ்வாமி ஆச்ரமத்தில் உள்ள ஓலையேடு—வ.

முதலாவது தவிர மற்ற எல்லாவற்றிலும் பாடங்கள் பெரும் பாலும் ஒரேமாதிரியாயிருப்பதால் அவை எல்லாவற்றையும் 'க' என்று காட்டிவிட்டு, அவைகளுக்குள் இருக்கும் பேதங்களை மட்டும் அந்தந்த அக்ஷரங்களால் காட்டியிருக்கிறேன். தவறாக ஏதாவது விடப்பட்டிருப்பின் தேசிக பக்தர்கள் க்ஷமிப்பார் களாக.

முகவுரை எழுதும்போதும் க்ரந்தம் அச்சாகும்போதும் முழுவதும்பார்த்து பல சிறந்த யோசனைகளைக் கூறின ஸ்ரீரங்கம் ஸ்ரீ. உ. வே. கோவிந்தாசார்யஸ்வாமிக்கும் ஸுஹ்ருத்தான ஸ்ரீ கோபால அய்யங்கார் ஸ்வாமிக்கும் அடியேன் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.

ஆகரம் தெரியாத பல சுலோகங்கள் தனியாக எடுத்து அச்சிடப்பட்டிருக்கின்றன. எதற்காவது ஆகரம் தெரியுமானால் அறிஞர்கள் அடியேனுக்கு அறிவித்து உபகரிக்கவேண்டும் என்று ஸவிநயம் ப்ரார்த்திக்கிறேன்.

புதுக்கோட்டை,<br>14—3—38

ஸ்ரீநிவாஸராகவன்.

ஸ்ரீ:

# முகவுரை.

இவ்வுலகில் பரஸ்பரம் அபிப்பிராயபேதமுள்ள பல மதங்கள் இருந்தபோதிலும், 'ஸம்ஸாரத்தில் ஸுகம் அல்பமாயும் துக்கம் மிகுதியாயும் இருப்பதால், இதை விட்டு அளவற்ற ஆநந்தத்தை அடைய முயற்சிப்பதே விவேகியான ஒருவன் செய்யத் தக்கது' என்று நிர்ணயிப்பதில் அவை எல்லாம் ஏகமனதாகவே இருக்கின்றன. ஆனால் அவை கைக்கொண்ட பிரமாணங்களுக்கேற்பப் புருஷார்த்தங்கள் வேறுபட்டிருக்கின்றன. வேதத்தைப் பிரமாணமாகக்கொண்ட வைதிக மதங்களுக்குள்ளேயே இவ்விஷயத்தில் பேதமிருக்கிறது. அத்வைதம் முதலிய மதத்தினர் சில சுருதி வாக்கியங்களைப் பிரதானமாகக்கொண்டு, அவற்றுக்கநுகுணமாக மற்ற வாக்கியங்களை மாற்றி அர்த்தம் செய்தார்கள். விசிஷ்டாத்வைதிகளோவெனில், 'ப்ரஹ்மம் ஒன்றுதான் உள்ளது' என்கிற அபேத சுருதிகளுக்கும், 'ப்ரஹ்மம் வேறு, ஜீவர்கள் வேறு' என்பதுபோன்ற பேதசுருதிகளுக்கும், 'ஸகலசேதநாசேதனங்களுக்கும் ஆத்மாவான ப்ரஹ்மம் ஒன்றே' என்கிற கடகசுருதிகளுக்கும், ஒருவித விரோதமும் வராமல், ஸகல வாக்கியங்களுக்கும் முக்யார்த்தத்தையே கொண்டு, வேத தாத்பர்ய நிர்ணயத்தைச் செய்தார்கள். அதனால் மற்ற ஸித்தாந்தங்களைக் காட்டிலும் இந்த ஸித்தாந்தத்திற்கு ஏற்றமுண்டு.

இப்படிப்பட்ட நம் ஸித்தாந்தத்தில் முக்கியமாக ஒருவன் தெரிந்துகொள்ளவேண்டியது தத்வம், ஹிதம், புருஷார்த்தம் என்ற மூன்றுமே. ஸகல சேதநாசேதநங்களையும் சரீரமாகக் கொண்ட ஜகத்காரணமான ஸ்ரிய:பதியான நாராயணனே பரதத்வம்; அவனுக்குப் பிரஸாதகமான பக்தி அல்லது ப்ரபத்தியே பரமஹிதம்; இவ்வுபாயத்தினால் ப்ரஸன்னனான பகவானை அடைந்து உபயவிபூதி விசிஷ்டனான அவனை அநுபவித்து அவனுக்குக் கைங்கர்யம் செய்துகொண்டிருப்பதே பரமபுருஷார்த்தம்.

இந்தப் பரம புருஷார்த்தமான பரிபூர்ண ப்ரஹ்மாநுபவம் பரமபதம் அல்லது ஸ்ரீவைகுண்டம் என்னும் பெயருடைய தேச விசேஷத்தில் சென்றவனுக்கு உண்டாகிறதென்பதும் சாஸ்திரங்களிலிருந்து கிடைக்கிறது. [1]'அது ரஜஸ் என்னும் ப்ரக்ருதிக்கு மேல் உள்ளது' என்றும், [2]'தமஸ்ஸுக்கும் அப்பால் இருக்கிறது' என்றும் சுருதிகள் ஓதுகின்றன. அப்படியே [3]'அது விஷ்ணுவினுடைய பரமமான பதம்,' [4]'விஷ்ணுவினுடையதான அந்தப் பதத்தை ஸூரிகள் எப்போதும் பார்த்துக்கொண்டே இருக்கிறார்கள்,' [5]'அது அக்ஷரமான பரமவ்யோம அல்லது பரமாகாசம்,' [6]'அது தேவர்களான நித்யஸூரிகள் நகரமான அயோத்யை,' [7]'அது பரப்ரஹ்மத்தின் உலகம்,' இதுமுதலான வாக்கியங்களும் அவ்வுலகையேகூறுகின்றன. வேதார்த்தங்களை வ்யாக்யானம் செய்துவந்த இதிஹாஸபுராணங்களும் அவ்வுலகத்திற்கு [8]'வைகுண்டம்' என்று பெயர் என்றும், [9]'அது ஸூரியன் அக்நி இவர்களுடைய தேஜஸ்ஸைக் காட்டிலும் மிகவும் ப்ரகாசமானது' என்றும், [10]"அவை ஞானநந்தமயமான உலகங்கள் என்றும்,' [11]'அதன் பெருமையை அறிந்தவனுக்கு ஸ்வர்க்காதி

---

1 ரஜஸ꞉ பராகெ (தை. ஸம். 2. 1. 12.)

2 தமஸ꞉ பரஸ்தாத் (புருஷஸூக்த)

3 தத்³விஷ்ணோ꞉ பரமம் பத³ம் (கடோப)

4 தத்³விஷ்ணோ꞉ பரமம் பத³ம் ஸதா³ பஶ்யந்தி ஸூரய꞉ (ந்ருஸிம்ஹதாபநீய)

5 தத³க்ஷரே பரமே வ்யோமந்

6 தே³வாநாம் பூரயோத்⁴யா (தை. ஆர. 1. 2. 7.)

7 ப்³ரஹ்மலோகே த்ருதீயஸ்யாமிதோ தி³வி (கௌஷீதகி) (ப்ரஜாபதேஸ்ஸபா⁴ம் வேஶ்ம—ஶா.)

8 லோகம் வைகுண்ட²நாமாநம்

9 அத்யர்காநலதீ³ப்தம் தத்

10 ஜ்ஞாநாநந்த³மயா லோகா꞉

11 ஸநிதெ ஷெவ நிரயாஸ்தூத

லோகங்கள் எல்லாம் நரகதுல்யங்களாம்' என்றும், [12]'அங்கு காலத்தினுல் ஏற்படும் வேறுபாடுகள் ஒன்றும் கிடையாது' என்றும் விரித்து உரைக்கின்றன.

இதை அடைந்தவர்கள் மறுபடியும் ஸம்ஸரிக்கமாட்டார்கள் என்பதும் கூறப்பட்டிருக்கிறது.

பகவதநுக்ரஹத்தால் ஸர்வஜ்ஞர்களான ஆழ்வார்களும் அவற்றை அடியொற்றி இந்நாட்டைப் பற்றி, 'சேணுயர் வானம்,' 'தெளிவிசும்பு,' 'மாக வைகுந்தம்,' 'நலமந்தமில்லதோர் நாடு,' 'கலங்காப் பெருநகரம்,' என்று அருளிச் செய்தார்கள். புநராவ்ருத்தி இல்லை என்பது 'பிணை கொடுக்கிலும் போகவொட்டார்' என்பதால் காட்டப்பட்டது. இவ்விஷயங்களை சுருக்கமாக ஆளவந்தார் பட்டர் முதலான பூர்வாசார்யர்கள் தங்கள் ஸ்தோத்ரங்களிலும், ஸ்ரீ பாஷ்யகாரர் வைகுண்டகத்யத்திலும் அநுஸந்தித்துள்ளார்கள்.

இப்படிப்பட்ட பரமபதம், இதையடையும் வழி, அதைப் பெறும் அதிகாரிக்கு வேண்டிய குணங்கள் இவையே அத்யாத்ம சாஸ்திரங்களில் கூறப்படுகின்றன. ஶாரீரகஸூத்ரம் முதல் இரண்டு அத்யாயங்களால் பரப்ரஹ்மத்தையும், மூன்ருவதால் உபாயமான உபாஸநத்தையும் நான்காவதால் பலத்தையும் கூறிற்று. பகவத்கீதை உபாயமான பக்தியோகத்தை அதன் அங்கங்களோடு கூட விஸ்தாரமாக உபதேசித்து, அதில் சக்தியற்றவனுக்கு சுலபமான ப்ரபத்தி என்னும் மற்ருெரு உபாயத்தையும் காட்டிக் கொடுத்தது. பகவச்சாஸ்திரங்கள் இந்தப் பிரபத்தியின் அங்கங்களையும் அது ஸகலபலஸாதனம் என்பதையும் விரித்து உரைத்தன.

இப்படி அநந்தமான அத்யாத்ம சாஸ்திரங்களில் அங்கங்கு சிதறியும் சுருங்கவும் பரக்கவும் கிடக்கும் விஷயங்களையெல்லாம் அளவுபெற்ற பலம், ஞானம், ஆயுள், முதலியவற்றையுடைய நாம் அறியமுடியாததை அறிந்து நம் ஆசார்யச்ரேஷ்டரான ஸ்ரீ வேதாந்ததேசிகன் அவற்றைக் கடைந்து ஸாரமான அர்த்

12 ந காலஷத்ர வெ வுஹ

தங்களைத் தன் ரஹஸ்ய க்ரந்தங்களில் நிரூபித்தருளினார். அவை யும் ஸர்வாதிகாரமாக இருக்கவேண்டும் என்று அவற்றை மணி ப்ரவாள நடையில் அருளிச் செய்தார். ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரத் தில் எல்லா விஷயங்களும் விஸ்தாரமாக ப்ரமாணம், உபபத்தி, ஸம்ப்ரதாயம் இவற்றைக்கொண்டு நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. இவ்வர்த்தங்களில் சிலவற்றை ஒரு ரஹஸ்யத்திலும், வேறு சில வற்றை வேறொன்றிலும் ப்ரதானமாகக் காட்டியிருக்கிறார். உதாரணமாக ஸாரஸாரத்தில் முமுக்ஷுவுக்கு உத்தாரகமான மூலமந்த்ரம் முதலான ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தத்தை ஸங்க்ர ஹித்தார். அபயப்ரதானஸாரத்தில் ப்ரபத்தியால் வசம் செய்ய வேண்டிய சரண்யனுடைய வைபவம் கூறப்பட்டது. ரஹஸ்ய சிகாமணியில் ப்ரபன்னர்களுக்கு அந்திமஸ்ம்ருதி ஸ்வயத்நத்தா லேயே அடையவேண்டியதொன்றன்று என்பதும் அஞ்ஜலி வைபவத்தில் ப்ரபத்தி ஸகலபாபத்தையும் போக்கும் என்பதும் காட்டப்பட்டது. பரமபதஸோபானத்தில் உபாயத்தை அநுஷ் டித்தஅதிகாரி இங்கும் பரமபதத்திலும் பெறும் லாபங்கள் விசேஷித்து விஸ்தாரமாக வர்ணிக்கப்படுகின்றன.

இந்தப் பரமபதஸோபாநத்தில் கூறப்படும் விசேஷங்கள் ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களில் பக்தியோகநிஷ்டனுக்கே சொல்லப் பட்டிருந்தாலும், ப்ரஹ்மவித்யைகளில் ஒன்றான ந்யாஸவித்யை யை அனுஷ்டிக்குமவனுக்கும் அவ்விசேஷங்கள் வரும் என்ப தில் ஆக்ஷேபம் இல்லை. ஆனால் இதில் விசேஷித்துக் கூறப்படும் கதிசிந்தநமானது பக்தியோகநிஷ்டனுக்கு உபாயாங்கமாக விதிக்கப்பட்டது. கதிசிந்தனமாவது: ஒரு ஜீவன் ஹ்ருதயத்தி லிருந்து மேலே செல்லும் நாடிகளில் மோக்ஷத்திற்கு வழியான மூர்த்தந்ய நாடியால் சென்று, ப்ரஹ்மரந்த்ரத்தின் வழியாக வெளிக்கிளம்பி ஸூர்யமண்டலத்தைப் பிளந்துகொண்டு அர்ச்சி ராதிகதியால் சென்று, ஸ்ரீவைகுண்டத்தை அடையும் ப்ரகாரத் தையும் அவனுக்கு வழியில் நடக்கும் விசேஷங்களையும் கடைசி சரீரத்தை விடுமளவும் மற்ற நிகழ்ச்சிகளையும் தினமும் சிந்திப்ப தேயாகும். இவ்வர்ச்சிராதிகதியும், இதனால் சென்று அடையும் பரமபதம் என்னும் நாடும், அந்நாட்டிலுள்ள பொருள்களின் ஸ்வரூபஸ்வபாவங்களும் சாந்தோக்யம் ப்ருஹதாரண்யகம்,

கௌஷீதகி முதலான உபநிஷத்துக்களிலும், சாகடாயந ஸம்ஹி தை ஜிதந்தே முதலான பகவச்சாஸ்த்ரங்களிலும் வர்ணிக்கப் பட்டிருக்கின்றன. ஆழ்வார்களும், 'சூழ்விசும்பணிமுகில்'என்னும் (பத்தாம்பத்து ஒன்பதாவது திருவாய்மொழி) பதிகத்தில் அவர்களுள் ப்ராதனரான நம்மாழ்வாரும் இந்நாட்டையும் அங்கு செல்லும் முக்தனுக்கு நடக்கும் உபசாரங்களையும் அருளிச் செய்துள்ளார்கள். ஸம்ஸ்க்ருத-த்ராவிட வேதங்களி லும் மற்ற சாஸ்திரங்களிலும் கூறினதைத்தொகுத்து வைகுண்ட கத்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அநுஸந்தித்தார்.

இப்படி கதிசிந்தன விஷயமாக ஆழ்வார்களும் பூர்வாசார்யர் களும் கூறிய விஷயங்களையெல்லாம் ஸப்ரமாணமாக ஆழ்வார் களினுடைய அருளிச் செயல்களைக் கொண்டே தொடுத்து ஸ்ரீ தேசிகன் பரமபதஸோபாநம் என்னும் ரஹஸ்யமாக வெளியிட் டருளினர். பக்தனுக்குப்போல ப்ரபந்நனுக்கு இந்த கதிசிந்தநம் வித்யைக்கு அங்கமாய் அனுஷ்டிக்கதேயாகவேண்டும் என்று விதி இல்லாவிட்டாலும்,ப்ரபந்நன் ஸம்ஸாரதோஷத்தைக்கண்டு அதில் வெறுப்படைவதற்காவும் தன்னுடைய அல்ப உபாயத்திற்காக இவ்வளவு பெருமையையும் தந்தருளுகிற பகவானுடைய குணங் களை நினைத்து ஸந்தோஷிக்கவும், உபாயபலமாகத் தான் பெறப் போகும் புருஷார்த்தங்களை நினைத்து பேராநந்தம் அடைவதற் காகவும், அப்பேர்பட்ட எல்லையில் பேரின்பத்தை உடனே பெற வேண்டும் என்று ஆவலும் த்வரையும் ஏற்படுவதற்காகவுமே ப்ரபந்நனுக்கு இது கூறப்படுகிறது.

பட்டர் தன் அந்திம தசையில், "இன்னும் சிறிதுகாலம் இங்கே விட்டுவைத்தாராகில் பரமபதத்திற்குச் சுருளும்படியும் கட்டி வைக்கேனே ?" என்று அருளிச் செய்தாராம். ஸ்ரீ தேசி கன் இதற்கு 'பரமபதஸோபாநம்' என்ற பெயர் வைத்ததை யும், விஷயங்களை ஒன்றின்மேல் ஒன்றாக படிகள் போல நிரூபித் திருப்பதையும் பார்த்தால், இந்த ஐதிஹ்யம் மனத்தில் ஓடி பட்டர் திருவுள்ளத்தைப் பூர்த்திசெய்ய நினைத்தே இப்பிரபந்தத் தைச் செய்தருளினர் என்று சொல்லலாம்போலிருக்கிறது. மோக்ஷமென்னும் உயர்ந்த ஸ்தானத்தை கஷ்டமான வழி

களால் அடையமுடியாத அசக்தர்கள் ஒவ்வொரு படியாக எளிதில் ஏறி அதை அடையும் ப்ரகாரத்தையும், முதல்படியில் ஏறினவனே இரண்டாம்படியில் ஏறமுடியும் என்பதையும் இப் பிரபந்தத்தாலும் இதன் பெயராலும் காட்டுகிறார்.

பரமபதஸோபாநம் (அல்லது பரமபதத்தைக் கிட்டுவிக்கும் படிகள்) என்னும் இந்த ரஹஸ்யம் ஒன்பது பர்வங்கள் கொண்டது. இவற்றுள் முதல் நான்கையும் 'அதிகாரபேடிகை' என்று ஒரு வகுப்பாகவும், ஐந்தாவதை 'உபாயபேடிகை' என்றும், கடைசி நான்கையும் 'புருஷார்த்த பேடிகை' என்று ஒரு வகுப்பாகவும் பிரிக்கலாம். அதிகார பேடிகையில் சொன்ன குணங்கள் கொண்டவனே உபாயபேடிகையில் சொன்ன உபாயத்தை அநுஷ்டிக்கலாம்; அவ்வுபாயத்தை அநுஷ்டித்தவனுக்கே புருஷார்த்தபேடிகையில் சொன்ன பயன் கிட்டும். அதாவது ஒரு ஜீவாத்மா விவேகத்தை ஸம்பாதித்து, அதனால் நிர்வேதத்தை அடைந்து, விரக்தியைக் கைக்கொண்டு, பீதியுள்ளவனாய், பகவத்ப்ரஸாதகமான உபாயத்தை அநுஷ்டித்து, சரீராவஸாநத்தில் இச்சரீரத்திலிருந்து உத்க்ராந்தியைச் செய்து, அர்ச்சிராதிகதியாலே சென்று, திவ்யதேச ப்ராப்தி பெற்றவனாய், பராபதி என்னும் பரமபுருஷ லாபத்தைப் பெறும் ப்ரகாரமே இவ்வொன்பது பர்வங்களிலும் நிரூபிக்கப்படுகிறது.

i. இதில் முதல்படி விவேகம்: அசேதனம், சேதனம், ஈச்வரன் என்ற மூன்று தத்வங்களின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிந்து 'தானும் பிறரும் தனக்கு சேஷியும் தஞ்சமும் போக்யமும் அன்று' என்று நிச்சயிப்பது.

ii. இரண்டாவது நிர்வேதம்: அதாவது ஸதாசார்யோபதேசத்தால் விவேகம் பெற்றவன் தான் இவ்வளவு நாட்களாக அர்த்தகாமங்களுக்காக மனம்போனபடி செய்த பாபங்களையும் அதன் பலமாக வரும் நரகயாதனைகளையும் சாஸ்த்ரங்களிலே கேட்டு மனம் தளர்ந்து இனி பாபத்தைச் செய்வதில்லை என்று அதிலிருந்து நீங்குவது.

iii மூன்றாவது விரக்தி. ஐச்வர்ய கைவல்யங்களின் தோஷத்தைக் கண்டு அவற்றில் ஆசையை விடுவது, பாபத்

தைச் செய்யாததினால் நரகத்தை ஸம்பாதிக்காமற்போனாலும் அல்பஸுகமுள்ள ஸ்வர்க்காதிகளில் ஆசை ஏற்பட்டால் அதனால் பேரின்பமான மோக்ஷத்திற்கு விக்னமும் விளம்பமும் உண்டாகும். சரீரத்தின் நிலையிலும், சரீரம் படைத்தாருக்கெல்லாம் அதிபர்களான சக்ரவர்த்திகளுடைய பதங்களிலும் அப்படியே தேவதைகள், அவர்களுக்குத் தலைவர்களான லோகபாலகர்கள், அவர்களை வெருட்டியடிக்கும் ராவணன் போல்வார், அவர்களையும் கட்டியடிக்கும் வலிமையுள்ள கார்த்தவீர்யன் முதலானோர், இவர்களையெல்லாம் அழிக்கவல்ல ருத்ரன், அவனுக்கும் தந்தையான ப்ரஹ்மா எல்லாருடைய ஸ்தானங்களிலிருக்கும் ஆபத்து அழிவு முதலான துன்பங்களை உணர்ந்து அவற்றில் ஆசையை விட வேண்டியது இதில் கூறப்படுகிறது.

iv நான்காவது பீதிபர்வம். இப்படி விவேக நிர்வேத விரக்திகளைக் கைக்கொண்டவன் நரகத்தைப் போலவே ஸ்வர்க்கத்தையும் இகழ்ந்து, எங்கும் துக்கத்தைக் கண்டு நடுங்கி மோக்ஷத்தைத் தரக்கூடிய உபாயத்தை அநுஷ்டிக்க ஊக்கமும் பரபரப்பும் உடையவனாவான்.

v. அவ்வுபாயத்தைக் கூறுகிறது ஐந்தாவதான ப்ரஸாதநபர்வம். அந்த உபாயம் பக்தி ப்ரபத்தி என்று இரண்டு. பக்தியை அநுஷ்டிப்பதற்கு ஞானம், சக்தி, ஜாதி முதலிய பல குணங்கள் வேண்டும். பலமும் சீக்கிரத்தில் கிடைக்காது. இதெல்லாம் இல்லாதவர்களுக்கே ப்ரபத்தி அல்லது சரணாகதி என்னும் உபாயம் என்றும், இதைச் செய்வோர்களுடைய நோவுக்குத் தக்கபடி மோக்ஷம் சீக்கிரத்தில் கிடைக்கும் என்றும், இதில் கூறப்படுகிறது.

vi. புருஷார்த்த பேடிகையான அடுத்த நாலில் முதலாவது உத்க்ரமண பர்வம். இதில் தன் கடைசி சரீரத்தை விட்டு ஜீவாத்மா பிரிந்து செல்லும் பிரகாரத்தை நிரூபிக்கிறார். ப்ரபந்நனுக்கு உத்தராயணம் புண்யஸ்தலம் முதலானவற்றில்தான் இறக்கவேண்டும் என்று நியமமில்லை. இவனுடைய புண்ய பாபங்களெல்லாம் இவனுடைய மித்ர சத்ருக்களுக்குப் பிரித்துக் கொடுக்கப்படுகின்றன. கடைசி க்ஷணத்தில் பகவானை ஸ்மரிப்

பது என்னும் அந்திம ஸ்ம்ருதியை பகவானே செய்துவைத்து பதினொரு இந்திரியங்கள், மனஸ், ப்ராணன் இவற்றை முறையே ஒன்றுசேர்த்து, அத்திரளை ஜீவனிலும், இவற்றோடுகூடின ஜீவனை பஞ்சபூத ஸூக்ஷ்மத்திலும் சேர்த்து, ஹ்ருதயத்திலிருக்கும் தன்னிடம் இளைப்பாற்றுகிறான். பிறகு மேல் நோக்கிச் செல்லும் ஸுஷும்நை என்னும் ப்ரஹ்மநாடியால் ஹ்ருதயத்திலிருக்கும் ஸூக்ஷ்மத்வாரம் வழியாக இவனைக்கொண்டு சென்று ப்ரஹ்மரந்த்ரம் என்ற தலைவாயிலைத் திறந்துகொண்டு புறப்பட்டு வைகுந்தம்புக வழிப்படுத்துகிறான்.

vii. ஏழாவதான அர்ச்சிராதி பர்வத்தில் சரீரத்தைவிட்டுக் கிளம்பின ஜீவாத்மாவுக்கு வைகுண்டத்தை அணுகும்வரையில் நடக்கும் உபசாரங்களை வர்ணிக்கிறார். அர்ச்சிஸ் அல்லது அக்னி, பகல், சுக்லபக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், வாயு இந்த தேவதைகளெல்லாரும் இவனை எதிர்கொண்டு க்ரமமாக தம்தம் எல்லையளவும் அழைத்துச் செல்லுகிறார்கள். அதற்கு மேல் ஸூர்யமண்டலத்தைக் கீண்டுபுக்கு சந்திரனைக்கிட்டி அவன் வழிநடத்த அமானவன் துணையாக முறையே வருணன், இந்திரன், ப்ரஜாபதி இவர்கள் அழைத்துச்செல்ல, கடைசியில் அமானவனே இவனை ப்ரஹ்மத்தினிடம் கொண்டு சேர்க்கிறான். இவ்வழியாலே ப்ரக்ருதியைக் கடந்தவனுக்கு மறுபடி பிறவி கிடையாது.

viii. எட்டாவது பாவம திவ்யதேசத்தை அடையும முகதனுக்கு உண்டாகும் விசேஷங்களை வர்ணிக்கிறது. விரஜையைக் கடந்ததும் ஞானாநந்தமயமான உலகத்தையும் அதிலுள்ள ஆறு, மலை, மாளிகைகள் எல்லாவற்றையும் காண்கிறான். ஐந்நூறு அப்ஸரஸ்ஸுக்கள் எதிர்கொண்டு ப்ரஹ்மாலங்காரத்தால் அலங்கரிக்க, ப்ரஹ்மத்தினுடைய திவ்யகந்தம் ரஜஸ், தேஜஸ் இவனிடம் பிரவேசிக்கும். பிறகு கோபுரவாயிலைக் கடந்து திருவீதியில் நித்யஸூரிகளும் மதிமுகமடந்தையரும் சூழ்ந்து உபசரிக்கச் சென்று, திருமாமணி மண்டபத்தில் முக்தரும் கருடவிஷ்வக்ஸேனாதிகளான நித்யரும் புடைசூழ ஆதிசேஷன்மேல் நாய்ச்சி

மார்களோடு வீற்றிருக்கும் பரமபதநாதனைக்கண்டு வணங்கு கிறான்.

ix. ஒன்பதாவது பர்வம் முக்தன் இப்படி வீற்றிருக்கும் பகவானோடு சேர்வதைக் கூறுகிறது. அந்த பகவானுடைய திருமேனியழகிலும் அவயவசோபையிலும் ஆபரணச் சேர்த்தி யிலும் ஈடுபட்டு ஒவ்வொன்றையும் அனுபவித்து விவிதஸ்தோத் திரங்களைப் பண்ணுகிறான். அப்போது தன் திருவடிகளாலே பகவான் இவனுக்குப் பூமுடி சூட்ட, அத்திருவடிகளையே பற்றி பகவான் எழுந்தருளியிருக்கும் திவ்ய பர்யங்கத்தின்மேல் ஏறி, பகவான் கேட்க, தான் பெற்ற பேற்றையெல்லாம் கூறி மீளா வடிமைப்பணி கொள்ளவேண்டும் என்று ப்ரார்த்திக்கிறான். பிறகு பரமசேஷி திருவருளும் பங்கயத்தாள் திருவருளும்பெற்று பரபக்தி-பரஞான-பரமபக்தியுக்தனாய், அந்த முக்தன் பகவானை வலம்செய்தும், நிழல் போல் அநுஸரித்தும், குடியடிமை செய் தும் சூழ்ந்திருந்து பல்லாண்டேத்தியும், ஸர்வதேசத்திலும் ஸர்வகாலத்திலும் ஸர்வவித கைங்கர்யங்களையும் நித்யஸூரி களோடு கூடத் தானும்செய்து, மீட்சியில்லா வாழ்ச்சியை அனு பவிக்கிறான்.

இப்படி ஒரு ஜீவன் ஆசார்யனைஆச்ரயிப்பது முதல் மோ க்ஷத்தை அடைந்து பரிபூர்ண ப்ரஹ்மானுபவம்செய்யும் வரை யில் நிகழ்வனவற்றைக் கூறும் இப்பிரபந்தத்தை'ஒரு ஜீவாத்மா வின் சரித்திரம்' என்றே சொல்லலாம். இதன் அமைப்பின் சீர் மையையும் அழகையும் கண்டு 'ஸ்வபாவத்தினாலே மிகவும் அழ கானது' (ஸ்வபாவ-சித்ரம்) என்று ஸ்ரீ தேசிகனே ப்ரபந்த மு டிவில் கூறுகிறார். ப்ரமாணங்களை அநுஸரித்து அவை காட்டின முறையில் விஷயங்களை நிரூபித்திருக்கிறபடியால், குயுக்திகளைக் கொண்டு அசைக்க முடியாமல் உறுதியானது என்பதை 'ஸுஸ் தம்' என்று அருளிச் செய்திருக்கிறார்.

இவ்வளவு சிறப்புவாய்ந்த இந்தக் கிரந்தம் ஸ்ரீ தேசிகனு டைய ஆச்சர்யமான பல குணங்களை ஒருங்கே வெளிப்படுத்து கிறது. அநந்தங்களான சுருதிகளிலும் ஸம்ஹிதைகளிலும்அங் கங்கு தனித்தனியே கூறப்பட்ட விஷயங்களையெல்லாம் திரட்டி முமுக்ஷுவான ஒருவனுக்கு அவச்யம் அறியவேண்டியவற்றை

சுருக்கமாக இப்பிரபந்த மூலமாக வெளியிட்டிருப்பது அவர் ஸகல சாஸ்த்ரங்களையும் அறிந்தவர் என்பதையும் பரமகாருணிகர் என்பதையும் காட்டுகிறது. நினைத்தபடி நிர்மாணம் செய்ய வல்லவராயினும் ப்ரமாணங்கள் போனவழியிலே விஷயங்களைக் கூறி, மேற்கோளாக ப்ரமாணவாக்யங்களைக் காட்டியும், அவற்றிலுள்ள சொற்களைக்கொண்டே தன் வாக்யங்களை இசைத்தும் பிரபந்தத்தைச் செய்தருளியிருப்பதைக் கவனிப்பவர்களுக்கு ஸ்ரீ தேசிகன் ப்ரமாணங்களை விட்டு அணுவளவும் விலகாதவர் என்பதும், இவருடைய ஸ்ரீ ஸூக்திகள் ஆப்ததமங்கள் என்பதும் விளங்கும். வேதங்களைப் போலவே ஆழ்வார்களுடைய அருளிச் செயல்களைப் பிரமாணமாக உதாஹரிக்கிறபடியால், த்ரமிடோபநிஷத்துக்களென்னும் திவ்யப்பிரபந்தத்திலும் ஆழ்வார்களிடத்திலும் இவருக்கு இருக்கும்பக்தி வெளியாகிறது. ஒன்பதாவது பர்வத்தில் முக்தன் பகவானை அநுபவிக்கும் ப்ரகாரத்தை வர்ணிக்குமிடத்தில், ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளை அழகாக உணர்ச்சிததும்பும் வகையில் இசைத்திருப்பதை ஆராயுமவர்கள், நம் ஆசார்யர் கேவல தார்க்கிகரல்ல, அநுபவம் நிறைந்த இளகிய மனத்தர் என்பதை ஒத்துக்கொள்ளுவார்கள். ஸ்ரீ வைகுண்டகத்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீ வைகுண்டத்தை வர்ணித்த பிறகு பரிவாரங்கள் சூழ ஸர்வாலங்காராலங்க்ருதனுய் (பிராட்டிமார்கள்சூழ எழுந்தருளியிருக்கிற) பகவானை வர்ணித்திருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

உலகையே தன் சொன்வன்மையால் மனதைக் கவரும்படி சித்தரித்துக் காட்டும் கவிகள் போல, ஸ்ரீ தேசிகன் படிப்படியாக சாஸ்த்ரத்தை அறிந்து அநுஷ்டித்துப் பயனைப் பெறும் மார்க்கத்தை மேல்மேல் செல்லும் படிக்கட்டுகளாக நிரூபித்து, அத்யாத்ம சாஸ்த்ரத்தையே பேரின்பமாளிகையைக் கிட்டுவிக்கும் ஸோபாநமாக அழகாகச் சித்தரித்திருப்பது அவர் 'கவிஸிம்ஹம்' என்பதை எடுத்துக் காட்டுகிறது. வடமொழியிலும் தென்மொழியிலும் இனிய கவனங்கள் செய்யவல்லவர் என்பது யாவரும் அறிந்ததே.

இப்படி ஸர்வஜ்ஞத்வம், சாஸ்த்ரவரம்புமீறுமை, குருபக்தி, கவியின் திறமை, ஸர்வபூததயை, கவனஸாமர்த்யம் முதலான

பல குணங்கள் நம் ஆசார்யரிடத்தில் இருப்பதாலும் இதுபோல பல கிரந்தங்களை அருளிச்செய்திருப்பதாலும் 'இவர் ஸ்ரீ வேங்கடேசனின் அவதாரம்' என்ற முன்னோர்கள் வார்த்தையும், 'வேதாந்தாசார்யன்,' 'கவிதார்கிகஸிம்ஹம்' என்ற திருநாமங்களும் இவரிடம் பொருந்தி நிற்கின்றன என்பது கூறாமலே விளங்கும்.

இவ்வாறு நம் ஆசார்யச்ரேஷ்டர் 'எல்லோரும் உஜ்ஜீவிக்க வேண்டும்' என்கிற உதாரமனதுடன் கட்டிவைத்த ப்ரபந்த ரூபமான ஸோபானத்தை உலகத்திற்கு நன்கு வெளிப்படுத்தவே அடியேனுடைய பிரயத்னம். ஸ்ரீ தேசிகனும் அவனடியார்களும் அந்தப் பிரயத்னம் ஸபலமாகவேண்டும் என்று அநுக்ரஹிப்பார்களாக.

இக்கிரந்தத்தைப் பதிப்பிக்கும் விஷயத்திலும் அங்கங்கு பொருள்கூற முயற்சித்திருப்பதிலும் அடியேனுடைய அறிவின்மையாலும் தேர்ச்சிக் குறைவினாலும் ஏற்பட்ட பிழைகளை க்ஷமித்து இதை உகப்புடன் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று பிரார்த்திக்கிறேன்.

புதுக்கோட்டை
25-3-1938

**ஸ்ரீநிவாஸராகவன்.**

# நித்யவிபூதிவைபவம்.



'ஸர்வேச்வரன் உபயவிபூதி நிர்வாஹகன்' என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. லீலா விபூதியும் நித்ய விபூதியுமே உபய விபூதி. லீலா விபூதியிலுள்ள ஜீவர்கள் அவரவர்கள் கர்மாநுகுணமாக தேவ—மநுஷ்ய—ம்ருக—ஸ்தாவர சரீரங்களை எடுத்து விழுந்தும் எழுந்தும் ஈச்வரனுக்கு போகத்தைக் கொடுக்கிறார்கள். போகவிபூதி என்னும் நித்யவிபூதியிலோ நித்யர்களும்முக்தர்களும் பகவானை எப்போதும் ஸாக்ஷாத்கரித்து அனுபவித்துக் கைங்கர்யங்கள்செய்து போகத்தைக் கொடுக்கிறார்கள். ஒரு உபாயத்தைஅநுஷ்டித்து இந்த லீலாவிபூதியிலிருந்து அங்கு சென்ற ஜீவர்களே முக்தர் எனப்படுவர்.

லீலா விபூதியைத்தான் ஸம்ஸாரம் என்பது. இது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணம்கொண்ட பிரகிருதிக்குட்பட்டது. இதற்கே அண்டம் எனவும் பெயர் உண்டு. இதில் அதலம் விதலம் ஸுதலம் ரஸாதலம் தலாதலம் மஹாதலம் பாதாளம் என்று கீழேழு லோகங்களும், பூமி அந்தரிக்ஷம் ஸ்வர்க்கம் மஹஸ் ஜனம் தபஸ் ஸத்யம் என்ற மேலேழு லோகங்களும்

இப்படிப் பதினாலு உலகங்கள் கொண்ட இவ்வண்டத்தைச் சுற்றி ஒன்றைவிட ஒன்று பதின்மடங்கு விஸ்தீர்ணமுள்ள ஜலம், அக்னி, வாயு, ஆகாசம், அஹங்காரம், மஹத், அவ்யக்தம் (அல்லது ப்ரதானம், ப்ரக்ருதி) என்னும் ஏழு ஆவரணங்கள் சூழ்ந்து இருக்கின்றன.

இவற்றிற்கெல்லாம் அப்பால் 'விரஜை' என்னும் அம்ருத நதி பகவத்க்ருபை போலே ஸர்வகாலத்திலும் ஏக ரூபமாகப் பிரவஹிக்கிறது. மோக்ஷத்திற்குச் செல்லும் ஜீவன் தன் ஸங்கல்பத்தால் இந்த விரஜையைத் தாண்டியே ரஜஸ் தமஸ் கலப்பில்லாத சுத்த ஸத்வமயமான நித்யவிபூதியை அடைகிறான். அங்கு அம்ருதமயமான ஸமுத்திரங்களும் நதிகளும், மணி பர்வதங்களும், மாளிகைகளும், உத்யானங்களும் பக்ஷிகளும் உள்ளன.

அவையெல்லாம் ஞானநந்தஸ்வரூபமாய், ஒன்றையொன்று தகையாமலும் மறைக்காமலும் தேஜோமயமாய் விளங்குகின்றன. அங்குள்ள பொருள்களுக்கெல்லாம் காலத்தினால் வேறுபாடு இல்லை. சில நித்யமாய் ஏகரூபமாயும், சில நித்ய முக்தர்களின் ஸங்கல்பத்தை யொட்டி அந்தந்தக் கைங்கர்யத்திற்காக சிற்றுபோது நிற்பவையாயு மிருக்கும். ஆச்சர்யமான இவ்வுலகத்தினுடைய பரிமாணம், ஐச்வர்யம் ஸ்வபாவம் எல்லாம் பரமயோகிகளுடைய வாக்குக்கும் மனதிற்கும்கூட எட்டாதவை.

விரஜையைக் கடந்ததும் 'அரம்' 'ண்யம்' என்ற இரண்டு அம்ருதமயமான ஸமுத்ரங்கள், திவ்யோத்யானங்கள், மணி பர்வதங்கள் எல்லாம் இருக்கின்றன. பிறகு 'ஐரம்மதீயம்' என்னும் அரும்த ஸரஸ்ஸையும், 'ஸோமஸவநம்' என்னும் அச்வத்த வ்ருக்ஷத்தையும், அதற்கப்பால் திவ்ய வ்ருக்ஷத்தையும், 'ஸாலஜ்யஸம்ஸ்தான அபராஜிதாயதநங்களையும் காணலாம். 'அயோத்யை' என்றும் 'அபராஜிதை' என்றும் கூறப்படும் ஸ்ரீ வைகுண்ட நகரம் கொடிகளால் அலங்கரிக்கப்பட்டு உயர்ந்த மதிள்களால் சூழப்பட்டதாய் அங்கே விளங்குகிறது. நகரவாயிலுக்கு இந்த்ரன் ப்ரஜாபதி என்பவர் த்வாரபாலகர்கள். நகரத்தின் உள்ளே மணிபர்வதங்களை அடுக்கிவைத்தாற்போல் அழகிய மாளிகைகள் இருபக்கமும் திகழும் வீதிகள் ஸர்வேச்வரன் எழுந்தருளியிருப்பதும் ஆயிரங்கால்களையுடையதும் ஹிரண்யமயமானதுமான திவ்யவிமானத்தை நோக்கிச் செல்கின்றன. இதுவே சாந்தோக்யோபநிஷத்தில் 'ப்ரஜாபதியினுடைய ஸபை' என்று ஓதப்படுகிறது.

இவ்விமானத்தின் எட்டுமூலைகளிலும் குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமனன், சங்குகர்ணன், ஸர்வநேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டிதன் என்ற எட்டு கணாதிபதிகள் ஆயுத பாணிகளாய் வாஹனருடராய் பரிவாரங்கள் புடைசூழப் பரிவுடன் ரக்ஷித்துக்கொண்டு நிற்கிறார்கள். நான்குபுறத்திலும் வாயிலுக்கு இருவராக சண்டன் ப்ரசண்டன், பத்ரன் ஸுபத்ரன், ஜயன் விஜயன், தாதா விதாதா என்ற எட்டு த்வாரபாலகர்கள் காத்துவருகிறார்கள். அதற்குள்ளே கஜாநநன், ஜயத்ஸேனன் முதலான பரிவாரங்கள் சூழ்ந்திருக்க, தன்மஹிஷியான ஸூத்ர

வகியோடு ஸேனாதிபதியாழ்வான் என்னும் விஷ்வக்ஸேனர் ஆஸ்தானத்தை நிர்வஹித்து வருகிறார். தன் பத்நிகளான ருத்ரை ஸுகீர்த்தி இருவரோடும் கருடபகவான் எதிரிலும், வாருணீ காந்தி என்ற தன்பார்யைகளோடு திருவநந்தாழ்வான் பின்னுலும் எழுந்தருளியிருக்கிறார்கள். ஒரு பக்கத்தில் ஆசார்யர்களும், இருமருங்கும் அந்தமில்பேரின்பத்து அடியார்களான நித்யரும் முக்தரும் கோஷ்டியாக வீற்றிருக்கின்றனர்.

நடுவில் ஜ்யோதிர்மயமாய் ஸிம்ஹாஸனரூபமான திவ்யபர்யங்கம். அதற்கு அவயவங்களெல்லாம் தத்வங்களின் அபிமானி தேவதைகளே: தர்மம், ஞானம், வைராக்யம், ஐச்வர்யம் என்பவை பாதங்கள்; அதர்ம-அஜ்ஞான-அவைராக்ய-அநைச்வர்யங்களும், ஸத்வ-ரஜஸ்-தமஸ்ஸுக்களும், க்ருத-த்ரேதா-த்வாபர-கலியுகங்களும் குறுக்கும் நெடுக்குமான பலகைகள். இந்தப் பர்யங்கத்தின்மேல் கோடி ஸூர்யப்ரகாசமான ஒரு பெரிய தாமரை திகழ்கிறது. விமலை, உத்கர்ஷிணீ, ஞானம், க்ரியை, யோகை, ப்ரஹ்வீ, ஸத்யை ஈசானை என்ற எண்மர் அதன் எட்டு இதழ்களிலும், முன்புறத்தில் ஒருஇதழில் அநுக்ரஹையும் நின்று கொண்டு சாமர கைங்கர்யம் செய்துகொண்டிருக்கிறார்கள். சுற்றிலும் ஆயுதாழ்வார்களும் ஆபரணாழ்வார்களும் குவித்த கையுடன் ஆயுதங்களையும் ஆபரணங்களையும் சிரமேல் ஏந்தி நிற்கின்றனர். நடுவிலுள்ள தாமரைக்காயில் திருவநந்தாழ்வான்பேரில் வலது புறத்தில் நீலமேகத்தையணைந்த நிலைமின் போன்ற லக்ஷ்மியும், இடதுபக்கத்தில் ச்யாமளவர்ணைகளான பூமி நீளைகளும் எழுந்தருளியிருக்க ஸர்வேச்வரன் சங்க சக்ரபாணியாய், இடது திருவடியைத் தொங்கவிட்டு மற்றதை மடக்கி வீற்றிருந்து, உலகங்களுக்கெல்லாம் அபயமளித்து, ஸூரிகளுக்கும் முக்தர்களுக்கும், தன் அநுபவத்தை அளித்துக்கொண்டிருக்கிறான்.

ஸவ்யம் பாதம் ப்ரஸார்ய ஸ்ரிததுரிதஹரம்
தக்ஷிணம் குஞ்சயித்வா
ஜாநுந்யாதாய ஸவ்யேதரமிதரபுஜம்
நாகபோகே நிதாய ।

[illegible]
[illegible]
[illegible] ஜயதி ஜகதாம்
[illegible] வைகுண்டநாத: ॥

என்கிற சுலோகத்தில் இவற்றையெல்லாம் ஸங்க்ரஹமாகக் காணலாம். சாந்தோக்யம் கௌஷீதகீ முதலான உபநிஷத்துக்களும், பாஞ்சராத்ரஸம்ஹிதைகளும் இவ்விஷயங்களைக் கூறுகின்றன. ஸ்ரீவைகுண்டத்தையும் அவற்றிலுள்ள பொருள்களையும், நித்ய முக்தர்கள் கைங்கர்யம் செய்ய ஸ்ரீபூமி நீளைகளுடன் பகவான் எழுந்தருளியிருப்பதையும் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்த ஸ்ரீவைகுண்டகத்யத்தில் விஸ்தாரமாகக் காணலாம்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 2 | உணர்த்தியுடைவன் | உணர்த்தியுடை[யவன் |
| 13 | 14 | நிவெஊ | நிவெபூஊ |
| 15 | 18 | ஸ்நாயுபத்யும் | ஸ்நாயுபத்தம் |
| 22 | 15 | தன்னையும் கொடுத்து | தன்னையும் [கொன்று |
| 24 | 25 | உபாயம் | ப்ராப்யம் |
| 25 | 23 | அறிதானதும் | அரிதானதும் |
| 26 | 2 | „நிரயாஹூாத,” 17 „தலஹ்ராஞரரயொ ஹெஜெத்ருய” | |
| | 15 | நாகங்கள் | நரகங்கள் |
| 32 | 7 | வெள்ளிக்கிடைபட்ட | வெள்ளக்கிடைப் [பட்ட |
| | 8 | நரியினம்போலவும், உள்ளம்துளங்கி, ப்ர யோஜந | |
| | 25 | நெறுப்பு | நெருப்பு |
| 38 | 7 | உன் திருவருளன்றி | உன் திருவருளா [லன்றி |
| 43 | 9 | ஹ்ரஸஞஊஹவதூஷெஹ (பத்மபுராணம் 6 உத்தரகண்டம் 81-133) | |
| 53 | 18 | ஸூக்ஷ்ம | ஸூக்ஷ்ம |
| 56 | 28 | மத்தளம் | முரசு |
| | | | முரசு அல்லது பேரி என்னும் வாத்தியத்தின் அடியில் இருக்கும் மிகச் சிறிய துவாரம் இங்கு ‘ஆடம்பரரந்த்ரம்’ என்பதால் கொள்ளப்பட்டது. |
| 58 | 1 | என்று | என்றும் |
| 60 | 3 | ஊணாஞவபூரத்தீ | ஊணாஞவபூதிபூ |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 60 | 20 | அக்னியும் அதைச் சுற்றி வாயுவும் அதைச் சுற்றி ஆகாசமும் | |
| 61 | 6 | [illegible] | [illegible] |
| 64 | 19 | வாக்கும் | வாக்குக்கும் |
| | 26 | 9 7. 10. 9 | 9 9. 7. 5 |
| 68 | 16 | 20 6. 10. 1. | 20 6. 10. 10 |
| 71 | 3 | [illegible] | [illegible] |
| | 7 | என்றூர்போலவும் | என்றூற்போலவும் |
| | 17 | 34 4. 1. 5 | 34 4. 5. 1 |
| | 18 | பூதபவிஷத் | பூதபவிஷ்யத் |
| 73 | 26 | தாளை | தாமரை |
| 74 | 3 | [illegible] | [illegible] |
| 95 | 27 | கண்டிக்கிறபடியால் | கண்டிருக்கிற (படியால் |
| 102 | 7 | மாதர் போலக் | மாதர்போல |
| | 20 | விருப்பத்து | பொருந்தி |
| 103 | 8 | மேதியினில் | மேதினியில் |
| 110 | 4 | (பக்கம்) 46 | (பக்கம்) 6 |
| | 20 | ,, 99 | ,, 66 |

[* இக்குறியுள்ளது அர்த்தபேதத்தையும்
† இக்குறியுள்ளது பாடபேதத்தையும் காட்டும்.]

| பக்கம் | வரி | |
|---|---|---|
| 5 | 26 | * விபரீதருசி—ஒன்றில் 'தோஷம் உண்மை' என்று தெரிந்திருந்தும் அதில் வரும் ருசி. ஸம்ப்ரதாய வி[illegible]வாஸிகளுக்கு அர்த்தகாம ருசி போன்றவை. |
| 6 | 6 | † ஜீவாத்மாவினுடைய—ஸ |
| 6 | 25 | * மூவுலகத்தைத்திண்ணிய நிலையுடையதாகத் திருத்தித் தன்னுள் இருத்தி. |
| 10 | 4 | † [illegible]களில்—ஸ |
| 13 | 4 | † இதுமேலும்—ஸ. |
| | 22 | † வளர்ந்திடுமேறக்கவாறே |
| 15 | 5 | † [illegible]மாய்—ஸ |
| 15 | 12 | * த்ரிமலம்— மூத்ரம், சுக்லம், புரீஷம் என்ற மூன்று மலங்களையுடையது. |
| 17 | 7 | † அவர்கள் தந்தாம் கதைகளையும்—ஸ |
| 19 | 16 | † [illegible]களிலே—ஸ. |
| 20 | 1 | † [illegible]களை அடைந்து-ஸ |
| | 6 | † [illegible]ங்களை அடைந்து-ஸ. |
| 23 | 26 | * அண்டத்திற்குட்பட்ட உலகங்களை ஸம்ஹரிப்பது 'வ்யஷ்டி ஸம்ஹாரம்.' |
| 25 | 7 | † காங்க்ஷிக்கும்படியாம்—ஸ |
| 27 | 19 | * எல்லோரும் ஸ்வஸ்வ - பலாவஸாநத்தில் அப்பலாநுபவதேசத்திலிருந்து விழுமவர்களாகையால் |
| 30 | 1 | † துல்யராய்த் தோற்றினரை—ஸ. |
| 30 | 3 | † [illegible] பண்ணுவிப்பார்—ஸ. |
| 58 | 1 | † சிலர் சொல்லுவார்கள்—ஸ. |
| 58 | 4 | † [illegible]—ஸ. |
| 68 | 20 | † [illegible] |

| | | |
|---|---|---|
| 78 | 12 | * அவற்றிற்கேற்ற ஸ்வரூபவிபூதிகளோடு |
| | 27 | * வலது பக்கத்திற்கு எல்லை |
| 82 | 12 | * கதிர்களையுடைய ஆயிரம் இரவி- |
| | 24 | * கோள்-மிடுக்கை (வலிமையை) யுடைய |
| 86 | 4 | † ஸ்மயமாநமுகனாய்க் கொண்டு தோற்றின தொண்டைவாய்ப் பிரானுடைய—**வ்ய.** |
| 93 | 24 | *தாழ்ச்சி-தாழ்வதை தாழ்ச்சி-ப்ராவண் [யத்தை |
| 101 | 8 | †ப்ரக்ருதிகுணங்களைக் கழற்றுவித்த பகவத்குணங்களிலே—**வ்ய.** |

॥ ஸ்ரீ: ॥



ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த
ரஹஸ்யங்களில் ஒன்றான

# ஸ்ரீ பரமபதஸோபாநம்.

ராமாநுஜதயாபாத்ரம் ஜ்ஞாநவைராக்யபூஷணம்
ஸ்ரீமத்வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்ததேசிகம் ॥*

சீரொன்று தூப்புல் திருவேங்கட முடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள்-ஓரொன்று
தானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

*[illegible]
[illegible]
என்று அதிகம்.

## *ஸ்ரீ பரமபதஸோபாநத் தனியன்கள்.

வ்யாஜீக்ருத்ய விஶுத்திஸமயபவீ-
ஸோபாந ஸங்கல்பநம்
ஶாரீராணாம் வ்யதநுத ஜாதவிஹ யஃ
ப்ராசீகஶத் ஸர்வஶஃ ।
தஸ்மிந் திஷ்டதி வேங்கடேஶ்வரகவௌ
ஸ்ரீபாஷ்யகாராத்மஜே
யம் கஞ்சித் பாரம்பர்யம் ஹ்ருத்யாவகீதம்
அந்யே ஸாமார்தஃ ஸ்துவந்தி தே ॥
தஸ்மை நமோऽஸ்து ராமாய
தார்க்ஷ்யாஸநஸ்தாய வேங்கடேஶாய ।
ப்ராபத்யயஜ்ஞநாநாம்
ஸந்தர்ஶித பரமபதஸோபாநாய ॥

தேனேறு தாமரையாள் திருமார்பன்தன்
திண்ணருளால் அவனடியில் விவேகம்பெற்றுக்
கூனேறு பவக்குழியை வெறுத் ததற்பின்
கூர் விரத்தி யுடன்வினையின் திரளுக் கஞ்சிக்
கூனேறு பிறையிறையோன் சாபம் தீர்த்தான்
குரைகழலே சரணடைந்து குரம்பை விட்டு
வானேறும் வழிப்படிகள் அடைவே கண்ட
வண்புகழ் தூப்புல்வள்ளல் அருள் பெற்றேமே.

*ஆசார்யனை அல்லது அவர் க்ரந்தத்தைப் புகழ்ந்து கூறுவதும், அதனாலேயே க்ரந்தத்தோடு சேராமல் தனித்து நிற்பதுமான சுலோகம், பாசுரம் முதலியவை. 'தனியன்கள்' எனப்படும்.

## ப்ரத²மம் விவேகபத்³யம்

ஸேயம் ஸோபாநபங்க்தி: ஶ்ரீமதா விஹிதா ஸ்ஸ்வயம் ।
ஸம்ஸாரஸாக³ரம் ஹ்யுத்தீர்ய ஸ்வஸ்வரூபம் ப்ரகாஶிதா ॥

விவேக - நிர்வேத³ - விரக்தி - பீ⁴தய:
ப்ரஸாத³ஹேதூத்க்ரமணார்சிராத³ய: ।
ப்ரக்ருதிக்ருதிக்ருதாஞ்சவாயிரோஹணம்
பராப்திரித்யத்ர பதா³ந க்ரம: ॥

அடற்புள்ளரசிலும் அந்தணர்மாட்டிலும் இன்னமுதக்
கடற்பள்ளிதன்னிலும் *காவிரியுள்ளம் உகந்தபிரான்
இடைப்பிள்ளையாகி உரைத்தது உரைக்கும் எதிவரனார்
மடைப்பள்ளிவந்த மணம் எங்கள் வார்த்தையுள்
[மன்னியதே. 1.

கள்ளமனத்துடன் கண்டுமுயன்ற கடுவினையால்
நள்ளிருளாழியில் நற்சுவை ஐந்தெனநாடியதோர்
அள்ளலில் நாளும் விழுந்தழியாவகையாரணநூல்
வள்ளல் வழங்கிய வான்படியான வழியிதுவே. 2.

ஸ்வஶேஷவிஷயஸ்ஸாத்ஶேஷியான ஶ்ரிய:பதிக்கு ஸ்வாந
ந்தாஹா நிரவதிகஶேஷபூதராய், [1]'அந்தமில்
பேரின்பத்து அடியரோடு' இருந்து [2]'அனைத்துலகு
முடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடா
தே' அனுபவிக்கப் ப்ராப்தரான க்ஷேத்ரஜ்ஞர் ஸ்வாநாதி
விஷயாகாரப்ரவாஹத்தில் ஒழுகி, கரையேற விரகற்று
[3]அலமருகின்றபடியைக் கண்டருளின பரமகாருணிக

1 10. 9 11. 2.6. 7. 10. 3அலமருகின்றபடியை-வருந்துகின்
றபடியை. அந்தணர்மாட்டிலும்—பிராமணர்களின் தனமாகியவேத
த்தைக் காட்டிலும். *காவிரியுள்ளூர்—பா.

ஞன பரமஶேஷி, தானே ஞானத்தைக் கொடுத்து இவர்களை எடுக்க இடம் பார்த்து; [4]அஜ்ஞாத-யாத்ருச்சிக-ஆநுஷங்கிக-ப்ராஸங்கிக-ஸாமாந்யபுத்திமூல ஸுக்ருதவிஶேஷங்களை வ்யாஜமாகக்கொண்டு விஶேஷகடாக்ஷம் பண்ணி; அத்வேஷ-ஆபிமுக்ய-ஸாத்விகஸம்பாஷணாதிகளை உண்டாக்கி; ஸாதாரண-நித்ய-ஸ்வஸம்பந்த ஸஹகாரியான * ஆசார்யஸம்பந்தத்திலே அபிஸந்தியை உண்டாக்கி; விஶேஷண-விஶேஷ்ய-உபயஸ்வபாவ-விஷயமாகத் [5]‘திருந்தக்கண்டு உரைக்கவல்ல’ ‘தெளிவுற்ற

[4] அஜ்ஞாதஸுக்ருதம்— அடியுடன் இது ஸுக்ருதம் (நல்ல காரியம்) என்று நாம் அறிந்துகொள்ளாதது; (இதென்னமலை என்று கேட்டவர்களுக்கு, ‘திருமாலிருஞ்சோலைமலை’ என்று சொல்வது முதலானவை). பகவான் எழுந்தருளியிருக்கும் மலையாதலால், அதன் பெயரைச் சொன்னதும் ஸுக்ருதமாக முடிந்தது.

யாத்ருச்சிக ஸுக்ருதம் – ஸுக்ருதம் என்று தெரிந்தாலும், செய்ய நினைப்பின்றிச் செய்யுமவை. (மாடுகளை ஓட்டும்போது அவற்றைத்தொடர்வதால் நேரும் ஆலயப்ரதக்ஷிணம்முதலானவை).

ஆநுஷங்கிகம்—வேறொரு கார்யத்தின்பொருட்டு பிரவிருத்திக்கும்போது, அப்பிரதானமாகக் கருதிச் செய்யுமவை (ஊருக்குப் போம் வழியில் நேர்ந்த பகவத்பக்தனை வலமாகப் போவது முதலியன).

ப்ராஸங்கிகம்—ப்ரஸக்தி நேர்ந்தால், இதற்கென்றே எண்ணிச் செய்வது. (கடைக்குக் காஞ்சீபுரம் போம்போது, பகவானையும் தொழுவது).

ஸாமாந்ய புத்தி மூலம்—வேறு பயனையாவது மோக்ஷத்தையாவது விசேஷித்துக் கருதாமல், ‘நல்ல கார்யம்’ என்று இவ்வளவைக்கொண்டு செய்யும் ஸ்ரீரங்கயாத்திரை முதலியன.

[5] 6. 1. 8; 7. 5. 11.

*ஆசார்ய ஸம்பந்தத்தை அபிஸந்திபண்ணி—க.

சிந்தையனாய்', [6]குலிஜைஸகுநிவ்ருத்தாஞவெவெஸிக ஞன ஒஸிகன் திருவடிகளிலே சேர்த்து; அவன் மநஸ்ஸிலும் வாக்கிலும் கோயில்கொண்டு, [7]'பிரம குருவாகி' நின்று, [8]'தீதில் நன்னெறி காட்ட' ஒருப் பட்டு; ஆதொஜீவநாவெக்ஷிதங்களான ஈஹஸ்ஸவா யங்களை [9]அஜ்ஞாந-ஸம்ஸய-விபர்யய-விபரீதருசி கள் புகாதபடி உபதேசிக்க; [10]"உவஜொநிஈயக:" என்றதபடி [11]'கருவிலே திருவுடையன்' ஞய், ஸஹஜ வஸஞய், [12]"ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரப

[6] குலிங்கசகுனி விருத்தாந்தம் — 'ஸாஹஸத்தொழில் செய்ய லாகாது' என்று பிறவற்றுக்குப் போதனைசெய்து, சிங்கம் வாயைத் திறக்கும்போது தான் உட்புகுந்து அதன் தொண்டைத் தசை யை (அல்லது பற்களின் இடையில் இருக்கும் மாமிசத்தைத்) தின்னும் ஸ்வபாவமுள்ளதாகக் கூறப்படும் 'குலிங்கம்' என்னும் பக்ஷி. (இந்தப் பக்ஷியின் செய்கை இருக்கும் ஊரிலேயே இராத வர்களான ஆசார்யர்கள்.)

[7] பெரி. தி. 5. 2. 8. [8] பெரு. தி. 2. 6.

[9] அஜ்ஞானம்— அடியுடன் தெரியாதிருப்பது; ஸம்சயம்— ஒன்றுக்கொன்று விரோதமுள்ள இரண்டு தர்மங்களை ஓரிடத்தில் ஏற்றி, வஸ்து இதுவோ, மற்றொன்றோ என்று ஸந்தேஹப்படு வது (இருட்டில் தூரத்தில் தெரியும்வஸ்துவை 'அது மரமோ, மனித னோ' என்று ஸந்தேஹிப்பது முதலானவை); விபர்யயம்—ஒரு வஸ்துவின் உண்மையான தன்மை நிச்சயமாகத் தெரியாதபோதி லும், மாறாக அதை எண்ணுவது (இருட்டில் இருக்கும் மரத்தை மனிதன் என்று நிச்சயிப்பது);

விபரீதருசி — உண்மையான தன்மை தெரிந்தும், அதற்கு விபரீதமாக அதைக் காட்டுவதில் ஏற்படும் ருசி. (ஒரு மனிதன் நல்லவன் என்று தெரிந்தும், ஏதோ காரணத்தால் அவனைக்கெட்ட வன் என்றுசொல்வது.)

 [11] திருமாலை 11. [12] கீதை 2. 7.

ஜ்ஞம்" என்று ‡ செவிதாழ்த்த இச்சேதனன் [13]'சூழ்ந்து அகன்று ஆழ்ந்து உயர்ந்த முடிவில் பெரும் பாழில்' எழுந்த [14]'மான் ஆங்கார மனங்கள்' முதலான விவிதவிஷவ்ருக்ஷங்களினுடைய ஸஹஸ்ராகார ஸாமக்ஷத்தையும், [13]'சூழ்ந்து அதனில் பெரிய பரநன் மலர்ச்சோதி'யான ஜீவாத்மாக்களுடைய ஶரீராகார ப்ரஹ்மநிவாஸ — கைங்கர்ய ஸாம்ராஜ்ய - உபபோகங்களையும், [13]'சூழ்ந்து அதனில் பெரிய சுடர்ஞான இன்பமான [15]'உயர்வற உயர்நலமுடையவன்'படிகளையும் ஸாவஹிதனாய்க் கேட்டு, [16]'உய்வதோர் பொருளால் உணர்வெனும் பெரும் பதம் தெரிந்து' ஸ்வரூப-ஸ்வபாவ-ஸம்பந்த-ஸம்ப்ரதாயானமாய் §சேஷசேஷிகளைப் பிரியாதபடி பிணைத்து வணக்கி உஜ்ஜ்வலிதமாக்குகிற ஸம்ப்ரதாயத்திலே தன்னுடைய ஜ்ஞாத்ருத்வ-கர்த்ருத்வ-போக்த்ருத்வங்களை பரார்த்தங்களாகவும் பராதீனங்களாகவும் பார்த்து. [17]'முதல் தனி வித்தாய், [18]'திருத்தித் திண்ணிலை மூவுலகும் தன்னுள் இருத்திக் காக்கும் இயல்பினனாய், [19]'தனதே உலகென நிற்குமவனாய்' [20]'அடைக்கலங் கொண்டு அஞ்சல் என்னப்' ப்ராப்தனாய், [21]'உலகங்களுக்கெல்லாம் ஓர் உயிராய்' [22]'உலகு தன்னோடு ஒன்றி நிற்க வேறு நிற்கு'மவனாய், உபாயோபேயபூதனான

13. 10. 10. 10. 14 10. 7. 10. 15 1. 1. 1. 16 தி. மொ. 1. 1. 1.
17 10. 10. 9. 18 2. 2. 8. 19 4. 5. 10. 20 தி. ச. வி. 92
21 8. 1. 5. 22. தி. ச. வி. 12.

18 திருத்தி— (லோகங்களை) ஸ்ருஷ்டித்து, திண் – த்ருடமான, நிலை - ஸ்திதியை உடைய, மூவுலகும்-மூன்று லோகங்களையும், தன்னுள் - தனக்குள்ளே, இருத்தி - வைத்து, காக்கும் இயல்பினனாய் - ரக்ஷிக்கும் ஸ்வபாவத்தையுடையவனாய்.

‡செவிதாழ்த்திச் சேதனன்—க. §சேஷசேஷி தத்வங்களை-ம

'ஸ்ரீயஃபதியை உளன் என்று தேறியிருக்கும் உணர்த்தியுடையவன் [23] தானும் உளனும்' என்று தைத்திரீயாதி ஸ்ருதிகள் *சொல்லலுற்றன.

அருவுருவா னவையனைத்தும் அறிவா ரேனும்
 அருங்கலைகள் கற்றுரைக்க வல்லா ரேனும்
தருமவழி †அழியாமல் காப்பா ரேனும்
 தனிமறையின் தாத்பரியம் தருவா ரேனும்
இருவினையின் ஒழுக்கத்தால் ஏவ லோரா (து)
 இங்கேநாம் சிறையிருந்த ஈனம் தீர்க்கும்
திருமகளார் பிரியாத தேவன் திண்ணம்
 தேறுதார் திண்படியில் ஏறுதாரே. 3.

இதி ஸாரஸங்க்ரஹே ப்ரதமம் விவேகபர்வா

த்விதீயம் நிர்வேதபர்வா ॥

மறுத்தார் திருவுடன் மார்பில்
 தரித்தவன் வாசகத்தை
மறுத்தார் மயக்கமும்
 மற்றதனுல் வந்த மாநரகும்
நிறுத்தார் பவத்தில் நெடுநாள்
 உழன்றமை கண் (டு) அதனுல்
வெறுத் (து) ஆரணநெறியே
 வெள்கியோட விரைவர்களே. 4

[23] "அஸந்நேவ ஸ பவதி அஸத் ப்ரஹ்மேதி வேத சேத். அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத ஸந்தமேநம் ததோ விது:"—தை. உ.

*சொல்லிற்றன. †தவிராமல்—ம

இப்படித்தானும் பிறரும் தனக்கு ஶேஷியும் தஞ்சமும் போக்யமும் அன்று என்று தோன்றும்படி [illegible] ஸம்ப்ரதாயத்தாலே [illegible]ம்போலே ப்ரஸங்க[illegible]மான *பராவரதத்வ விவேகம் பெற்றவன் தான் முன்பு அநாதிகாலம் [1]அஸமஞ்ஜன்படியே நடக்கையாலே [2]"ந க்ஷமாமி," [3]"க்ஷிபாமி" என்னும்படி [4]துறப்புண்டு, ஸ்வநாயாஸ-விஸ்தாரமான த்ரிகுணஸாகரகானநாந்தரத்திலே [5]அநேகஜந்மஸாஹஸ்ரியான ஸம்ஸாரபதவியை அடைந்து, அநாதிவிஷய-ம்ருகத்ருஷ்ணிகாக்ருஷ்டனாய், † அடிதரியாதே ஓடி, வாஸநாரேணுகுண்டிதனாய், விபரீதபரிஶ்ரமனாய், ஒரு விஶ்ரமஸ்தாநமும் பெறாதே க்லேஶகர்மாதிகள் ‡வந்தாலும்

[1] அஸமஞ்சஸன்—பா. நிர்வேதம்—பாபத்தைச் செய்தால்வரும் நரகத்திலிருந்துபயந்து, அவ்வித பாபத்தைச் செய்யாதிருக்கவேண்டும் என்கிற ஸங்கல்பம்.

அஸமஞ்ஜன்— ஸகரமஹாராஜனுக்கு கேசினியிடம் பிறந்தவன். இவ்வஸமஞ்ஜன் இளம்பிராயத்தில் வீதியில் விளையாடும் சிறு குழந்தைகளையெல்லாம் ஸரயூநதியில் தூக்கி எறிந்து ஜலத்தில் முழுகித் தவித்து இறக்கும் அவற்றைக்கண்டு ஆநந்திப்பது வழக்கம். பட்டணத்து ஜனங்கள் முறையிட, ஸகரன் அவனை ராஜ்யத்திலிருந்து வெளியேற்றிவிட்டான். இவன் புதல்வன் அம்சுமான். (ராமாயணம் பாலகாண்டம் 38. 20–22. பாகவதம் 9. 8.)

[2]வராஹபுராணம். [3]கீதை 16. 19. [4]துறப்புண்டு—தள்ளப்பட்டு

[5]அநேகஜந்மஸாஹஸ்ரீம் ஸம்ஸாரபதவீம் வ்ரஜந் ।
மோஹஶ்ரமம் ப்ரயாதோऽஸௌ வாஸநாரேணுகுண்டித: ॥ (வி. பு. 6. 7. 79)

*பராபரதத்வ விவேகம்—க † அடிதெரியாதே—க ‡வந்து முன்பு—க.

முன்பு ஸாக்ஷாத்ஸம்ருத்தையான ப்ரஜ்ஞையிழந்து மூச்சடங்க ப்ரவிஷ்டனாய், லோகலோகாந்தரப்ரவ்ருத்திகளுக்குப் ப்ரஸங்கமில்லாதபடி கரணகளேபரங்களை இழந்து 6"ஸுஷுப்தவத்ஸ ஸ்தாணவ:" என்னும்படியாய், தனக்கு விசேஷித்தொரு பேரிடவொண்ணாதபடி மஹா தமஸ்ஸிலே இரும்புண்ட நீர்போலே இறுகச் சுவறி, ஒரு மூலையிலே 7"ஸம்ஹாரவிக்ஷேபஸஹஸ்ரகோடீ ஸ்திஷ்டந்தி ஜீவா:" என்னும்படி ஆயிரம்கோடி ப்ரஹ்மகல்பங்கள் அடைப்புண்டு கிடக்கும்படிகளையும், மீண்டு ஸாகாரணிகஸ்ருஷ்டிவிசேஷ-ஸம்ஸ்க்ருதவிசேஷ-நியதகாலம் வந்தால், 7"ப்ரவிசந்தி வாநர:" என்னும்படி ஸம்ஸாரவழியே போந்து, 8ஸாகசேஷிவாக-நிவேசநாதியான விசித்ரதேஹஸம்பத்தியைப் பெற்றாலும் §ஆக்கையின் வழி உழன்று, 'நீ ஸமவசக்ஞன்' என்றால் 'ஓம்' என்று இசையாதே யமகிங்கரர்க்கு இடமாம்படி ஜன்மயக்ஞனாய்ப் போந்தபடிகளையும், 9'தெரித்தெழுதி வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும்' பொழுதுபோக்கப் ப்ராப்தமாயிருக்க, 10'சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து சுரிகுழல் மடந்தையர்திறத்துக் காதலே மிகுத்தும், 10'வென்றி

6 வங்கிபுரத்துநம்பிகாரிகை (சிறகொடிந்த பக்ஷிபோல) 7 பாரா.சா. [286. 30.
8 விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும் ।
§3. 2. 1. (ஆக்கை-சரீரம்) 9 4அ.63. (தெரித்து—தெரிந்துகொண்டு)
§ஆக்கையின்வழியுழல்வேனென்று—க,
10தி. மொ. 1. 6. 3; 1. 1. 4; 1. 6. 2.
10சூதினைப்பெருக்கி-(பகலில்) பெருக்க சூதாடியும், களவினைத் துணிந்து-(இரவில்) அச்சமின்றித் திருட நிச்சயித்தும், சுரிகுழல் மடந்தையர் திறத்து-(அதனால் கிடைத்தபொருளைக்கொண்டு)

யே வேண்டி வீழ்பொருட்கிரங்கி வேற்கணார் கலவியே கருதி [10]புலன்படிந்து உண்ணும் போகமே பெருக்கிப் பொழுதினை வாளாப் போக்கினே'படிகளையும்; ஸம்ஸாரஸம்பந்தவிஶேஷாதிகளில் [11]"ஸா ஹாநி:" என்று இழவுபட்டு, 'தஸ்மிந்ந் அதிக்ராந்த'ஞற் போலே கூப்பிட வேண்டியிருக்க, [12]"தாயொருபக்கம் தந்தையொரு பக்கம்" இத்யாதிகளிற்படியே அநர்த்தவிஷயவிஶேஷத்தில் அலற்றும் படிகளையும்; [13]'நிற்கின்றதெல்லாம் [14]'உடன்மிசை உயிரெனக் கரந்த' நெடுமால்' என்று ஓர்ந்து, [15]'சித்ராசித்ரகமெஶ'யற்று 'யஸ்ஸ: ஸ்வாமீ' என்கிற ந்யாயத்தாலே ஸர்வஸம்பந்தஸாம்யத்தாலே

சுருண்ட கூந்தல்களையுடைய மாதர்களிடம், காதலே மிகுத்தும்-மிகுந்த ஆசையைச் செய்தும், வென்றியே வேண்டி - ஜயம் ஒன்றையே விரும்பி, வீழ்பொருட்கு - நாசமடையும் ஸ்வபாவமுள்ள பொருள்களுக்காக, இரங்கி - இரங்கியும், புலன் - இந்திரியங்கள் படிந்து உண்ணும் - மண்டி அநுபவிக்கிற, போகமே பெருக்கி - போகத்தை அதிகப்படுத்தி, பொழுதை வீணே போக்கினேன்.

[11]யந்முஹூர்தம் க்ஷணம் வாபி வாஸுதேவோ ந சிந்த்யதே । ஸா ஹாநிஸ்தந்மஹச்சித்ரம் ஸா ப்ராந்திஸ்ஸா ச விக்ரியா ॥ (கருடபுராணம் பூர்வக. 322. 22)

ஸங்கல்பிதவ்யதிக்ராந்தே ஸம்ஸாரே யாந்தவஜிதே । தஸ்மிந்ந் அதிக்ராந்தே நைவ யாதனாகர்மிதம் ஸ்யாம்॥

[12]பெரி. தி. 4. 8. 9. [13]4அ. 54. [14]1. 1. 7. ஓர்ந்து—ஆராய்ந்து

[15]ஸர்வபூதாத்மகே தாத ஜகந்நாதே ஜகந்மயே । பரமாத்மநி கோவிந்தே மித்ராமித்ரகதா குத: ॥ (வி. பு. 1. 19.37.)

உசிதமாயிருக்க, [16]'அறப்பொருளை அறிந்து ஓராதே மறுக்கி வல்வலைப்படுத்திக் குமைத்திட்டுப் பல்லுயிரைக் கொன்று உண்ணும்படிகளையும்; [17]'ஹரிரிதாக்ஷர ...'த்தை ...மாகவாகிலும் உச்சரித்து, ...த்திற்குப் ...ம் பண்ணுகையே ...மாயிருக்க, ...த்திலும் உண்டறுக்கவொண்ணுதபடி ¶...மான ...த்தை க்ஷணாய...ந்தோறும் நடத்திப் போந்தபடிகளையும்; $இன்னடப்பைப் புரிந்து பார்த்து, [18]"வாடினேன் வாடி." "வாணிலா முறுவல்" "தாயே தந்தை" இத்யாதிகளிற்படியே ...ம் பிறந்து [19]'பழுதே பல பகலும் போயின' என்று அஞ்சி அழுப் ...மாயிருக்க, ...ய், [20]"..." என்னும்படி

[16]4. 9. 6. அறப்பொருளை - தர்மத்தின் தத்வத்தை, அறிந்து, ஓராதே - ஆராயாமல், மறுக்கி - (பிறர் மனதைக்) கலக்கி, வல்வலைப் படுத்தி - பலமான தங்கள் மோசவலையில் விழச்செய்து, குமைத்திட்டு - ஹிம்ஸை செய்து, பல்லுயிரைக் கொன்று - (அதற்கு மேலும்) பல ஜீவர்களையும் கொன்று, தான் அனுபவித்தபடிகளையும்.

[17]... ஹரிரிதாக்ஷரத்வயம் ।
... க்ஷாய ... ॥
[இதி ...

[18]தி. மொ. 1. 1. 1; 1. 6. 1; 1. 9. 1 (வாள் - ஒளி, நிலா - பொருந்தியிருக்கிற, முறுவல் - மந்தஹாஸத்தையுடைய-ஸ்திரீகள்) (அநித்ய வஸ்துக்களுக்காகவும், மாதர் பொருட்டும், தன் பந்துக்களுக்காகவும், வீணே முயன்று காலத்தைக் கழித்ததை முறையே இம்மூன்று திருமொழிகளிலும் அருளிச்செய்கிறார்.)

[19]1 அ. 16. [20]பார. சாந்தி. 312. 30.

¶...மான-க $முன்னடப்பை-க. (புரிந்து=திரும்பி)

கலங்கிக்*கண்டவா திரிந்தபடிகளையும்கண்டு, [21]"அஹோ ஜெ ஊஹதீ யாதா நிஷ்ஷூரா ஜநூவஷதிஃ," "[22]"யானே என்னை அறியகிலாதே யானே என்தனதே என்றிருந்தேன்." [23]"நானே நானாவித நரகம் புகும் பாவம் செய்தேன்," [24]"அருநரகத்தழுந்தும் பயன்படைத்தேன்" [25]"ந ஸஞ்தி தாவஞ்தி ஜநூாநி ஜொகெ" [26]"ஸிம்ஹெந ஹ-ஞகவா வஹவொ ஊயாzதாஃ" இத்யாதிவரிதெவநங்களைப் பண்ணும்படி முன்பு ஸாகவிகஸம்ஹாஷணாதிகளாலே முகிழ்த்த நிர்வேதம் நஊரூவ நிஷெய நிரூவணத்தாலே முற்றி, [27]"செய்யாதன செய்யோம்," [28]"நயவேன் பிறர் பொருளை நள்ளேன் கீழாரோடு" என்னும்படி [29]"செய்யேல் தீவினை என்று அருள்செய்

---

[21]வங்கி. காரிகை.[22]2. 9. 9. [23]தி.மொ. 1. 9. 2. [24]தி.மொ. 6. 3. 4

[25]ந ஸஞ்தி தாவஞ்தி ஜநூாநி ஜொகெ [ஸவெடுஷ நாயாவிஷ ஸவடுகாமும் । ஷூநூாநி யாவஞ்தி ஊயாz திவொரெ வீதாநி ஸம்ஸாரஊஹாஸஊெ ॥]

விஷ்ணுதர்மம் 98 12 (க்ஷத்ரபந்து உபாக்யானம்)

ஹே நாத! பயங்கரமான இந்த ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்தில் மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து, ஒவ்வொரு பிறவியிலும் தாயிடம் உண்ட பாலையெல்லாம் சேர்த்துப் பார்த்தால், அநாதிகாலமாக ஸர்வஸமுத்ரத்திலிருந்ததும் இப்போது இருப்பதுமான ஜலமெல்லாம் கூட அதன் அளவு ஆகாது.

[26]ஸிம்ஹெந ஹ-ஞகவா வஹவொ ஊயாzதாஃ வூாவெூண ஹ-ஞகவா வஹவொ ஊயாzதாஃ— விஷ்ணுதர்மம் 98.17

சிங்கமாயும் புலியாயும் பிறந்து எவ்வளவோ பூதங்களைக் கொன்று தின்றிருக்கிறேன்.

முகிழ்த்த—துளிர்த்த. வரிதெவந—புலம்பல்

[27]திருப்பாவை 2. [28]1அ. 64. [29]2. 9. 3.

*கண்டவாறு திரிந்தபடிகளையும்—க

யும் கையார்சக்கரக் கண்ணபிரான் அநுமதி பண்ணாத வழிகளில் ஸ்வப்நத்திலும் அடியிட நடுங்கும்படியாம்.

ஸம்ஸர்க்காதிகளாலே நிர்வேதம் பிறக்குமாகில், அது மேலும் விபரீதவ்ருத்தங்களிலே கைவளரப் பண்ணும். அநாதிமாயாநித்ரையாலே உறங்கினவனுக்கு உணர்த்தியாலே நிர்வேதம் பிறந்தால், இது தம்பதர்ப்பாதிகளான ஆஸுரஸ்வபாவங்களை அடியறுத்து, ஶாந்திக்ஷமாதிகளான ஆத்மகுணங்களோடே அவிநாபூதமாய், ஸர்வப்ரகாரஸ்யாதிகாரியாக்கும். ஆனபின்பு அக்ருத்யகரணகாரியான அத்ருஷ்டஸந்தோஷத்திலும் ஆழங்கால் படாதே, ப்ரக்ருதிகாயாநுபவமான அஜ்ஞநிர்வேதத்திலும் இழியாதே, ஸாத்விகஶ்ருதியைக் கைப்பிடித்து நிஷித்தவ்யாபாரத்தை விலக்குகை நிர்ப்ருஹவிவேகஸம்பந்நநிர்வேதமாம்.

வான்பட்ட மன்னிருளில் மயங்குமாறும்
  மறித்தொருகால் எனையூழி சென்றால் அன்றோர்
ஊன்பட்ட உடலாழி வினையொழுக்கில்
  ஒருகரையும் காணுதே ஒழுகுமாறும்
தேன்பட்ட விடம்போலத் தித்திக்கின்ற
  சிறுபயனே உறுபயன் என்றருந்துமாறும்
*தான்பட்ட படியிந்நேர் தானே கண்டு
  தளர்ந்திடுமேல் வளர்ந்திடுமே தக்கவாறே. 5.

இதி ஸ்ரீவைராக்யபஞ்சகே த்விதீயம் நிர்வேதபர்வ ॥

*தான்பட்டபடியின்றே தானே கண்டு—ம.

## த்ருதீயம் விரக்திபர்வ:॥

உலகத்துயர்ந்தவரொன்றும் பயனில் உறுந்துயரும்
அலகிற்படாதவப்போகம் கவர்ந்தெழுமப்புயத்தோன்
கலகத்தொழில் மதுகைடபரால் படும் *கட்டமென்
[னும்
பலகற்ற மெய்யடியார் படியார் இக்கடும்பவத்தே. 6.

இப்படி விவேகஜ நிர்வேத வைராக்யாதிகளாலே [1]அபாய ப்ராவண்யமற்றாலும், [2]"ஸுகஸங்கேந பத்நாதி" †என்னும் அளவான ஸத்வமடியாக லௌகிகாமுஷ்மிக ஸுகஸங்க ஜ்ஞாநஸங்கத்தாலே ஹேமநிகளங்களாகிற பொன்விலங்குகளைப் பூட்டிக்கொள்ளுமாகில், இவன் முமுக்ஷு அல்லனும். ஆகையால் [3]'கடையறப் பாசங்கள் விடும்படி உதாஸ்வதோஷங்களை யதாவஸ்திதமாக அநுஸந்திக்க வேண்டும். எல்லாருக்கும் ‡தம்தம் ஸங்கங்களை [4]"ஒரு நாயகம்," [5]"நண்ணுதார் முறுவலிப்ப," [6]"கொண்டபெண்டிர்" இத்யாதிகளிற் படியே தெளியப்பார்க்குமளவில், இவை நிரஞ்ஜந

[1]அபாய ப்ராவண்யம் - நிஷித்த கர்மங்களில் ஆசை. [2]கீதை 14. 6 [3]8. 2. 8. (கடையற—வாளனைகூட இல்லாமல், பாசங்கள் - ஆசைகள், அற்றுப்போம்படி) [4] 4. 1. 1. இந்தத் திருவாய்மொழியில் ஐச்வர்யம், கைவல்யம் இவற்றின் கீழ்மை சொல்லப்பட்டது.

[5] 4. 9. 1. இதில் தன்னைச் சுற்றிலுமுள்ளவர்களின் தன்மை சொல்லப்பட்டது. குணபம்—பிணம்.

[6] 9. 1. 1. இதில் பந்துக்களின் தன்மை கூறப்பட்டது.

*கட்டமெண்ணில்—ம †என்னுமளவாக ஸத்வமடியாய்-க, என்னும்படி அளாவனன ஸத்வமடியாக—ம. ‡தத்தம்— க.

[illegible] நடுவே §மின்[illegible]போலே தோற்றுவதும் மறைவதுமாம்படி தோற்றும். ¶[illegible]க்கு [illegible]மாய் [illegible]மான [illegible]க்குக் [illegible]மாய், [illegible]மாய், [illegible]மாய் [illegible]மாய் இருக்கும் என்னுமிடம் [7] "[illegible]" என்றாற் போலே சொல்லுகிற ஶ்ருதிகளிலும், [8]"[illegible]," [9]"[illegible],"

[7] கர்ப்போபநிஷத்—1. ஸப்ததாதுமயம்—(ரஸம், ரக்தம், மாம்ஸம் மேதஸ், எலும்பு, மஜ்ஜை, சுக்ரம் என்னும்) எழுவித தாதுக்கள் நிறைந்ததாயும், த்ரிமலம்—(வாதம், பித்தம், கபம் என்னும்) மூன்று மலங்களை உடையதும், சுக்ல—சோணித—ஸம்பவம்—சுக்லம் சோணிதம் இவற்றின் சேர்க்கையால் உண்டானதுமான (சரீரம்).

[8] [illegible] ‖
மநு 6. 76.

அஸ்திஸ்தூணம் - எலும்பைத் தூணாக உடையதும், ஸ்நாயுபத்யம் - நரம்புகளால் கட்டப்பட்டதும். (மாம்ஸத்தையும் ரக்தத்தையும் கொண்டு பூசி, தோலினைப் போர்த்து, மல மூத்ரங்களுக்கு இருப்பிடமாய், நாற்றமுடைத்தானதுமான சரீரம்).

[9] [illegible] ‖
வி. பு. 1. 17. 63.

மாம்ஸம், ரக்தம், ஊந்தண்ணீர், விஷ்டை, மூத்ரம், (மேதஸ் மஜ்ஜை, எலும்பு என்ற இவற்றின் சேர்க்கையினுலுண்டான சரீரத்தில் ஒரு மூட்டாள் ஆசையை வைப்பானுகில், இதேமாதிரியான) நரகத்திலும் அவன் பிரீதியையே செய்வான். (அதை வெறுக்கமாட்டான். அதனால் நரகத்தில் தள்ளுவது அவனுக்குத் தண்டனையாகாது என்று பொருள்).

§மின்போலே— க. ¶போக்தாவுக்கு ஸ்தானமுமாய்—க.

[10]"அநித்யமஸுகம் லோகம்," [11]"கந்த்ரீ வஸுமதீ நாஶம்," [12]"ஜாநந்த்யேவ *கதலீஸ்தம்பஸ," [13]"யாமேவ ராத்ரிம் ப்ரதமாம்," [14]"ஆஸந்நதரதாம் யாதி" [15]"ஶீர்ஷஸ்தாயிநம் ம்ருத்யும்," [16]"ப்ராதர்மூத்ர புரீஷாப்யாம்," [17]"ஊனிடைச் சுவர்வைத்து," [18]"பொல்லாவாக்கை," [19]"புண்

[10]கீதை 9. 33. அழிவுள்ளதும் (இருந்தபோதும்) ஸுகமில்லாததுமான இவ்வுலகத்தை (அடைந்தவனான நீ என்னை ஆச்ரயிப்பாயாக).

[11]வஸுமதீ - பூமியே, நாஶம் கந்த்ரீ - அழிவை அடையப் போகிறது; (மற்றும் அதனுள்ளிருக்கும் வஸ்துக்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ ?)

[12]வாழைக்கட்டைபோல் நிஸ்ஸாரமான மனுஷ்யசரீரத்தில்.

[13]யாமேவ ராத்ரிம் ப்ரதமாம் கர்ப்பே விஶதி மாநவ: ।
தாமேவ ராத்ரிம் ப்ரஸ்தாய மரணாய விவர்த்ததே ॥

[பார. சாந்தி. 283. 12.]

எந்த முதல் ராத்ரியில் கர்ப்பமானது தாய் வயிற்றில் பிரவேசிக்கிறதோ, அந்த ராத்திரியிலேயே இவனை இறக்கச் செய்வதற்காக இவனை உறங்கச் செய்து யமனும் பிரவேசிக்கிறான்.

[14] (உதயாஸ்தமனங்கள் ஆக ஆக மரணம்) மிகவும் ஸமீபத்தில் இருக்குந்தன்மையை அடைகிறது.

[15] உச்சந்தலையிலேயே நிற்கிற மிருத்யு தேவதையை (அறி

[16] விடியற்காலையில் விடப்படும் மல மூத்ரங்களாலும், (மத்யாஹ்நத்தில் வெளிவரும் வியர்வை முதலியவற்றாலும், ராத்ரியில் சுக்லசோணிதங்களாலும் சரீரம் அசுசிமயம் என்று அறியலாம்).

[17] ஊன் - மாம்ஸத்தை, இடை - நடுவேநடுவே, சுவர்வைத்து - சுவராக வைத்து.

[18] 3. 2. 3. பொல்லா - மிகவும் கெட்டதான, ஆக்கை-சரீரம்,

[19]தி. மொ. 1. 9. 6. புண்—புண்கள், ஆர்-நிறைந்த, ஆக்கை. (புண்போன்ற சரீரம்): *கதலீஸ்தம்பம்—க.

ஞராக்கை” [20]“மின்னின் நிலையில மன்னுயிராக்கைகள்” [21]‘வேதநூற் பிராயம் நூறு” இத்யாதிகளிலும் விளங்கக் காணலாம்.

*யதோத்தராய் வஸுமதீ-வைபவம் பெற்றிருந்த [22]“நள-ந்ருக-நஹுஷாதிகளுள்பட உத்தம-க்ஷமா-பால-ஸமாஜ-நாகாச்வமேதாதிகளையும் அடைந்து அவர்கள் பட்ட பாடுகளையும், †அவர்கள் தந்தாம் கதைகளும்

---

*ஆகையால் தர்மோத்தராய்—க. †அவர்கள் சரிதங்களும் அநுமானம் பண்ணிப்போன படிகளையும்—க.

†அவர்கள் இறந்தபோதே அவர்களுடைய கதைகளும் மறைந்தபடியால், கதைகள் அநுமரணம் பண்ணின என்கிறார். (‘அவர்கள் தாரங்களும்’ என்று பாடமானால், மௌஸல பர்வத்தில் வஸுதேவருடைய பத்நிகள் அநுமரணம் செய்தது முதலானவையை எடுத்துக்கொள்ள வேண்டும்.)

[20] 1. 2 2. மன்-ஸ்திரமான, உயிர் - ஜீவாத்மாவினுடைய, ஆக்கைகள் - சரீரங்கள், மின்னில் - மின்னலைக் காட்டிலும் கூட நிலையில - நிலையில்லாதது.

[21] திருமாலை 3. வேதநூல் - வேதசாஸ்திரங்களில் சொல்லியபடி, நூறு பிராயம் - நூறு வருஷங்கள் (மனிதர் ஜீவித்திருந்தாலும், பெரும் பகுதி வீணாகக் கழிகின்றன).

[22] நளன் - தேவதைகளின் இஷ்டத்திற்கு விரோதமாக, நளன் தமயந்தியை மணந்ததால், கலி அவனுடைய சரீரத்தில் புகுந்து ராஜ்யத்திலிருந்து அவனை வெளியேற்றி, பைத்தியம் பிடித்தவன் போல் அலையச் செய்தான். அந்த நிலைமையே இங்கு விவக்ஷிதம்.

ந்ருகன்—வைவஸ்வதமனுவின் புத்திரன். இவன் கோடிக் கணக்கான பசுக்களை தானம் செய்தான். ஒரு ஸமயம் ஒரு பிராமணனுக்குக் கொடுத்த பசு அரசனுடைய அரண்மனைக்கே திரும்பி வந்துவிட, அது தானம் செய்யப்பட்டது என்று அறியாமல், அதை வேறொருவனுக்குத் தானம் செய்தான். அந்த பிராம்மணர்களிருவரும் பரஸ்பரம் சண்டையிட்டுக்கொண்டு, அரசன் உடனே தங்களைக் காணவாராததால், ‘நீ ஓணாகக் குழியில் வஸிப்பாய்’ என்று சபித்துவிட்டார்கள். பிறகு ஸ்ரீ கிருஷ்ணனுடைய கையினால் அவனுக்கு சாபவிமோசனம் ஏற்பட்டது. (ராமாயணம், உத்தரகாண்டம் 53, 54; பாகவதம் 10. 64.)

அநுமரணம் பண்ணிப் போனபடிகளையும் கேட்டால், [23]"இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்" என்னும்படி ராஜ்யாதிஸாவஸஜ்ம் ஈநாஷதி யாது.

தன்னோடொக்க [24]ஒழுகு சங்கிலியிலே கோப்புண்டு உழலுகிற தேவர்களுக்கு இறைக்குடிமகனாய் நெடுநேர்த்திகளோடும் நெடும் காயக்லேசங்களோ

நஹுஷன்—ஆயுஸ்ஸின் புத்திரனும் யயாதியின் தந்தையுமான இவன் சந்திரவம்சத்து அரசர்களில் ஒருவன். ஒரு காலத்தில் இந்திரன் ப்ரஹ்மஹத்தி பாபத்தினால் மறைந்திருந்தபோது, நஹுஷன் இந்திரனாக நியமிக்கப்பட்டான். அப்போது இந்திராணியிடம் காதல்கொண்டு, ஸப்தரிஷிகள் தூக்கிச்செல்ல ஒரு பல்லக்கில் அவளுடைய அரண்மனைக்குச் சென்றான். இவனுக்கு இருந்த ஆவலினால், அவர்களை 'செல், செல்' (ஸர்ப்ப, ஸர்ப்ப) என்று விரட்ட, அதனால் கோபம்கொண்ட அகஸ்த்யர் அவனை மலைப்பாம்பாயாகும்படி சபித்தார். உடனே அவன் ஆகாசத்திலிருந்து கீழே விழுந்து அந்த நிலையுடன் வெகுகாலம் இருக்கும்போது, யுதிஷ்டிரனால் அவனுக்கு சாபம் நீங்கிற்று.

ஸோமகன் என்னும் அரசன் தன்பிள்ளையின் சரீரத்தைக் கொண்டு யாகம் செய்ததினால் நரகாவஸ்தையை அனுபவித்ததும் இங்கே கொள்ளவேண்டியது. (மஹாபாரதம் ஆரண்யபர்வம் 128, 129.)

[23]பெரு.தி.4.5. இன்பு-எல்லா போகங்களையும், அமரும் - புஜிக்கும், செல்வமும் - ஸம்பத்தும், இவ்வரசும் - அதற்குக் காரணமான ராஜ்யமும், நான் வேண்டேன்.

[24] ஒழுகு சங்கிலி-அனேகம் மாடுகளைக் கட்டும்படியாக வடல்களில் கட்டப்படும் நீண்டதான சங்கிலி (அல்லது கயிறு). கோப்புண்டு - கட்டப்பட்டு, இறைக்குடிமகன்-வரிகொடுக்கும் படியாள். நெடுநேர்த்தி - பல பிரார்த்தனைகள்; மிகுந்த சிரத்தை.

டும் நெடுநாள் பண்ணின யஜ்ஞாதிப்ரயாஸத்திற்குப் பலமாக ஸ்தூலசரீரம் விழுந்தால் ஸஞ்சிதஸுக்ருத காரணமான ‡பூதஸூக்ஷ்மஸமுதாயத்தோடே கூடி ப்ராணபவநவேகவிக்ஷிப்தனாய்க்கொண்டு தூமாதி ராத்ரிக்ருஷ்ணபக்ஷதக்ஷிணாயநபித்ருலோகாகாசசந்த்ரமண்ட லத்தாலே ஸ்வர்க்கப் பரணிலே ஏறி, அங்கே தேவ ஜாதி என்னும்படி ஒரு தேஹத்தை எடுத்து, எருது பரதேசம்போன கணக்காய் தனக்கு மேலான தேவர்களுக்குப் 'பசு' என்னலாம்படி எடுத்துச் சுமந்து திரிந்து, ஏறவிட்டகர்மம் விலைசயற்றவளவிலே, [25]"அந்தவத்து பலம் தேஷாம்" [26]"ஆப்ரஹ்மபுவநால்லோகா:" [27]"சுவர்க்கமெய்தியும் மீள்வர்கள்" இத்யாதிகள்படியே தள்ளுண்டு தகரவிழுந்து, அங்கே தைவசரீரத்தையும் இழந்து, அதின் பூதஸூக்ஷ்மஸமுதாயத்தோடேகூட சந்த்ரஸ்தாநத்தினின்றும் ஆகாச-வாயு-தூம-அப்ர-மேக-வ்ருஷ்டி-வ்ரீஹ்யாதிகளாலே §பிரியப்பேரிட வொண்ணாதபடிகலந்து போந்து, அஸங்க்ருஹீதனாய்க்கொண்டு புருஷசரீரநரகத்திலே ப்ரவேசித்து, ரேதோரூபபரிணாமத்தாலே ஸ்த்ரீசரீரசோணிதமயகர்ப்பத்திலே விழு

‡பூதஸூக்ஷ்ம ஸமுதாயத்தோடேகூட—ம. §பிரித்துப் பேரிட-ம
[25]கீதை 7. 23. [26]கீதை 8. 16. [27]4. 1. 9.

எருது பரதேசம்போன கணக்காய்-தீனியைப்போட்டு வேலை வாங்கும் எஜமானனை வெறுத்து, 'ஸுகமாக இருக்கவேண்டும்' என்று நினைத்து எருது பரதேசம் சென்றால், அங்கொருவன் அதைப் பிடித்துக் கட்டி வேலை வாங்குவானே யொழிய, அதன் சொந்தக்காரனைப் போலத் தீனி போடமாட்டான். (அதுபோல ஜீவர்கள் ஸ்வர்க்கம் சென்றால் அங்கும் உழைக்க வேண்டியதே.) தகர=சிதறும்படியாக.

ந்து, [28]'கலில-புத்புதாதிபாவங்களையும் அடைந்து ஸ்ராவபாதாதி விபத்துக்களுக்குத் தப்பினுகில் [29]'புண்ணை மறைய வரியுண்டு' ஶக்ருந்மூத்ரஜலாவஜ்ஞ ஶாயியாய் *ஸம்பிண்டிதஸர்வகாத்ரனாய், முகம் புதையுண்டு, அஸ்தி பந்தநங்களான ஸர்வாவயவங்களையும் அநுபவித்து, உல்பஸம்வேஷ்டிதனாய், புக்நப்ருஷ்ட †க்ரீவனாய்க்கொண்டு ப்ராஜாபத்யவாயுவாலே தலை கீழாகத் திருப்புண்டு ப்ரஸூதிமாருதவசத்தாலே யோநியந்த்ரபீடிதனாய்க்கொண்டு மஹாதுக்கத்தோடே உஜ்ஞாநங்கள்போலே அஶுசிப்ரஸ்ராவத்திலே விழுந்து பாஹ்யவாயுஸ்பர்சத்திலே மோஹிநியான வைஷ்ணவமாயையாலே அபஹ்ருதப்ரஜ்ஞனாய் ஜந்மாந்தர-ஸம்ஸ்காரஜ ஸ்ம்ருதிகளை இழந்து, [30]'ஐவர் திசை திசை வலித்தெற்ற' பால்யாதி-வயோவஸ்தாநுபவார

*ஸம்பீடிதஸர்வகாத்ரனாய்—க. †ஶிரோக்ரீவனாய்—ப.

[28]கலலம்—பா. [28]கலிலம் (கலலம்)— ஒரு இரவு ஆன கர்ப்பம்; புத்புதம்—ஏழு ராத்திரிகளான கர்ப்பம்.
(ருதுகாலே ஸம்ப்ரயோகாத் ஏகராத்ரோஷிதம் கலலம், ஸப்தராத்ரோஷிதம் புத்புதம் பவதி)

ஸ்ராவம்—(நான்கு மாதத்திற்குள் ஏற்படும்) ஜலரூபமான கர்ப்ப விநாசம்; பாதம்—(ஐந்தாவது அல்லது ஆறாவது மாதத்தில் வரும் கடினமான கர்ப்பம்) விழுதல்.

295. 1. 5. (சரீரத்திற்குள் இருக்கும்) புண் முதலான தோஷங்களைக் காணவொண்ணுதபடி, இடைவெளியில்லாமல் கட்டி.

உல்பம்—கர்ப்பப்பை. (உல்பஸம்வேஷ்டிதோ புக்நப்ருஷ்ட ஶிரோக்ரீவாஸ்திஸம்ஹதி:— வி. பு. 6. 5. 10. இங்கு சொல்லப்பட்டதையெல்லாம் விஷ்ணுபுராணம் ஆறுவது அம்சம் ஐந்தாவது அத்தியாயத்தில் விஸ்தாரமாகக் காணலாம்.)

307. 1. 10. (ஐந்து இந்திரியங்களும் திக்குத்தோறும் இழுத்து உதைக்க)

ஊர்த்வஸம்வத்ஸரயாலே தத்தனாய், ³¹«ஜநகோ தாரஸுதம் ஜ்ஞாத்வாஶ்ரயவபூர்ணா ஹ்ருதவக்ஷதே» என்கிறபடியே ஏதேனுமொரு வயஸ்ஸிலே மரணவேதனையோடே தலைக்கட்டி பழைய வட்டத்திலே ³²சூறுவளிக்காற்றுபோலே சுழலும்படிகளைக் கேட்டால் ஸுகஷ்டாதி ஸம்வஸஜ நிவ்ருத்தியுண்டாம்.

³³ராவணஹிரண்யாக்ஷாதிகள் *கையிலே ஜந்த்வாதிகள் படும்பாட்டைக் கேட்டால், †சந்தனக் கழுவோடொத்த ஜொகவாஸாதிவஷங்களிலும் ஸங்கம் தீரும்.

அவர்களைப் பிடித்த ராவணாதிகள் தாங்களும் ³⁴கார்த்தவீர்யாதிகள் கையிலே கட்டுண்டும் நெருக்

* கையிலே படும்பாட்டை—ம. †சந்தனக்கழிவோடொத்த—க.

31 ³²சூறுவளிக் காற்று=சுழல் காற்று.

சந்தனக்கழு—குற்றவாளிகளைக்கழுவேற்றிக் கொல்வதற்கான கழுமரத்தைச் சந்தன மரத்தால் செய்தாலும், அதனால் இறப்பவனுக்கு ஸுகமிராது. அதுபோன்றவை இந்திராதிபதங்கள்.

³³ராவணன், ஹிரண்யன் முதலானோர், இந்திரன், குபேரன் முதலான லோகபாலர்களை ஜயித்து, அவர்களுடைய ராஜ்யம், மனைவி எல்லாவற்றையும் பறித்துக்கொண்டு, அவர்களை வெருட்டியும் சிறையிலிட்டும் ஹிம்ஸித்ததையெல்லாம் உணர்ந்தால், அவர்கள் பதவியிலும் ஆசை உண்டாகாது என்று கருத்து.

³⁴கார்த்தவீர்யார்ஜுனன் - மாஹிஷ்மதிக்கு அரசனான இவன் தவத்தால் ஆயிரம் கைகளையும் அளவற்ற பலத்தையும் பெற்றான். ஒருநாள் தன் ஆயிரம் கைகளாலும் நதியின் ஜலத்தைத் தேக்கி, தன் பத்தினிகளுடன் ஜலக்ரீடை செய்துகொண்டிருந்தான். அப்போது அந்த இடத்திற்கு மேற்கே ராவணன் ஆற்றுமணலில் பூஜை செய்துகொண்டிருக்க, தேக்கப்பட்ட ஜலம் அந்தப் பூஜையை வெள்ளமிட்டது. ராவணன் கோபங்கொண்டு, கார்த்தவீர்யார்ஜுனனோடு சண்டைக்குவர, அவன் ராவணனை நாண்கயிற்றால் கட்டித் தன் நகரத்திற்குக் கொண்டுபோய்விட்டான். பிறகு புலஸ்தியரின் வேண்டுகோளுக்கிணங்கி ராவணனை விடுவித்தான். (ராமாயணம் உத்தரகாண்டம் 77, 78). அவ்விதமே ராவணன் வாலியால் கண்டுண்டதும் இங்கே நினைக்கத் தக்கது.

குண்டும் முடிவில் புத்ரதாராதிகளையும் இழந்து கழுகு நிழலிலே ஶத்ருக்கள் கதறக் கிடந்தபடிகளைக் கேட்டால், [35]'திண்கழற்கால் அசுரர்கள்' செல்வங்களிலும் சிந்தை *செல்லாது.

இவர்களுக்கு வரம் கொடுத்து வாழ்விக்கவல்லனாய், [36]ஸர்வமேதயஜ்ஞத்தாலே 'தேவதேவன்' என்று பேர் பெற்றுத் திரிபுரம் எரிக்கும் சேவகமுடையனான ஸ்ருஷ்டிஸம்ஹாராதிகாரிக்கு [37]வ்ருகாஸுராதிவ்ருத்தாந்தங்களில் பிறந்த விசேஷங்களைக் கேட்டால், ஸாயுஜ்யத்திலும் ருசி பிறவாது.

---

*சேராது--ம

[35]3. 5. 2. (திண்கழல் – திருடமான வீரக்கழல்களணிந்த, கால்களையுடைய அஸுரர்களின் செல்வத்திலும்).

[36]ஸர்வமேதம் – தன்னுடையதெல்லாவற்றையும், கடைசியில் தன்னையும் கொடுத்துச் செய்யும் யாகம்.

பூமி, ஆகாசம், அந்தரிக்ஷம் என்ற மூன்று இடங்களிலும் பொன், வெள்ளி, இரும்பு, என்ற மூன்று உலகங்களால் அஸுரர்களுக்காக மயனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதற்குத் திரிபுரம் என்று பெயர். அந்த அஸுரர்களின் ஹிம்ஸையைப் பொறுக்காத தேவர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, அந்த பட்டணங்களையும் அவ்வஸுரர்களையும் சிவன் எரித்தார்.

[37]வ்ருகாஸுரன் - இந்த அஸுரன் தன் கொடிய தவத்தினால் பரமசிவனை ஸந்தோஷப்படுத்தி, 'நான் எவர் தலையில் கைவைக்கிறேனோ அவர் இறக்கவேண்டும்' என்று வரம் பெற்றான். அதைப் பரீக்ஷிப்பதற்காக சிவன் தலையிலேயே கையை வைக்கும் பொருட்டு அவரைத் தொடர்ந்தான். அதனால் பயந்து சிவன் ஓட, அப்போது விஷ்ணு ஒரு அழகிய சிறுவனாய் அவன் முன்தோன்றி இனிய வார்த்தைகளால் அவன் ஓடும் காரணத்தை விசாரித்தார். அவன் நடந்ததைச் சொல்ல, 'தக்ஷனுடைய சாபத்தால் பிசாசத் தன்மையை அடைந்த சிவனுக்கு இவ்வளவு சக்தி ஏது? நான்

சில ஸ்ருஷ்டிவிசேஷங்களிலே ருத்ரனுக்கு ஜ்யேஷ்ட ப்ராதாவாயும் பிதாவாயும் பிறந்து, ஸர்வேச்வரனுக்கு ஔரஸஸூநுவுமாய் அவ்யவஹிதசிஷ்யனுமாய்க் கொண்டு, க்ஷேத்ரஜ்ஞருடைய ஆநந்தங்களெல்லா வற்றிலும் மேலான ஆநந்தத்தையுடையனான ப்ரஹ்மா தான் [38]'பெருவிசும்பின்மீது போயிருக்கும் நெடுவெள்

நம்பவில்லை. உன் தலையிலேயே சற்றுக் கையை வைத்துப் பார்' என்று அச்சிறுவன் சொன்னான். மந்தபுத்தியான அவன் அவ்விதமே செய்ய, உடனே இறந்தான். (இது ஸ்ரீபாகவதம் தசமஸ்கந்தம் 88-வது அத்யாயத்தில் இருக்கிறது.)

அந்தகாஸுரன் - ஒரு ஸமயம் பரமசிவனுக்கும் அந்தகனுக்கும் யுத்தம் நேரிட, சிவனுடைய ஆயுதங்களினால் அடியுண்ட அந்தகனுடைய சரீரத்திலிருந்து பெருகின ரத்தத்தின் திவலைகள் ஒவ்வொன்றும் அவனடைந்த வரபலத்தால் ஒவ்வொரு அந்தகனாகக் கிளம்பி அவர்கள் பரமசிவனைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்போது சிவன் வாஸுதேவனைச் சரணமடைய, அந்த பகவானான விஷ்ணு சுஷ்கரேவதியை (அட்டை என்னும் ஜந்துவை) ஸ்ருஷ்டித்தார். அவையும் அவ்வஸுரனின் ரத்தங்களையெல்லாம் பருகிவிட்டன. (இது மத்ஸ்ய புராணத்திலுள்ளது. இக்கதையை ஆளவந்தாருடைய ஸ்தோத்ரத்தின் 13-வது சுலோக வ்யாக்யானத்தில் ஸ்ரீதேசிகன் எடுத்து உதாஹரித்திருக்கிறார்.)

வ்யஷ்டி ஸம்ஹாராதிகாரி— மஹாப்ரளய காலத்தில் ப்ருதிவீ முதலான பஞ்ச பூதங்களிலிருந்து பிரகிருதி வரையில் லோகங்களுக்கும் ஏற்படும் ஸம்ஹாரத்திற்கு 'ஸமஷ்டிஸம்ஹாரம்' என்றும், பஞ்ச பூதங்கள் வரையில் ஏற்படும் ஸம்ஹாரத்திற்கு 'வ்யஷ்டி ஸம்ஹாரம்' என்றும் பெயர். இந்த வ்யஷ்டி ஸம்ஹாரம் சிவனுடைய அதிகாரத்திலிருக்கிறபடியால், அவருக்கு வ்யஷ்டி ஸம்ஹாராதிகாரி என்று பெயர். அப்படியே நான்முகனுக்கு வ்யஷ்டிஸ்ருஷ்டி அதிகாரி என்று பெயர்.)

[38] தி. மொ. 11. 6. 6.

ளமெல்லாம் கலைக்காலளவாம்படி' வளர்ந்துவந்த மது-கைடபர்களைக் கண்டு மஹாபயாக்ராந்தனாய், தனக்குக் கண்களும் தநங்களுமான வேதங்களைப் பறி கொடுத்து, [39]சுருணை சோர்ந்த கணக்கனைப் போலே நீர்க்கடை நிலக்கடை யறியாதே விலாபம் பண்ண, அப்போது கேட்டருளினனொரு பரமகாருணிகனானவன் விரோதிநிராகரணம் பண்ணி வேதங்களையும் மீட்டுக்கொடுக்க, மீண்டும் 'அஜ்ஞாயிவதி' என்று வீற்றிருந்தபடியையும் அநுஸந்தித்து, [40]"ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா:" [41]"கர்மணாம் பரிணாமித்வாதாவிரிஞ்சாதமங்கலம்"

[39]சுருணை = கணக்கெழுதப்பட்ட ஓலைச்சுருள். நீர்க்கடை - நீர் தங்கும் குளம் முதலியவற்றின் எல்லை; நிலக்கடை - நிலங்களின் அளவு. [39]நீர்க்கிடை நிலக்கிடை—பா.

[40]ஆப்ரஹ்மஸ்தம்பபர்யந்தா: ஜகதந்தர்வ்யவஸ்திதா:।
ப்ராணிந: கர்மஜநிதஸம்ஸாரவசவர்த்திந: ॥
(வி. பு. 104. 23.)

ப்ரஹ்மா முதல் ஸ்தம்பமென்னும் சிறு புழு வரையிலுள்ள (இவ்வுலகிலுள்ள எல்லாப்பிராணிகளும் புண்யபாபரூபகர்மங்களால் வுற்பட்ட ஸம்ஸாரத்திற்கு அதீனமாய் இருப்பவர்கள்.)

[41]இதி மத்வா விரக்தஸ்ய வாஸுதேவ: பரா கதி: ॥
என்று உத்தரார்த்தம். (பாகவதம் 11. 19. 18.

அவரவர்களின் கர்மங்களின் பலனாலேயே உண்டானதாகையால் ப்ரஹ்மா வரையிலுள்ள ஸகல ஜீவர்களுடைய நிலைகளும் அமங்களமானது (துக்கரூபமானது) (என்று ஆராய்ந்து அறிந்து அவற்றில் ஆசையை விட்டவனுக்கு வாஸுதேவனே ஶ்ரேஷ்டமான உபாயம்)

('விபஶ்சிந்நச்வரம் பஶ்யேத் அத்ருஷ்டமபி த்ருஷ்டவத்')

[என்று ஸ்ரீ பாகவதத்தில் பாடம். ]

[42]“ பௌகூா மணயிதூ ஹொகெ ந வூதீதாஃ விதா உஷாஃ,” [43]“நினைப்பான் புகில் கடலெக்கலின் நுண் மணலில் பலர்” இத்யாதிகளையும் நிரூபித்தால், [44]“வத்ரூஃ வூஜாநாஜெஹூயம்” உத்ராதிகளிற்படியே ஹிரண்யமஹவைசத்தையும் த்ருணீகரித்து, [45]கூட்டரி யதுயராறுசுடரடியே கூடலாமாகில், ஒரு கஉம்வாதி ஷாவரஜந்த்தையே ஆகாங்க்ஷிக்கும்படியாம்.

[42]வைஷ்ணவ தர்மசாஸ்திரம்.

மஜ்ஞாயாஸிகதா யாரா யயா வஷ்டதி வாஸவெ

என்று பூர்வார்த்தம்.

(கங்கையின் மணல் போலவும், இந்திரன் வர்ஷிக்கும்போது மழை தாரைகள் போலவும்) இவ்வுலகில் (இருந்து) கழிந்தவர்களான பிரஹ்மாக்கள் எண்ணமுடியாதவர்கள்.

[43]1. 1. 4. நிரூபிக்கப் புகுந்தால், அலைவாயில் எக்கலில் நுண்ணிய மணலிலும் காட்டில் அதிகரான (ப்ரஹ்மாதிகள் இவ்வுலகங்களை ஆண்டு கழிந்தவர்கள்.)

[44]வத்ரூஃ வூஜாநாஜெஹூயம் வஶூநாம் வா ந காஉயெ। சுஹம் கஉம்வொ ஹூயாஸம் கூநொ வா யஉநாதடெ ॥

ப்ரஜாபதி, பசுபதி இவர்களின் ஐசுவர்யத்தை நான் ஆசைப்படவில்லை, யமுனைக்கரையில் (கண்ணன் ஏறி விளையாடும்) ஒரு கதம்ப மரமாகவாவது குந்த விருக்ஷமாகவாவது இருக்க விரும்புகிறேன்.

[45]4. 9. 9; 1. 1. 1. (சேருவதற்கு அறிதானதும், ஆச்ரயித்தவர்கள் துக்கத்தையெல்லாம் போக்கும் எழிலுள்ள திருவடிகளை அடையலாமாகில்)

*இப்படி பரஜவைதஸ்ஸாவத்தைக் கேட்டவர்களு க்கு [46]"ஸாதெ நெவ நி[47]"தஸ்ராஜோயொரயாஸ்தா," மைத்ரேய" என்கிறபடியே [48]இமையோர் வாழ் தனிமுட்டைக் கோட்டைக்குட்பட்ட குறிச்சிகளெல் லாம் மூவேழு நரகங்களோடொக்க இவையும் ஈரேழு †நரகம் என்று எண்ணலாம்படியிருக்கும். [49]"யம் லஸ்வா சாபரம் லாஹம் மநூதெ நாயிகம் ததஃ" என் னும்படியாய் நிர்துக்கமான [50]தெரிவரியவளவில்லா ஆநந்தாநுபவமும் ப்ரதிபந்தகவிஶேஷத்தா லேபரமாத்மாநுபவத்தோடே கூடாதே சிற்றின்பமாய்,

*'இப்படி' இது இல்லை—ம. †நரகம் என்னலாம்படியிருக்கும்-க.

[46]ஸாதெ நெவ நிரயாஸ்தாத ஸ்தாநஸ்ய பரமாத்மநஃ (பார சா. 196.4).

மற்றத் தேவர்களுடைய இந்த ஸ்தானங்களெல்லாம் பரமாத் மாவின் ஸ்தானத்தோடு ஒப்பிட்டால் நரகங்கள் தான்.

[47]வாஸுதெவெ மநோ யஸ்ய ஜபஹொமார்சநாதிஷு ।
தஸ்ராஜோயொ மைத்ரேய தெவேந்த்ரத்வாதிகம் பலம் ॥ (வி. பு. 2. 6. 43.)

ஏ மைத்ரேய! ஜபம், ஹோமம், அர்ச்சனை முதலிய காலங் களில் எவனுடைய மனது வாஸுதேவனிடமிருக்கிறதோ, அவ னுக்கு தேவேந்திரனுகை முதலான பலமெல்லாம் விக்னம்தான்.

[48]4-9-8 (ப்ரஹ்மாதிகளான தேவதைகள் வாழும் ஒப்பற்ற அண்டமாகிற கோட்டைக்குட்பட்ட). குறிச்சி—சிறிய ஊர்.

[49]கீதை 6. 22. எந்த யோகத்தை அடைந்து, (அதிலிருந்து ஓய்ந்தபோதும்) அதைக் காட்டிலும் மேலான வேறு லாபத்தை எண்ணுகிறதில்லையா.

[50]4. 9. 10. இந்திரியங்களால் அறியவரிதாயும் அளவற்றதாயும் இருக்கிற.

[51]"இறுகல் இறப்பென்னும் ஞானிக்கும் ‡அப்பய னில்லையேல்" என்றும் [52]"ஸர்வே ச்யவநதர்மாண:" என்றும் சொல்லுகிறபடி கழிப்பானுகையாலே [50]'ஒழிந்தேன்' என்று உபேக்ஷாவிஷயமாம். ஸாதநநிஷ்டனும் போலே ஸாத்யநிஷ்டனும் ஸாதநத்தைக் ஸர்வ ஸாதகமன்று. [53]"மன்னுறில்" என்னும் ஸூக்தியாலும் இவ்வர்த்தம் ஸித்தம்.

இப்படிப் ப்ரயோஜநாந்தரவிரக்தி பிறந்தால், [54]"உன்னலல்லால் யாவராலும் ஒன்றும் §குறை வேண்டேன்"

---

‡அப்பயனில்லையேல் என்னும்படி 'ஸர்வே ச்யவநதர்மாண:' என்று சொல்லும்படி—க.

§குறைவேண்டேன் என்றும், உன்னித்து மற்றோர் தெய்வம் தொழாளவனையல்லால் என்னும்படி (என்றும் சொல்லுகிறபடி) பரிமித பலப்ரதமான—க.

51 4. 1. 10. இறுகல்—சுருங்குதல், அதாவது ஆத்மமாத்ரானுபவத்தையே, இறப்பு - மோக்ஷம், என்னும் - என்று சொல்லுகிற ஞானிக்கும், அப்பயனில்லையேல் - அந்த பகவதுபாஸனமில்லையாகில், ஆத்மாநுஸந்தானம் பண்ணவொண்ணுது.)

[52]பார. சாந்தி. 3.50. 35. (ஐச்வர்யம், ஆத்மாநுபவம் இவற்றை விரும்புகிறவர்களெல்லாரும் பகவானிடமிருந்து புருஷார்த்தத்தைப் பெற்றதும் திரும்புகிறவர்களாகையால்) நச்வரத்தையே ஸ்வபாவமாக உடையவர்கள்.

அநுபவிக்கும் ஆத்மா நித்யமாயிருப்பதால், அவனுடைய ஸுகம் நித்யமாக இருக்கவேண்டும் என்று எப்படிச் சொல்லமுடியாதோ, அப்படியே அநுபவிக்கப்படும் வஸ்து நித்யமாயிருப்பதால் ஸுகம் நித்யமாயிருக்கும் என்று சொல்ல முடியாது.

[53]1. 2. 5. ஸ்திரமாக இருக்கப் பார்த்தால் (தன்னைப் பற்றினுல், 'இன்னமும் அதுக்கு அவ்வருகே ஒரு அனுபவமுண்டு' என்று இருக்க வேண்டாதபடியான நிலை நின்ற புருஷார்த்தத்தை பற்றப் பார்க்கில், ஸர்வேச்வரனைப் பற்று.) [54]5. 8. 3.

என்னும்படி ஸர்வவிதஸம்பந்தரூபமான [55]மற்றொரு தெய்வம் தொழாதே, [56]மற்றுமோர் தெய்வம் உளதென்றிருக்கும் ஸம்ஸாரிஸஜாதீயஜநத்தோடும் நெருங்காதே, [57]“யூயம் யூயம் வயம் வயம்” என்று வேறுபட்டு, [58]“கொள்ளக் குறைவிலாத வள்ளல் மணிவண்ணன் பக்கலிலும் [59]கூறை சோறு என்றாற்போலே தனக்கு மற்றொரு ப்ரயோஜநாந்தரத்தை அபேக்ஷியாதே, ஸ்வாபாவிகமான ஜ்ஞாநத்தில் உத்தரவாக்யத்திலே ஊற்றமுடையனும்.

தந்திரங்கள் அளவிலராய்த் தனத்தால் மிக்க
 தார்வேந்தர் தொழவையம் ஆண்டார் மாண்டார்
சந்திரனும் சூரியனும் வீயும் காலம்
 தாரகையின் வடம் அற்றுத் தனிவான் ஆகும்
இந்திரனும் ஏறுயர்த்த ஈசன் தானும்
 ஈரிரண்டு முகத்தானும் இல்லா வந்நாள்
நம் திருமால் நிலைகண்டார் நாக மெல்லாம்
 நரகென்று நற்பதமே நாடுவாரே. 7

இதி பரமபதஸோபாநே த்ருதீயம் விரக்திபர்வ

[55]4. 6. 10. [56]திரு. மொ. 8. 10. 3.
[57]ஸுகப்ரவ்ருத்தி ஸஹ ரோகா யூயம் யூயம் வயம்
 வயம் ।
அர்த்தகாமபரா யூயம் நாராயணபரா வயம் ॥
 ஏ உலகத்தீரே ! இது முதல் நீங்கள் வேறு; நாங்கள் வேறு. நீங்கள் அர்த்தகாமங்களை விரும்பிச் செல்லுகிறீர்கள்; நாங்களோ நாராயணனை நாடிச் செல்லுகிறோம்.
 [58]3. 9. 5. [59]பெரி. தி. 5.1.4. (கூறை - வஸ்த்ரம்)

[illegible]

துறவறமே துணிவார் துணுக்கற்ற இளந்துணிவோர்
உறவிலராதலில் நாமுயர்ந்தாருடன் ஒன்றிநின்றோம்
மறவழிமாற்றி எம்மையலைத் தீர்த்தவர் மன்னருளால்
கறவையுகந்தபிரான் கழல் சூடும் கருத்தினமே. 8.

இப்படி விவேக விசேஷத்தாலே ஆத்மாபஹாராதி நிவ்ருத்தியும், [1]நிர்வேதவிசேஷத்தாலே நிஷித்த நிவ்ருத்தியும், விரக்திவிசேஷத்தாலே பலஸங்க நிவ்ருத்தியும் பிறந்தாலும், பூர்வார்ஜிதமுமாய், அநுதப்தமுமன்றிக்கே க்ருதப்ராயஶ்சித்தமுமன்றிக்கே [2]ஆரப்தகார்யமுமாய், அநாரப்தகார்யமுமாய்க் கிடக்கிற அகஸமூஹத்தைப் பார்த்தால், போகத்தாலேயாதல் ப்ராயஶ்சித்தத்தாலேயாதல் நிஶ்ஶேஷமாகக் கழிக்க அரிதாய் இருக்கிறபடியையும்; இவற்றின் ஹேதுமான அநந்த [illegible]ஶரீரங்களைப் பரிக்ரஹித்து அபாரமான ஸம்ஸாரத்திலே அழுந்தவேண்டும்படி வரும் கர்ப்ப-ஜந்ம-ஜரா-மரணாதி-து:க-பரிவ்ருத்தி-ப்ரவாஹத்தையும்,

[1]நரகபயத்தால் பாபத்தைச் செய்யாதிருக்கவேண்டும் என்கிற எண்ணம் நிர்வேதம்; புண்யபலமான ஸ்வர்க்காதிகளின் தோஷத்தைக் கண்டு அவற்றில் ஆசையை விடுதல் வைராக்யம்.

[2] ஒருவனால் செய்யப்பட்ட அளவற்ற பாபங்களில், பலத்தை கொடுக்க ஆரம்பித்திருப்பது ஆரப்தகார்யம்; அந்த பாப பலத்தை அநுபவித்து முடிந்ததும், தங்கள் பலத்தை முறையே கொடுக்கும் பொருட்டு அவ்வநுபகாலத்தின் முடிவை எதிர்பார்த்திருப்பவை அநாரப்த கார்யம்.

[3]உயர ஏறித் துல்யசீலராய்த் தோற்றினாரை ஹஸ்த்தா லே 'த்வம்ஸ' என்று தகரவிழவிடுவார், [4]ஸ்வவிஷயவ்ருத்தி களை நரமாம்ஸபக்ஷணத்திற்கு மதாமதம் பண்ணி வைப்பார், [5]ஹ்ருத்ஸேவமானாரை சுவிநீதராக்கிக்கொ

---

3 இது இந்திரனைப் பற்றிய கதை. சந்திரவம்சத்து அரசனான யயாதி என்பவன் மஹாதபஸ்ஸைச் செய்து ஸ்வர்க்கம் சென்று அங்கு தேவேந்திரன் போலவே ஸகலஸுகங்களையும் அனுபவிக்க ஆரம்பித்தான். அதைக் கண்டு இந்திரன் 'தவத்தால் உனக்கு ஸமானமானவர் இருக்கிறாரா?' என்று கேட்க, யயாதி 'என்னைப் போல் உலகில் எவரும் தவம் செய்ததில்லை' என்று தான் செய்த தவத்தைப் புகழ்ந்து கூறினான். 'தான் செய்த தவத்தைக் கண்டு ஆச்சர்யப்பட்டால், தவம் குறைந்துவிடும்' என்பதைச் சொல்லி இந்திரன் யயாதியைக் கீழே தள்ளிவிட்டான். (பாரதம் ஆதிபர் வம் 82.)

4 ஸ்வவிஷய விருத்திகளை— தன் தேசத்தில் இருப்பவர்களை, மனுஷ்ய மாம்ஸத்தைத் தின்னும் பொருட்டு பூலோகத்திற்குப் போய் வரும்படி செய்பவர். இது பிரஹ்மாவைப்பற்றின உபாக் யானம்.

விதர்ப்பதேசாதிபனான ச்வேதன் என்பவன் ஆஹாராதிகளைத் தள்ளி கொடிய தவத்தைச்செய்து பிரஹ்மலோகம் சென்றான். அங்கு அவனுக்குக் கடும்பசியும் தாகமும் உண்டாயிற்று. 'அது ஏன்' என்று ப்ரஹ்மாவைக் கேட்க,, அதிதிபூஜை செய்யாமலும் சரீர ஸுகமொன்றையே கருதி நீ தவம் செய்தாயாதலால், பசி தாகமில்லாத என் உலகிலும் உனக்குப் பசி உண்டாயிருக்கிறது. அது நீங்குவதற்கு நீ தவம் செய்த குளத்தில் தினமும் காலையில் புஷ்டியான உன் பிணம் மிதக்கும்; அதை நீ தினம் தின்றுவருவா யாக' என்று ப்ரஹ்மா சொன்னார். பிறகு அவனுக்கு அகஸ்த்ய ரால் விமோசனம். (ராமாயணம் உத்தரகாண்டம் 77, 78).

5 வேலைக்காரர்கள் போல் தனக்கு பூஜை முதலான வேலை களைச் செய்துகொண்டிருக்க வேண்டியவர்களை தான் கொடுத்த வரத்தாலேயே கர்வமடையும்படி செய்து, அவனுக்குத் துன்பம் விளைவிப்பார். இது ருத்ரனைப்பற்றிய உபாக்யானம்.

கும் தொழ வீற்றிருக்கும்படி ஸாகாராதனாய், ஸஹஸ்ரவாஹம் சுழியாறுபட்டாற்போலே ஸவிஸ்தரமான ஸோமவேஷ்டனத்தையுடையனாய், ஸைவலந் போலவும் ஸஹஸ்ரைணஜர் ஸ்ஸை ஸங்களை நிறைத்தாற் போலவும் பரந்து உயர்ந்த ஸஹஸ்ரத்தின் ரணிக்கிரணஸ்ஸஹிதவத்தாலே 'ஸுணாகம்' என்னும் பேரையுடைத்தான பரமபதமெல்லாம் உஜ்ஜ்வலிதமாம்படி பண்ணக் கடவனை திருவநந்தாழ்வானைக் கண்டு;

அவனோடொக்க [45]ஒருமிடறாய் அநேகமுகமான ஸோமஸாத்தை ஆசைப்பட்டு, அவனுடைய அம்ருதவர்ஷிகளான இரண்டாயிரம் திருக்கண்களுக்கும் தான் ஏகலக்ஷயமாய், அவன் மேலே அமர்ந்திருக்கிற [46]'மேலாத்தேவர்கள் மேவித் தொழும் மாலாரை'க் கண்டு, தானும் அநஞ்ஞ்ருஷியாய் அநுஞ்ஞஸாவும் பெறும்.

பண்டையிரு வினையாற்றில் படிந்து பாரம்
காணாதே ஒழுகியநாம் பாக்கியத்தால்
வண்டமரும் மலர்மாது மின்னாய் மன்ன
வைசயந்தி மணிவில்லாய் விளங்க வான்சேர்

[45] திருவனந்தாழ்வானுடைய போகம் (- சரீரம்) ஒரு கழுத்தை உடையதும் (ஒரு மிடறாய்) பல முகங்களையுடையதுமாயிருக்கும்; இந்த முக்தன் ஆசைப்படும் போகமும் (அநுபவமும்) அதுபோலவே ஒரு மிடறாய் - ஆதிசேஷனோடு ஏக கண்டமாய், அநேகமுகமாய் - பலவிதங்களா இருக்கும் என்றபடி.

[46] 5. 1. 8. ஸர்வவிதத்திலும் உயர்ந்தவர்களான நித்யஸூரிகள் பொருந்தி அடிமை செய்யும், மாலாரை - ஸர்வாதிகனான ஸர்வேச்வரனை.

கொண்டல்அருள் மழைபொழிய வந்த தொப்பாம்
குளிர்ந்துதெளிந் தமுதாய விரசை ஆற்றைக்
கண்டணுகிக் கருத்தாலே கடந்து மீளாக்
கரைகண்டோர் கதியெல்லாம் கதித்திட் டோமே.
[17.

ஶ்ரீவரவரமுநயே நம:
அஷ்டமம் திவ்யப்ரபந்தம்

பூவளரும் திருமாது புணர்ந்த நம் புண்ணியனார்
தாவளமான தனித்திவம் சேர்ந்து தமருடனே
நாவளரும் பெருநான் மறையோதிய கீதமெல்லாம்
பாவளரும் தமிழ்ப் பல்லாண்டிசையுடன் பாடுவமே. 18.

இப்படி அதிமநோஹரமான ஸ்வர்ணஹேமமயவ்யூஹத்திலே ரஜதகிரியின்மேலே மரகதகிரி *இருந்தாற்போலே [1]'எழுலகும் தனிக்கோல் செல்ல வீற்றிருந்து' [2]'விண்ணோர் தலைவ'னாய் †குமாரயுவாவாய் [3]"சோதிவெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்னும்படி உதிதஸூர்யஸஹஸ்ரஸமுதாயம் போலே ஸர்வாதிகதேஜஸ்ஸையுடையனாய், [4]"விஶ்வமாப்யாயயந் காந்த்யா பூர்ணேந்த்வயுததுல்யயா" என்னும்படி ஸர்வாதிகலாவண்யத்தையுடையனாய்;

ஸர்வசேஷியான தன்னுடைய க்ருபையும் க்ஷமையும் வண்மையும் வடிவுகொண்டாற்போலே இருக்கிற நாச்சி

*சாய்ந்தாற்போலே—க. [1] 4. 5. 1. [2] 1. 5. 6

†ஸுகுமாரயுவாவாய்—க.

குமாரயுவா - கௌமாரம் யௌவனம் இரண்டுமில்லாமல், இரண்டிக்கும் நடுவே 'இளகிப் பதித்திருக்கும் நிலை.'

[3] 5. 5. 10. சோதிவெள்ளத்தின் உள்ளே = தேஜோராசியின் மத்தியில், எழுவதான, ஓர் உரு - ஒப்பற்ற விக்ரஹம்.

[4] ஸாத்வதஸம்ஹிதை 2. 70. ஆயிரக்கணக்கான பூர்ணசந்திரனுக்கு ஒப்பான காந்தியினால் ஜகத்தை (போஷித்து) ஸந்தோஷப்படுத்திக்கொண்டு

மார்களில் [5]ஸ்வாபிமத - நித்ய - நிரவத்ய-அநுரூப ஸ்வரூபாதிகளை உடையளாய், [6]ஸ்வவைச்வரூப்யத்தாலே ஸதாநுபவம் பண்ணாநின்றாலும் இன்று அநுபவிக்கத் தொடங்கினாற்போலே ஆச்சர்யபாவமுடையாளாய், [7]"காந்தஸ்தே" இத்யாதிகளின்படியே ஸ்வ

[5]சரணாகதிகத்யம். ஸ்வாபிமத - தனக்கு விருப்பமானதும், நித்ய - நித்யமானதும், நிரவத்ய - ஒருவித தோஷமற்றதும், அநுரூப- தனக்கேற்றதுமான, ஸ்வரூபம் விக்ரஹம் முதலியவற்றை உடைய (பிராட்டி).

[6]ஸ்வவைச்வரூப்யேண ஸதாऽநுபவதோऽபி அபூர்வவத் விஸ்மயமாதததா (ஸ்தோத்ர ரத்னம் 38.)

ஸ்வவைச்வரூப்யத்தாலே - தன்னுடைய உலகத்திற்கெல்லாம் அந்தர்யாமியாயிருக்கும் ரூபத்தாலே.

[7]சதுச்லோகி. 4.

காந்தஸ்தே புருஷோத்தம: பணிபதி: சய்யாஸநம் வாஹநம்
வேதாத்மா விஹகேச்வரோ யவநிகா மாயா ஜகந்மோஹிநீ ।
ப்ரஹ்மேசாதி ஸுரவ்ரஜ: ஸதயிதஸ் த்வத்தாஸ தாஸீகண:
ச்ரீரித்யேவ ச நாம தே பகவதி ப்ரூம: கதம் த்வாம் வயம் ॥

ஒருவித விகாரங்களில்லாததும், சுத்தம் அசுத்தம் என்ற இரண்டு விதமான பெரியவிபூதிகளையுடையதும், ஸர்வோத்க்ருஷ்டமானதும், பெரியதும், பிறருக்கு பெருமையைச் செய்வதுமான யாதொரு ஸ்வரூபம் பகவானுடையது இருக்கிறதோ, அந்த ஸ்வரூபத்தைக்காட்டிலும் (தன் ஸௌந்தர்யாதிகளால்) அவருக்கே அதிகப்ரீதியைத் தருவதும், மிகவும் ஆச்சர்யமானதும், ஆச்ரிதர்களுக்குப் பெருமையை அளிப்பதுமான யாதொரு

ஆகாரஸம்ஶ்லேஷத்தை உடையளாய், [8]'திருமார்வத்து மாலை நங்கை'யாய், [9]'அமுதில் வரும் பெண்ணமு'தாய், [10]'வேரி மாருத பூமேலிருந்து வினைதீர்க்கு'மவளாய், தன் கடாக்ஷ லேசத்தாலே கைவல்யாவஸாநாதி வைபவத்தையும் கொடுக்குமவளாய், [11]"தேவதேவ திவ்யமஹிஷீ" என்னும்படியான மேன்மையும், [12]"கருணாஸ்ராநதமுகீ" என்னும்படியான நீர்மையும் உடையளான பெரியபிராட்டியார் 'தாக்ஷிண்யஸீமா' என்று

திவ்யமங்கள விக்ரஹமுண்டோ, ஸ்வேச்சையாலே அவதரித்து விளையாடுகிற இன்னும் வேறு வேறு எந்த விக்ரஹங்களுண்டோ, அவைகளெல்லாம், ஹே லக்ஷ்மீ, உன்னுடையதான, அவற்றிற்கேற்றரூபம்முதலிய ஸம்பத்துக்களோடு பிரிவின்றிச் சேர்ந்தேயிருக்கின்றன என்று (ச்ருதிஸ்ம்ருதிகள்) கூறுகின்றன.

[8] 10. 10. 2. திருமார்வத்து - திருமார்புக்கு, மாலை - மாலைபோல் அலங்காரமாய், நங்கை - (பெருமாளுக்கும் பெருமையைக் கொடுக்கக்கூடிய) குணம் நிரம்பினவளாய்.

[9] தி. மொ. 6. 1. 2. அமுதில் - தேவதைகள் பெற்ற அம்ருதத்தில் நின்றும், வரும் - (ஸாரபூதமாய்) வரும், பெண் அமுது — பெரிய பிராட்டியார் என்னும் அம்ருதம்.

[10] 4. 5. 11. வேரிமாருத - வாஸனை மாறாத, பூமேலிருந்து, வினை தீர்க்குமவளாய் - நம் பாபங்களையெல்லாம் போக்குமவளாய்.

[11] சரணாகதிகத்யம். தேவர்க்கெல்லாம் தேவனான பெருமாளுடைய பத்நீகளில் ப்ரதானமானவள்.

[12] லக்ஷ்மீஸஹஸ்ரநாமம். கருணா - தயையினால் (உண்டான) ஆஸ்ர- கண்ணீர் நிரம்பியதும், ஆநத - (ஆச்ரிதர் பக்கல் அன்பினால்) வணங்கியதுமான, முகீ - முகத்தை உடையவள். தாக்ஷிண்யஸீமா - தாக்ஷிண்யத்தின் உயர்ந்த நிலை; (தெற்கு திக்கின் எல்லை என்று மற்றொரு அர்த்தம்).

தோற்றும்படி ஜக்ஷிணவாமஸ்த்திலே நீலமேகத்தை அணைந்த மின்போலே ஸேவித்திருந்து, தன்னுடைய ஸௌஷிக்ய-ஸொௗந்தர்ய-ஜௌஜ்வல்யாதிகல்யாணகுணங்களைப் பூரித்துக்கொண்டு, அவிலஸ்திஜநங்களை அவஸரோசிதாஸேஷஸேஷவ்ருத்திகளிலும் ஆஜ்ஞாபிக்க, [13]"ஸாவஂஸஹஸ்ரீநீலா நாயக" என்கிறபடியே பெரியபிராட்டியாருடைய ஸமாநாகாரம் என்னலாம்படி அநவரதவஹுமாந விஷயையாய், [14]'பச்சைமாமலை போல் மேனிக்கும் படிமாவான நிறத்தை உடையளான [15]'பார் என்னும் மடந்தை'யும்;

[16]'அல்லிமலர்மகள் போகமயக்குகள்' அத்யல்பம் என்னும்படி நித்யஸுவொகம் நின்றவிடம் தெரியாதே [17]'நீளா துங்கஸ்தநகிரிதடீஸுப்தம்' என்னப்பண்ணுமவளாய், நீளொத்துஸ்ரீயையான ஸ்ரீநீளைப்பிராட்டியும்;

அடியார் இடத்திலே ஸேவித்திருக்கும்படி தாங்களும் இடத்திலே ஸேவித்திருக்க;

[13]சரணாகதிகத்யம். (லக்ஷ்மீபோலவே) இப்படியிருக்கிற, பூமி, நீளை இருவருக்கும் நாயகனே ?

[14]திருமாலை 2. (படிமா - உபமானம் ஒப்பு).

[15]2 8 7. பார் என்னும் மடந்தை - ஸ்ரீ பூமிப் பிராட்டி.

[16]3. 10. 8. அல்லிமலர் மகள் - தாமரைப்பூவில் வஸிக்கும் பெரிய பிராட்டியாரோடு, போக - சேர்த்தியாலே (பிறந்த) மயக்குகள்: (ஆச்சர்யமான) மயக்கங்கள், (அல்லது) ஆநந்தங்கள்.

[17]திருப்பாவைத் தனியன் (பட்டர் அருளிச் செய்தது). நீளையினுடைய உன்னதமான ஸ்தனங்களாகிற மலைத் தாழ்வரையில் (சாய்ந்து) உறங்கும் (கிருஷ்ணனை).

அடியார் இடத்திலே-அடியார்கள் தங்களுக்கேற்ற ஸ்தானத்திலே; தாங்களும், இடத்திலே - இடது பக்கத்திலே.

[18]'ஸேவ்ய: ஸ்ரீபூமிநீளாபி:', [19]"உடனமர் காதல்மகளிர் திருமகள் மண்மகள் ஆயர்மடமகள் என்றிவர் மூவர்" இத்யாதிகளில் சொன்ன சேர்த்தியிலே அடிமை செய்யுமவர்களுக்கு [20]'ரஸம்' என்றும் 'ஆநந்தம்' என்றும் சொல்லும்படியான ‡நிரதிஶயபோக்யத்தையுடையனை நிருபாதிகஶேஷியை நிருபாதிகஜ்ஞாநவிகாஸத்தாலே [21]"அவாவறச் சூழ்ந்தாய்" என்னும்படி அநுபவித்து;

---

‡நிரதிசய போக்யத்தையுடையனை—க.

நிருபாதிக - ஒரு காரணத்தைப் பற்றவிராமல், ஸ்வபாவமாகவே (சேஷி) - ஸ்வாமியாக இருப்பவர்.

[18] ஸுவைஷ்ணவே இதி ஶ்லோகே (ரஹஸ்யரக்ஷாயாம்)
த்⁴யேயோ வைகுண்ட²நாத²ஸ்து அநந்தாஸநஸம்ஸ்தி²த: ।
ஸேவ்ய: ஸ்ரீபூ⁴மிநீளாபி⁴: வாஸுதே³வஸ்ஸநாதந: ॥

ஸ்ரீ வைகுண்டநாதனை வாஸுதேவனை திருவனந்தாழ்வான் பேரில் எழுந்தருளியிருப்பவனாகவும், ஸ்ரீ, பூமி, நீளை என்ற மூன்று பிராட்டிமார்களாலும் ஸேவிக்கப்படுகிறவனாகவும் த்யானம் (செய்ய வேண்டும்.)

[19] 1. 9. 4. உடனமர் - (பிரிவை ஸஹிக்கமாட்டாமையால்) கூடவே, அமரவேண்டும்படியான, காதல் - காதலையுடைய, மகளிர் - தேவிகள்; திருமகள் - பெரியபிராட்டியார், மண்மகள் – ஸ்ரீ பூமிப் பிராட்டி, ஆயர்மடமகள் - கோப குலத்தில் பிறந்தவளும் ஆத்மகுணங்கள் நிரம்பினவளுமான நப்பின்னைப்பிராட்டி என்ற இவர் மூவர்.

[20]'ரஸோ வை ஸ:'; 'ஆநந்தோ ப்³ரஹ்ம'— தை. உப.

[21] 10. 10. 10. அவாவற - (எல்லாவற்றையும் காட்டிலும் பெரிதான) என் ஆசையெல்லாம் தீரும்படி; சூழ்ந்தாய் - வந்து (என்னுடன்) கலந்தாய்.

[22]"ததோऽபி தஸ்ய ப்ரியதரம் ரூபம் யதத்புதம்" என்றும், [23]"நால்தோளமுது" என்றும் பேசப்பட்டு, [24]'குன்றாடு கொழுமுகில் போல் குவளைகள் போல் குரைகடல்போல் நின்றாடுகணமயில்போல் நிறமுடைய' [25]'பொன்னின் வண்ணம் மணியின்வண்ணம் புரையும் திருமேனி'யில் அவயவஶோபையிலும் ஆபரணச் சேர்த்தியழகிலும் ஆழங்காற்பட்டு, ஸகலவேதாந்தஸாரஸாரஜ்ஞரான முமுக்ஷுக்கள் பண்ணும் ரஞ்ஜகவ்யாபாரங்களைக் கொண்டு [26]"விபந்யவ:" என்கிற ஸ்ருதியின்

---

[22]சதுச்சுலோகி—4. ததோபி - (ஆநந்தமயமான) பகவத்ஸ்வரூபத்தைக் காட்டிலும் கூட, தத்ப்ரியதரம் - (அழகிய அமைப்பினால்) அவருக்கு அதிகப் பிரியமானதும், அத்யத்புதம் - ஆச்சர்யத்தைத் தருவதுமான, யத்ரூபம்-யாதொரு (பரமபதத்திலுள்ள, திவ்யமங்கள விக்ரஹமுண்டோ.

[23]5. 8. 7. நால்தோள் நான்கு தோள்களைப் பெற்றிருக்கும், அமுது - அம்ருதம். (அம்ருதம்போல் போக்யமானவன்).

[24]பெரி. தி. 4. 8. 9. குன்றாடு - மலையின் உச்சியிலே நின்று அசைகிற, கொழுமுகில் போல் - அதிக நீரை முகந்துகொண்டு ப்ரகாசிக்கிற மேகம்போலவும், குவளைகள்போல்-அப்போதலர்ந்த நீலோத்பலங்கள் போலவும், குரை - சப்திக்கிற, கடல் போலவும், நின்று ஆடு - (ஸந்தோஷத்தாலே) நின்று ஆடிக்கொண்டிருக்கிற, கணமயில்போல் - மயில் திரள்போலவும், நிறமுடைய-நிறத்தை (அல்லது அழகையுடைய பெருமாள்).

[25]பொன்னின் வண்ணம் புரையும் திருமேனி—க.
தி. மொ. 4 9. 8. பொன்னின் வண்ணம் - ஸ்வர்ணத்தின் வர்ணத்தையுடைத்தாயிருக்கும்; மணியின் வண்ணம் - நீலரத்னத்தின் வர்ணத்தையுடைத்தாயிருக்கும்; புரையும் - இவற்றோடெல்லாம் பொருந்தின (அல்லது ஒப்பான, திருமேனி) ஆழங்கால் பட்டு - அழுந்தி; ஈடுபட்டு என்று அர்த்தம்.

[26]விபந்யவ: - விவிதமான ஸ்தோத்ரங்களைப் பண்ணுகிற்பர்கள்.

படியே விவிதஸ்தோத்ரங்களைப் பண்ணத் தொடங்கி; ஷிவ்ராஜகவஜக்ஷீயாகிற ராத்ரியோடே சுவபிதவபடநா வாசபருத்தாலே சேர்ந்தது என்னலாம்படி [27]"கதிராயி ரமிரவி கலந்தெரித்தாலொத்த நீள்முடியைப்பார்த்து, [28]"முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்தது வோ" என்பது;

[29]வதநாரவிந்த மகரந்தரஸ ஆஸ்வாதத்திற்காக வண்டொழுங்கு படிந்தாற்போலே அசைகிற திருக்குழல்கற்றைகளைப் பார்த்து, [30]"கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின் உள்கொண்ட நீலநன்னூல் தழைகொல்? அன்று, மாயன் குழல்" என்பது;

---

[27]பெரி. தி. 4.1.1. கதிர் ஆயிரம்-ஆயிரம் கிரணங்களையுடைய, இரவி அநேக ஸூர்யன்கள், கலந்து, எரித்தாலொத்த - சேர்ந்து ப்ரகாசித்தாற் போலே இருக்கும், (அல்லது அவர்களை உருக்கி வார்த்தப்ராகாரமோ என்னும்படி), நீள் முடி - (ஸர்வஜகதீச்வரனாயிருக்கும் பெருமையைக் காட்டும்படி) நீண்ட கிரீடம்.

[28]3. 1. 1. உனது முகச்சோதி - உன்னுடைய முகத்தின் ஒளியானது, முடிச்சோதியாய் - கிரீடத்தின் தேஜஸ்ஸாக் மலர்ந்ததுவோ-மேலே கிளம்பிற்றோ?

[29]வதநாரவிந்த - முகமாகிற தாமரையின், மகரந்தரஸ-தேனை, ஆஸ்வாதத்திற்காக - புஜிக்கும்பொருட்டு.
திருக்குழல் கற்றைகள் - அழகிய சுருண்ட தலைமயிர்.

[30]7. 7. 9. கோள்கின்ற - (ப்ரளயகாலத்தில் லோகத்தையெல்லாம் வ்யாபிக்கிற, கோள் - தன்மையையுடைய, இருளை சுகிர்ந்திட்ட - பன்னி (அஸாரமான அம்சமெல்லாம் போம்படி அதைக் கழித்து), கொழும் சுருளின் - அழகியசுருளின், உள்கொண்ட - உள்ளேயிருக்கும், நீல - வயிரமாய் நீலமான நிறத்தையுடைத்தாய், நல் - நன்றாயிருந்துள்ள, நூல் தழை கொல் - நூல் திரளோ? அன்று; மாயன் குழல் - ஆச்சர்யபூதனான பகவானு

அத்திருக்குழல்சேர்த்தியாலே ஒரு ஹாஸம் இருளோடே சேர்ந்த அஷ்டமீ-சந்த்ரனை அநுகரிக்கிற திருநெற்றியை அநுபவித்து, [31]"நாள் மன்னு வெண்திங்கள் கொல்? நயந்தார்கட்கு நச்சிலை கொல்?" என்பது;

அத்திருநெற்றியில் [32]அழகுக்குக் கீற்றெடுக்கலாம்படியிருக்கிற திருப்புருவங்களை அநுபவித்து, [33]"இன்னு

---

டைய திருக்குழல். (பருத்தியை பன்னி எடுத்து, பட்டை போட்டு, பட்டையின் மேல்புறத்திலிருக்கும் பஞ்சு அழுக்கும் அஸாரமுமாயிருக்கலாமாதலால், பட்டையின் உட்புறத்திலிருந்து நூல்வரும்படி நூற்றால், அந்த நூல் எவ்வளவு வெளுப்பாகவும் மெல்லியதாயும் இருக்குமோ, அதுபோல் இருட்டைப் பஞ்சுஸ்தானத்தில் வைத்து அதிலிருந்து நூற்ற நூல் மாதிரி இருக்கலாமோ என்றால் ஸர்வேச்வரனுடைய திருக்குழல்களின் அழகுக்கு அதுவும் நேர் நில்லாது. நேருக்கு நேர் திருஷ்டாந்தமாக ஒரு வஸ்து இல்லாததுமட்டுமல்ல. இவ்வளவு சிக்ஷித்தாலும் ஒன்றும் உபமானமாகப் போதாது என்கிறார்.)

[31] 7. 7. 7. நாள்-(பூர்வபக்ஷத்து அஷ்டமியான) நாளில், மன்னு-ஸ்திரமாக இருந்து, வெண் - (களங்கம் தெரியாதாகையால்) வெளுத்திருக்கும், திங்கள் கோல் - சந்திரனோ? (அல்லது) நயந்தார்கட்கு - தன்னை ஆசைப்பட்டார்க்கு, நச்சிலை கோல் - விஷப்பூண்டாயிருப்பதோ? (விரும்பவேண்டாதிருக்கிறதோ)

[32] அழகுக்குக்கீற்றெடுத்தல்-பொன்னின் மாற்றறிவதற்காக உரைப்பது போல் உரைத்துப் பார்த்தல்.

[33] 7. 7. 4. இன்=இனியதான, உயிர்க்கு - ப்ராணனை (அபஹரிக்கைக்காக), ஏழையர்மேல் - (பரமபுருஷனைக் காண ஆசைப்படும்) பெண்கள் மேலே, வளையும் - (தானே) வளைந்து (துன்புறுத்தும்), இணை நீலவிற் கோல் - நீலமான இரண்டு வில்லோ? (அங்ஙனன்றியே), மன்னிய - (சரீரத்தோடு) கூடியவனாய், சீர் - (அழகு முதலான) குணங்களையுடையனான, மதனன் - மன்மதனுடைய, கருப்புச் சிலை கோல் - கரும்புவில்தானோ.

யிர்க்கு ஏழையர் மேல் வளையும் இணை நீலவிற்கொல்? மன்னிய சீர்மதனன் கருப்புச் சிலை கொல் ?" என்பது; [34]"ஈஶ்வரோऽஹம்" என்று இருப்பாரைத் தோற்பித்து [35]"நமஸ்தே" என்று திருவடிகளிலே விழப்பண்ணும் [36]"கரியவாகிப் புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்களைக் கண்டு, [37]"ஏழையர் ஆவி யுண்ணும் இணைக் கூற்றங்கொலோ? அறியேன்; ஆழியங் கண்ணபிரான் திருக்கண்கள்கொலோ" என்பது;

[38]ஶ்ருதிஸௌரபிநிஶ்வாஸமான திவ்ய நாஸாவம்ஶத்தைப் பார்த்து, [39]"மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ? கொழுந்தோ ?" என்பது;

---

[34]கீதை - 16. 14. அஹம் - நான், ஈஶ்வர: - ஸ்வதந்த்ரன்.

[35]ஜிதந்தே 1. 1. (ஏ புண்டரீகாக்ஷ) நமஸ்தே - (உன் கண்ணழகுக்குத் தோற்று) உன்னை நமஸ்கரிக்கிறேன்.

[36]அமல 8. கரியவாகி - கறுத்து, புடைபரந்து - பரவி விசாலமாய் மிளிர்ந்து - சலித்து, செவ்வரி ஓடி - செவ்வரிபடர்ந்து, நீண்ட - (காதளவும்) நீண்ட, அ - அப்படிப்பட்ட, பெரியவாய - பெரியனவான, கண்கள்.

[37]7: 7. 1. ஏழையர் - (சபலைகளான) பெண்களுடைய, ஆவி - ப்ராணனை, உண்ணும் - அபஹரிக்கும், இணை - ஒன்றுக்கொன்று சேர்த்தியான) இரண்டு, கூற்றம்கோலோ - ம்ருத்யுவோ, அறியேன் - (அங்ஙனன்றியே), ஆழி - கடல்போல் ச்ரமஹரமானதும், அம் - அழகியதுமான (வடிவையுடைய), கண்ணபிரான் - உபகாரகனான ஸ்ரீ க்ருஷ்ணனுடைய, திருக்கண்கள் கோலோ - கண்கள்தானோ ? அறியேன்.

[38]சுருதி-வேதங்கள், ஸௌரபி - கமழும், நி:ஶ்வாஸமான - மூச்சுக் காற்றையுடைய, நாஸாவம்ஶம் - அழகிய மூக்கை.
(யஸ்ய நிஶ்வஸிதம் வேதா:)

[39]7. 7. 2. மாடு - (கடல்போன்ற கண்களுக்கு) ஸமீபத்திலே, உயர் - (அதையே ஊற்றாகக் கொண்டு) ஓங்கி வளர்ந்த, கற்பகத்தின் வல்லியோ - கற்பகத்தின் கொடியோ; கொழுந்தோ - (எப்போதும் பசுமை மாறாமையாலே) கொழுந்தோ ?

நாச்சிமாருக்கு [40]லீலாமணிதர்ப்பணங்கள்போலேயிருக்கிற திவ்யகபோலங்களைப் பார்த்து, 'வர்ணிக்கைக்கு நிலமன்று' என்று, [41]"கண்கள் சிவந்து பெரியவாய், வாயும் சிவந்து கனிந்து, உள்ளே வெண்பல் இலகு சுடர் இலகுவிலகுமகரகுண்டலத்தன்" என்று சுற்றடிக் கொள்வது;

[42]'செம்பவளத்திரள்'போலே இருக்கிற திவ்யாதரபல்லவத்தைப் பார்த்து, [43]"வாலியதோர் கனிகொல் ? வினையாட்டியேன் வல்வினை கொல் ? கோலம் திரள் பவளக்

[40] லீலா - *விளையாட்டுக்கான,* மணிதர்ப்பணங்கள் - *ரத்னமயமான கண்ணாடிகள்.*

[41] 8. 8. 1. கண்கள் சிவந்து பெரியவாய் - *விசாலமாய், (அப்படியே)* வாயும் சிவந்த - *திருவதரங்களும் சிவந்து,* கனிந்து - *பழுத்து,* உள்ளே - *உட்புறத்தில்,* வெண் - *வெளுத்த,* பல் - *பற்களினுடைய,* இலகு - *விளங்குகிற,* சுடர் - *ஒளியையும்,* இலகு - *அத்யுஜ்ஜ்வலமாய்,* விலகு, - *அசைந்துகொண்டிருக்கிற,* மகரகுண்டலத்தன் - *மகர குண்டலங்களையுடையவன்.*
சுற்றடிக்கொள்வது - *கன்னங்களை நேரில் வர்ணிக்கமுடியாததால், அதைவிட்டு, கண், உதடுகள், பல், காது முதலான சுற்றிலுமுள்ளவற்றை வர்ணிப்பது.*

[42] 3. 5. 4. செம்பவள - *சிவந்த பவளத்தின்,* திரள் - *ஸமூஹம் போலே.*

[43] 7, 7. 3. வாலியது - *ஸ்திரமாய் (அதாவது பிஞ்சாகி பழுத்து அழுகிப்போதல் முதலான நிலைகளில்லாமல் எப்போதும் ஏகரூபமாய் பக்வமாய்),* ஓர் - *ஒப்பற்ற* - கனிகொல் - *பழமோ?* வினையாட்டியேன் - *(இதை இப்போதே அனுபவிக்கப்பெறாத) பாபத்தையுடையவளான என்னுடைய,* வல்வினைகொல் - *கழிக்க அரிய பாபமோ ?* கோலம்திரள் - *அழகு திரண்டிருந்துள்ள,* பவள - *பவளத்தினுடைய,* கொழுந்துண்டம்- *இளமை பொருந்திய துண்டமோ ?*

கொழுந்துண்டம் கொலோ?'' [44]"கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ? திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ?'' என்பது;

[45]ஸ்மிதாநநனைக் கொண்டு தோற்றின [46]'தூமுறுவல் தொண்டைவாய்ப் பிரா'னுடைய தூமுறுவலைப் பார்த்து, [47]''என்று நின்றே திகழும் செய்ய வீன் சுடர் வெண் மின்னுக்கொல்? அன்றி என்னுவி அடும் அணிமுத்தம் கோலோ?'' என்பது;

காஞ்சிக்கு த்வாரதோரணங்கள் போலே இருக்கிற திவ்ய கர்ணபாசங்களைப் பார்த்து, [48]''மகரம் தழைக்கும் தளிர் கொல்?'' என்பது;

---

[44]நா. தி. 7. 1. திரு - *அழகிய*, பவளம் - *பவளம்போன்று*, செம் - *சிவந்த*, வாய்தான் - *திருவதரமானது*, கருப்பூரம் - *பச்சைக் கற்பூரம்போல்*, நாறுமோ - *பரிமளிக்குமோ?* கமலப்பூ - *செந்தாமரை மலர்போலே*, நாறுமோ - *பரிமளிக்குமோ? (அல்லது)* தித்தித்திருக்குமோ - *இனிதாயிருக்குமோ.*

[45]*புன்சிரிப்பு தவழும் முகத்தினனாய்*
(*தாஸாஸாவிரஹச்ருச: ஶௌரி: ஸ்மிதாநநாம் ஸ்ரஜ:*)

[46] 5. 3. 8. தூ - *வெண்மையான*, முறுவல் - *தந்த பங்க்தியையும்*, தொண்டைவாய் - *தொண்டைக் கனிபோல் சிவந்த அதரத்தையுமுடையனான*, பிரான் - *பரமோபகாரகனான (பெருமாள்)*

[47] 7. 7. 5. என்றும் - *எப்போதும்*, நின்றே - *ஒரேமாதிரியாக நின்று*, திகழும் - *ப்ரகாசிப்பதாய்*, செய்யசுடர் - *சிவப்பான சுடரை*, ஈன் - *வெளிவிட்டுக்கொண்டிருக்கிற*, வெண்மின்னுக் கொல் - *வெளுப்பான மின்னலோ?* அன்றி - *அன்றிக்கே*, என்னுவி - *என் உயிரை*, அடும் - *ஹிம்ஸிக்கும்*, அணி - *அழகான*, முத்தம்கோலோ - *(முத்துப்போன்ற) பற்கள் தானோ?* *கர்ணபாசங்கள் - அழகிய காதுகள்.*

[48] 7. 7. 6. மகரம் - *மகரகுண்டலம்*, தழைக்கும் - *தளிர்க்கிற*, தளிர்கோல் - *துளிர்தானோ?*

[49]'சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதிபரந்த' ஸம்பூர்ண சந்த்ரனும் 'நேரொவ்வா'ன் என்னும்படியான திருமுகத்தில் அழகைத் திரள அநுபவித்து, [50]''கோளிழைத்தாமரையும் கொடியும் பவளமும் வில்லும் கோளிழைத்தண்முத்தமும் தளிரும் குளிர்வான் பிறையும் கோளிழையாவுடைய கொழுஞ்சோதி வட்டம் கொல் ?'' என்பது;

[51]''𑌕𑌰𑍁𑌷𑍍𑌵 𑌮𑌾𑌮𑌨𑍁𑌚𑌰𑌂'' என்றிருப்பாரைக்கூவிக்கொள்ளும்போது, [52]'𑌸𑍍𑌨𑌿𑌗𑍍𑌧𑌗𑌂𑌭𑍀𑌰𑌮𑌧𑍁𑌰' நாதமாய், நாச்சிமாருடைய வளைத்தழும்போடு வாசியில்லாத ரேவாதுயத்

[49]பெரி. தி. 1. 4. 3. ஒளிவட்டம் - ஒளியையுடைய மண்டலம், சுற்றும் சூழ்ந்து - பரிபூர்ணமாக ஆகி, சோதிபரந்த - களங்கமில்லாததால் தேஜஸ்ஸாலே வ்யாப்தமாய் இருக்கிற.

[50]7. 7. 8. கோள் - தன் ஒளியை, இழை - தனக்கு ஆபரணமாக உடைய, தாமரையும், கோடியும் - கற்பகக் கொடியும், பவளமும் வில்லும், கோள் - தன் அழகை, இழை - ஆபரணமாக உடைய, தண்முத்தமும் - குளிர்ந்த முத்தமும், தளிரும், குளிர்- சீதளமாய், வான்- சிறந்த, பிறையும் - பிறைச் சந்திரனும், இவற்றையெல்லாம் உடையதாய்), கோள் இழையாவுடைய - தன் ஒளியே தனக்கு ஆபரணமாகவுடைய, கொழும் - பூர்ணமான சோதிவட்டம்கொல் - ஜ்யோதிர்மண்டலமோ ? (இங்கு 'தாமரை' என்று திருக்கண்களும், 'கொடி' என்று மூக்கும், பவளம்' என்று அதரமும், 'வில்' என்று புருவங்களும், 'முத்தம்' என்று பற்களும், 'தளிர்' என்று காதுகளும், 'வான்பிறை' என்று திருநெற்றியும் கூறப்படுகின்றன.)

[51]ரா. அ. 31. 22. என்னைத்தொடர்ந்து செல்லும் தாஸனைச் செய்து கொள்ளும்.

[52]வைகுண்டகத்யம். ஸ்நிக்த - அன்பும், கம்பீர - பெருமையும், மதுர - இனிமையும் உடைய, நாதமாய் - சப்தத்தை உடைய.

தை உடைத்தாய், திருமேனி ஒளியாலே பசுத்த ஸ்ரீ பாஞ்சஜந்யம்போலே இருக்கிற திருக்கழுத்தைப் பார்த்து, [53]"முற்றும்உண்ட கண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டது" என்பது;

சதுர்வித புருஷார்த்தங்களையும் வழங்குமளவன்றிக்கே, ஏதேனும் ஒரு கிஞ்சித்காரம் பண்ணினருக்கு [54]'ஸர்வஸ்வபூத'மான மஹாபரிஷ்வங்கத்தைக் கொடுக்கக் கடவவான திருத்தோள்களைப் பார்த்து, [55]"கற்பகக் காவன நற்பலதோள்'கள் என்பது;

ரத்நகசிதமுக்தாஹாரமாய், கௌஸ்துப - ஸ்ரீவத்ஸ - கலஸ்தூல - வநமாலாவிராஜிதமாய், [56]'அலர்மேல்மங்கை இறையும் அகலகில்லேன்' என்று உறையும்படி ஸுகஸ்நேஹமான திருமார்பை அநுபவித்து, [57]"ஆரமார் பதன்றே அடியேனை ஆட்கொண்டது!" என்பது;

---

[53]அமல. 6. முற்றும்-(அண்டத்திற்கு உள்ளும் புறம்புமுள்ள) எல்லாவற்றையும், உண்ட - அமுது செய்த, கண்டம் கண்டீர் - திருக்கழுத்தன்றே, அடியேனை உய்யக்கொண்டது-அடியேனை ஸம்ஸாரத்தில் அகப்படாதபடி செய்தது.

[54]ஸர்வஸ்வபூதமான - ஸர்வஸொத்தாயிருக்கும்படியான (ஆலிங்கனம்)

ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத:
(ரா. யு. 1. 13),

[55]6. 6. 6. கற்பகக்கா அண - கற்பகச் சோலைபோலேயாய், நல்-அதிலும் நல்லதாய், பல - பலவான, தோள்கள்.

[56]6. 10. 10. அலர்மேல் மங்கை - தாமரைப்பூவின் மேல் நித்ய வாஸம்பண்ணும், லக்ஷ்மி, இறையும் - க்ஷணம்கூட, அகலகில்லேன் - (உம்மைவிட்டுப்) பிரிந்திருக்க ஸஹிக்கமாட்டேன், (என்று சொல்லிக்கொண்டு எழுந்தருளியிருக்கும்.)

[57]அமல. 6. ஆரமார்பதன்றே - முக்தாஹாரத்தை உடைத்தான மார்பன்றே, அடியேனை ஆட்கொண்டது - என்னை அடிமை கொண்டது.

ப்ரளயாபத்துக்கள் வந்தால் ப்ரபஞ்சத்தையெல்லாம் உள்ளே வைத்து ரக்ஷிக்கும்படியான திருவுதரத்தைப் பார்த்து, [58]"காரேழ் கடலேழ் மலையேழ் உலகுண்டும் ஆராவயிற்றான்" என்பது;

[59]'மரதகக் குன்ற'மொத்த திருமேனியிலே மாணிக்க வொளி சூழ்ந்தாற்போலே பொருந்தின [60]'பொன் ஞெத்த ஆடையை'ப் பார்த்து, [61]"படிச்சோதி ஆடையொடும் பல்கலனாய் நின் பைம்பொன் கடிச் சோதி கலந்ததுவோ?" என்பது;

[62]ஜநநபதவீஜங்காலரை முன் ஓடிவந்து விலக்கக் கடவனவான திவ்யஜங்காகாண்டங்களைக் கண்டு, [63]கந்தர்ப்ப

58 10. 8. 2. கார் ஏழ் - (புஷ்கலாவர்த்தகாதிகளான) ஏழு மேகங்களையும், கடல் ஏழ் - ஏழு ஸமுத்ரங்களையும், மலை ஏழ் - ஏழு குலபர்வதங்களையும் உடைத்தான, உலகு உண்டும் - லோகத்தையெல்லாம் அமுது செய்தும், ஆராவயிற்றான் - நிறையாத வயிற்றையுடையவனை.

59 2. 5. 4. 60பெரு. தி. 6. 5. பொன்னுெத்த ஆடை - பீதாம்பரம்

61 3. 1. 1. பை - பரந்த, பொன் - அழகையுடைய, நின் - உன், கடி - திருவரையின், சோதி - சோதியானது, படி - ஸ்வாபாவிகமான, சோதி - ஒளியையுடைய, ஆடையோடும் - திருப்பீதாம்பரத்தோடே, பல்கலனாய் - பல திவ்யாபரணங்களுமாய், கலந்ததுவோ - கலந்ததோ?

62ஜநநபதவீ-ஸம்ஸாரத்தில், ஜங்காலரான-ஸஞ்சரிப்பதில் தேர்ச்சி பெற்றவர்களான. ஜங்காகாண்டம் - அழகியகணுக்கால்கள்.

63கந்தர்ப்பகாஹளா - மன்மதனுடைய எக்காளம் என்னும் ஊதும் வாத்யம்; களாசீ-காளாஞ்சி என்னும் அடிசிறுத்து, வாயகன்றதான பாத்திரம்; தூணீரம் - அம்புறாத் தூணி; மாத்ருகை - மாதிரி.

கா ஹஐ - கஹா வி_தஃஙீ ரஊா தூ மெக என்னலாம்படி [64]"கணைக்காலிருந்தவா" என்பது;

வேதங்களுக்கெல்லாம் [65]மேல்சாத்தாய், ஸர்வாத்மாக்களுக்கும் [66]ஸாஊா நூ ஜெவதமான [67]பொதுநின்ற பொன்னங்கழல்களைப் *பார்த்து, [68]"ஒருகாலில் சங்கு, ஒருகாலில் சக்கரம்," [69]"பத்துவிரலும் மணிவண்ணன் பாதங்கள் ஒத்திட்டிருந்தவா" என்பது;

திருவடிகளுக்கும் ஆயாரவஓத்திற்கும் உண்டான சேர்த்தியைப் பார்த்து, [70]"அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ?" என்பது;

*பார்த்து ஒரு காலில் சக்கரம் பத்துவிரலும்—க.

[64]பெரி தி. 1. 2. 3. கணைக்காலிருந்தவா - கணைக்காலின் அழகு இருந்தபடியென்?

[65]மேல்சாத்து - மேலே அணியும் ஆபரணம் அல்லது வஸ்த்ரம்.

[66]ஸாமாந்யதைவதம் - பொதுவான தைவம். (ஜிதந்தே 1. ஜெவா நாம் ஊா நவா நாம் வ ஸாஊா நூஊயிஜெவதம்

[67] 3 அ. 88. பொதுநின்ற - (எல்லோருக்கும் ஆச்ரயிக்க) பொதுவாயிருக்கிற, பொன் அம் கழல் - பொன்போல் அழகிய திருவடிகளை.

[68]பெரி. தி. 1. 7. 6. ஒரு காலில் - ஒரு காலில், சங்கு, - சங்கு வடிவமானதும், ஒரு காலில் - மற்றொரு காலில், சக்கரம் - சக்கரவடிவமானதுமான (ரேகைகளையுடைய)

[69]பெரி. தி. 1. 2. 2. மணிவண்ணன் - நீலரத்னம்போன்ற வடிவை உடையவனுடைய, பாதங்கள் - திருவடிகளில், பத்து விரலும் - பத்துவிரல்களும், ஒத்திட்டிருந்தவா - அநுரூபமாய் இருக்கின்ற அழகு.

ஆதாரபத்மம் - திருவடிகளுக்கு அடியில் ஆதாரமாகவிருக்கும் தாமரைப் பூ.

[70] 3. 1. 1. அடிச்சோதி - திருவடிகளின் தேஜஸ்ஸானது, நீ நின்ற தாமரையாய் — நீ நின்ற ஆஸநபத்மமாய், அலர்ந்தது வோ - மலர்ந்ததோ?

இப்படி வாஹாஹாணங்களான திவ்யாவயவங்களைப் பேசத்தொடங்கி, [71]"கருமாணிக்கமலைமேல் மணித்தடம் தாமரைக் காடுகள் போல் திருமார்வு வாய் கண் கை உந்தி கால் உடையாடைகள் செய்ய பிரான்" என்பது;

'நீருஜெவநிஹமான திருமேனியிலே நிலைமின்கள்போலே விளங்குகிற ஜமஉஹிஊநிஜெவதாதூக்களாகிற திவ்யாபரணங்களைப் பார்த்து,

[72]"அந்தாமத்து அன்புசெய்து என்னுவிசேர் அம்மானுக்கு அந்தாம வாள் முடி சங்கு ஆழி நூல் ஆரமுள" என்பது;

அஞ்ஜநகிரியை அணைந்த வநூாஜிதலர்கள் போலே வாஹா - வாஹாமத்தை யுடையரான திருக்கையில்

---

[71] 8. 9. 1. கருமாணிக்கமலைமேல் - *கறுத்த நிறத்தையுடைய, மாணிக்கமலை மேல்,* மணி - *அழகியதாய்,* தடம் - *பெருத்த* தாமரைக்காடுகள்போல திருமார்வு, வாய், கண், கை, உந்தி - *திருநாபி,* கால், உடை ஆடைகள் - *திருப்பீதாம்பரங்கள்* *இவற்றினுடைய,* செய்ய - *சிவப்பையுடையனாய்க் கொண்டு,* பிரான் - *உபகாரகனாயிருப்பவன்.*

*நிலைமின்=ஸ்திரமாயிருக்கும் மின்னல்கள்.*

[72] 2. 5. 1. அம்தாமத்து - *அழகிய ஸ்தானமான பரமபதத்தில்* (*செய்யும்*) அன்பு செய்து - *அன்பை (என்னிடம்) செய்து,* என் ஆவி சேர் - *என் ஆத்மாவிலே வந்து சேர்ந்தவனை,* அம்மானுக்கு - *ஸ்வாமிக்கு,* அம் - *அழகிய* தாமம் - *மாலையை உடைத்தான,* வாள் முடி - *ஒளி பொருந்திய கிரீடம்,* சங்கு ஆழி - *சங்கு, சக்கரம்,* நூல் - *யஜ்ஞோபவீதம்,* ஆரம்-*ஹாரம்* (*இவை*) உள - *இருக்கின்றன.*

*அஞ்ஜனகிரி - மைமலை.*

*திருக்கையில் ஆழ்வார்கள் - திருக்கைகளில் இருக்கும் சங்கம் சக்கரம் என்னும் ஆயுதாழ்வார்கள்.*

ஆழ்வார்களைப் பார்த்து 73'சங்கு சக்கரங்கள் என்று கை கூப்பு'வது;

பரந்த திருப்பாற்கடலிலே மாம்ஸ்யகூர்மாதிகள் போலே திவ்யாத்மஸ்வரூபத்திலே வாத்ஸல்யஸௌசீல்யங்களுக்கு வகுத்த குணவர்க்கங்களைப் பார்த்து, 74"உயர்வற உயர்நலமுடையவன்," 75"வல்வினையேனை ஈர்கின்ற *குணங்களையுடையா"ன் என்பதாய்;

†அந்த ஸ்ரீகுணங்களாலும் ஸ்ரீதங்களான 76'தூதுசெய் கண்'களாலும் கடாக்ஷிக்கப்பட்டுக் கொண்டு, ஸ்ரீரங்கோவன் நிற்கிற வாஸஸ்தலமும் சென்று, 77"வானுயரின்பம் மன்னி வீற்றிருந்தாய்! அருளு நின் தாள்களை எனக்கே" என்ன,

---

*குணங்களையுடையாய்—வ. †அநந்தஸ்ரீலாதிகுண—க.

73 7. 2. 1. சங்கு சக்கரங்கள் என்று கைகூப்புவன் என்பது—க

74 1. 1. 1. உயர்வு - (மற்றவஸ்துக்களினுடைய) உயர்த்திகள் எல்லாம், அற - இல்லையென்று சொல்லலாம்படி, உயர் - உயர்ந்த, நலம் - ஆநந்தத்தை உடையவன்.

75 8. 1. 8. வல்வினையேனை - (உம்முடன் சேரமுடியாமல்செய்கிற) ப்ரபல பாபத்தையுடையவனான என்னை, ஈர்கின்ற - பிளந்து பிடிக்கிற, குணங்களையுடையான் - (ஸௌலப்யம், ஸௌந்தர்யம் முதலான) குணங்களையுடையவன்.

76 9. 9. 9. தூதுசெய் கண்கள் - தூதன் வேலையைச் செய்கிற கண்கள் (பேச்சாலே தன் அபிப்பிராயத்தை ஸ்பஷ்டமாய்த் தெரிவிப்பதைக் கண்களாலேயே அப்படித் தெரிவித்தல்.)

77 8. 1. 9. வான் - பரமபதத்தில், உயர் இன்பம் - அளவற்ற ஆநந்தத்தை, மன்னி - ஸ்திரமாய் உடையவனாய்க் கொண்டு, வீற்றிருந்தாய் - உன்னுடைய பெருமைதோற்ற எழுந்தருளி இருக்கிறவனே! நின் தாள்களை - உன் திருவடிகளை, எனக்கு அருளு - தந்தருளவேணும்.

அவனும் இரங்கி, [78]'வாசம் செய் பூங்குழலா'ளும் கந்தவதியுமான நாச்சிமார் கரதலங்களுக்கும் பரிமளம் கொடுக்கும் பொற்றாமரையடிகளாலே இவனைப் பூ முடிசூட்டி, [79]"தேஷாமபி நமோ நம:" என்று எல்லை உள்ளளவும் *செல்ல அடிப்பட்ட கைங்கர்ய-ஸாம்ராஜ்யத்திற்கும் கடவனுக்க;

இவனும் [80]'தாழ்ச்சி மற்றெங்கும் தவிர்த்து, நின் தாளிணைக் கீழ் வாழ்ச்சி யான் சேரும் வகை †அருள்"

*செல்ல அப்படிப்பட்ட—க. †அருள் என்ன- -க.

78 10. 10. 2. வாசம் செய் - (ஸர்வகந்தனான உன் திருமேனிக்கும்) பரிமளத்தைக் கொடுக்கிற, பூங்குழலாள் - அழகிய திருக்குழல்களையுடைய ஸ்ரீதேவி, கந்தவதீ - வாஸனையையே தனக்கு நிரூபகமாகவுடைய பூதேவி.

79 விஷ்ணோர் தேவாதிதேவஸ்ய ஜகஜ்ஜந்மாதிஹேதவே:
ப்ரணாமம் யே(அ)பி குர்வந்தி தேஷாமபி நமோ நம: ॥
(விஷ்ணுதர்மம் 90. 53.) (முக்கலோபாக்யானம்.

தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய விஷ்ணோரமித தேஜஸ: ।
ப்ரணாமம் யே(அ)பி குர்வந்தி தேஷாமபி நமோ நம: ॥
(விஷ்ணுதர்மம் 90. 55; பார. சாந்தி. 46. 130.

தேஷாமபி - பகவானை நமஸ்கரிப்பவர்களுக்கும், அவர்கள் ஸம்பந்தம்பெற்றவர்களுக்கும் என்னுடைய நமஸ்காரம் (இருக்கட்டும்)

80 3. 2. 4. மற்று எங்கும் - (உன்னை யொழிந்த) மற்ற எல்லா விஷயங்களிலும், தாழ்ச்சி - தாழ்வதை (அதாவது வணங்குவதை), தவிர்ந்து - விட்டுவிட்டு, நின்தாளிணைக் கீழ் - உன் திருவடிகளின் கீழே, வாழ்ச்சி - வாழ்வை (அதாவது கைங்கர்யத்தை), யான் சேரும் வகை - நான் அடையும் வகை, அருள் - அருளவேணும்.

என்ற மநோரதம் தலைக்கட்டி, [81]"தன்னுருவாய் என் உருவில் நின்ற எந்தை தளிர்புரையும் திருவடி என் தலைமேலவே," [82]"கூட்டரிய திருவடிக்கள் கூட்டினை நான் கண்டேனே," [83]"திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்" என்று ஆநந்தஸாகரத்திலே அழுந்தினாற் போலே ஆநந்தநிர்ப்பரராய் அநுபவரஸம் ப்ரேரிக்க, [84]"பற்றிலார் பற்ற நின்ற" திருவடிகளையே அவலம்பநமாகக் கொண்டு அந்தரிக்ஷத்தின் மேலே ஏற;

இவனை, [85]'தாயும் தந்தையுமாய்' அளிக்கும் [86]'தண் தாமரைக் கண்ணன்' அங்காகதகுமாரந்யாயத்தாலே

---

[81] தி. நெடு 1. தன் உருவாய் - தனக்கு அஸாதாரணமான ஜ்யோதிஸ்ஸ்வரூபனாய், என் உருவில் நின்ற - என் சரீரத்திலே நின்றவனாய், எந்தை - என்க்கு ஸ்வாமியான ஸர்வேச்வரனுடைய, தளிர் புரையும் திருவடிகள் - தளிரையொத்த திருவடிகள், என் தலை மேலவே - என் தலையிலே இராநின்றன.

[82] 4. 9. 9. கூட்டரிய - (எவ்வளவு பெரியோரானாலும் தன் யத்னத்தால் மட்டும்) சேர்த்துக்கொள்ள அரிய, திருவடிக்கள் - திருவடிகளை, கூட்டினை - (நான் சேரும்படி என்னைச்) சேர்த்துக்கொண்டாய். நான் கண்டேனே - (அநுபவத்தாலே சொல்லுகிறேன் என்று கருத்து.)

[83] பெரி. தி. 5. 4. 7. திரு - அழகு, பொலிந்த - மிக்கிருப்பதாய் சே அடி - ருஜுவான திருவடிகள், என் சென்னியின் மேல் - என் தலையின்மேலே, பொறித்தாய் - அடையாளமிட்டாய்.

[84] 7. 2. 7. பற்று இலார் - வேறொரு ரக்ஷகனின்றியிருப்பவர்களும், பற்ற - ஆச்ரயிக்கும்படியாக, நின்ற - அசரண்யசரண்யமாய் இருந்த. அவலம்பநமாக - பிடிப்பாக.

[85] 1. 10. 6. (அளிக்கும் - க்ருபைபண்ணி அருளும்.)

[86] தி. மொ. 7. 1. 9. தண் - குளிர்ந்த, தாமரைக்கண்ணன் - செந்தாமரை போன்ற திருக்கண்களை உடையவன். அங்காகத - மடிமேல் வந்த, குமாரந்யாயத்தாலே - புத்ரனைக் கொஞ்சும் முறையிலே.

சுடநாஜொஜித்து, இவனை ஸஹஜ-ஸௌஹார்த்தத்தாலே *“தன்மை பெறுத்தித் தன்தாளிணைக்கீழ்க்” கொண்டு, ஸர்வசேஷியான தான் பெற்ற பேற்றை இவனையிட்டுப் பேசுவிக்கத் திருவுள்ளமாய், ‘நீர் ஆராய் இருக்கிறீர் ?’ என்று கேட்க;

இவனும் தனக்கு [87]‘அவன் எவ்விடத்தான் ? யான் ஆர் ?’ என்ற நிலையைக் கழித்து, நித்யஸம்ஸாரிகள் நிலையினின்றும் நித்யஸூரிகள் நிலையிலே சேர்த்த மஹோபகாரத்திற்கு உதவிக் கைம்மாறு அற்று, தான் தெளிந்தபடியே விண்ணப்பம் செய்யத் தொடங்கி;

அநாதிகாலம் ஸம்ஸாரார்ணவத்திலே அழுந்தின அடியேன் தேவரீருடைய திவ்யாத்மஸ்வரூபமாகிற [88]‘அளப்பரிய ஆரமுத’க் கடலிலே [89]“அவிபாகேந

*3. 7. 7. தன்மை - (இவ்வாத்மாவுக்கு ஸ்வபாவத்திலேயே உண்டான) தன்மையை, பெறுத்தி-அடையும்படி செய்து (ஸ்வ ஸ்வரூபத்தின் ஆவிர்ப்பாவத்தைச் செய்து), தன் தாளிணைக் கீழ்கொண்டு - தன் திருவடிகளின் கீழே வைத்துக்கொண்டு.

[87] 5. 1. 7. அவன் - (ஸர்வஜகதீசுவரனும் சக்ராயுதத்தைத் தரித்தவனுன) அவன், எவ்விடத்தான் - எந்த இடத்திலுள்ள வன்? (அவன் எங்கே?) யான் ஆர் - ஸம்ஸாரத்தில் உழல்கின்ற நான் எங்கே?

[88] தி. நெடு. 14. அளப்பரிய - அளப்பதற்கு அரிதான, ஆர்-பரி பூர்ணமான, அமுதக்கடலை - அம்ருதஸமுத்ரத்தை.

[89] சாரீரகஸூத்ரம் 4. 4. 4. த்ருஷ்டத்வாத் - உபாஸநத்தால் தன் ஆத்மா பரமாத்மாவை ஆத்மாவாக உடையது என்று கண் டிக்கிறபடியால், (முக்தன் பரமாத்மாவை ‘நான் ப்ரஹ்மமாய் இருக்கிறேன்’ என்று) அவிபாகேந - பிரிவில்லாமலேயே (அநு பவிக்கிறான்.)

ஹ்ருஷ்டஶ்வாஸ:" என்னும்படி ஸவ்ருயக்ஷிஸவிஶேஷணமாய்க் கொண்டு அழுந்தினேன்.

[90]'உலகங்களுக்கெல்லாம் ஓருயி'ரான தேவரீருடைய ஸ்வரூபத்தாலே ஸ்வரூபமும், ஸங்கல்பத்தாலே ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளும் போகத்தாலே போகமுமாம்படியான உண்மை தெளிந்தேன்;

தனித்து எனக்கொரு பேரிடவொண்ணாதபடி உகார விவரணத்தில் சொன்ன 'தாஸஸுதன்' என்கிற பெயரில் நிலை நின்று, ஸ்வரூபப்ராப்த கைங்கர்யத்திற்கு விலக்கில்லாத ஸமுசித ஸ்வாதந்த்ர்யமும் பெற்றேன்;

[91]'வானுளார் பெருமா'னான தேவரீரோடே 'தேனும் பாலும் நெய்யும் *கன்னலும் அமுதும் ஒத்துக் கலந்து, ஒருபடிப்பட்ட ஜ்ஞானவிகாஸத்தாலே [92]'உள்ள உலகளவும் யானுமுள'னாய் நின்று, [93]'பொன்னுலகும்' 'புவனி முழுதும்' கைங்கர்யோபகரணமாகக் கைக்கொள்ளப் பெற்றேன்;

*கன்னலும் அமுதமும் ஒத்து—க. [90] 8. 1. 5.

[91] 2. 3. 1. வானுளார் பெருமானை - நித்யஸூரிகளுக்குத் தலைவரான (உம்மோடே), தேனும் பாலும் நெய்யும், கன்னலும் - சர்க்கரையும். அமுதும் ஒத்து - அம்ருதமும் போல இவற்றினுடைய ரஸங்களெல்லாம் உண்டாம்படியாகக் கலந்து

[92] பெ. அந். 76. உள்ள உலகளவும் - இருக்கிற லோகங்களெல்லாவற்றிலும், யானும் - நானும், உளனாய்-இருக்கிறவனாய். (அதாவது தடையின்றிப் பரவுகிற தர்மபூதஜ்ஞானத்தினால் ஸர்வ ஜகத்தையும் வ்யாபித்து என்றபடி.)

[93] 6. 8. 1. பொன் - எப்போதும் ஆசைப்படத்தக்க, உலகும் - பரமபதமும், புவனி முழுதும் - பூமி முதலிய எல்லா லோகங்களையும் (அதாவது நித்யவிபூதி, லீலாவிபூதி இரண்டையும்).

லோகத்தில் ஸர்வாத்மாக்களுடைய ஐஶ்வர்ய-கைவல்ய-ரஸங்களெல்லாம் என் அநுபவரஸத்தில் திவலை என்னும்படி தெவிட்டாத அனுபவம் பெற்று [94]ஹோக்தாவுமாய் ஹோமஹ்யனுமானேன். [95]'வானக் கோனைக் கவிசொல்ல வல்லேற்கு இனி மாறு இல்லை' என்னும்படி வேதங்கள் மீண்ட நிலமெல்லாம் [96]மெய் யுணர்ந்து கவி பாடும் கருத்துடையேனானேன்; மேல் இனி '[97]மீளாவடிமைப் பணி கொண்டருளவேண்டும்' என்று விண்ணப்பம் செய்ய;

இப்பாசுரங்களைக் கேட்டருளின ஶ்ரியஃபதி மூலை பிரியமாட்டாத ஊஹனை வாத்னுடைய முதல் வார்த் தையைக் கேட்டாற் போலே உகந்து, [98]'யஉவாஜ

94போக்தாவும் போக்யமும் - உபயவிபூதி விசிஷ்டனான பரமாத் மாவை முக்தன் அனுபவிப்பதால், இவன் போக்தாவாகிறான்; பரமாத்மா இவனை அனுபவிப்பதால், இவன் போக்யமுமா கிறான்.

95 4. 5. 9. வானக்கோனை - ஶ்ரீ வைகுண்டத்திற்கு நாதனான பகவானை கவி சொல்லவல்லேற்கு - கவி பாடவல்ல எனக்கு, இனிமாறு - இனி ஒப்பு இல்லை ?

96மெய்யுணர்ந்து - உள்ளபடியே ஸாக்ஷாத்கரித்து, கவிபாடும், கருத்துடையேனானேன் - எண்ணத்தையுடையவனானேன்.

97 9.8.4. மீளா - திரும்பி வருதல் என்பது இல்லாத, அடிமைப் பணி - கைங்கர்யம்.

98வகயஉ யவஹ்ா ஹவநம ஹாஜாகுஶ

தவ விு்யம யாஉ யஷீயஜநூஹ-ஞ ।

ஜமசு ஸஉஷூம யஉவாஜூஸம ஶ்ரூயம

யஉயஉஙஹோயிரஉநூுஹ்வஙஙி வ॥ (ஸ்தோத்ர.ரத்னம்.37.)

𑌸𑌂𑌶𑍍𑌰𑌯𑌂," 99"𑌯𑌸𑍍𑌯𑌾 𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌮𑍁𑌖𑌂," 100"𑌯𑌦𑍍𑌭𑍍𑌰𑍂𑌵𑌿𑌭𑍍𑌰𑌮

---

(எவளுக்கு உம்முடைய திருமார்பு வாஸஸ்தாநமோ, எவள் அவதரித்த இடமான க்ஷீரஸமுத்ரம் உமக்கு இஷ்டமாக இருப்பிடமோ;) ஸகல ஜகத்தும் (தங்களுடைய ஐசுவர்யம் முதலான பெருமைகளை அடைவதற்கு) எவளுடைய கடைக் கண்களை ஆச்ரயித்திருக்கிறதோ, அதாவது எல்லாம் எவள் அதீனமோ, (எவளை அடைவதற்காக) விஷ்ணுரூபியான உம்மால் ஸமுத்ரம் கடையப்பட்டதோ, பிறகு ராமாவதாரத்தில் அது கட்டப்பட்டதோ (அப்பேர்ப்பட்ட பிராட்டியுடன் நீர் எழுந்தருளியிருக்கிறீர்.)

99 𑌸𑍍𑌵𑌸𑍍𑌤𑌿 𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌦𑌿𑌶𑌤𑌾𑌦𑌶𑍇𑌷𑌜𑌗𑌤𑌾𑌂
𑌸𑌰𑍍𑌗𑍋𑌪𑌸𑌰𑍍𑌗𑌸𑍍𑌥𑌿𑌤𑍀𑌃
𑌸𑍍𑌵𑌰𑍍𑌗𑌂 𑌦𑍁𑌰𑍍𑌗𑌤𑌿𑌮𑌾𑌪𑌵𑌰𑍍𑌗𑌿𑌕𑌪𑌦𑌂
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌚 𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌹𑌰𑌿𑌃 ।
𑌯𑌸𑍍𑌯𑌾 𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌮𑍁𑌖𑌂 𑌤𑌦𑌿𑌙𑍍𑌗𑌿𑌤𑌪𑌰𑌾𑌧𑍀𑌨𑍋
𑌵𑌿𑌧𑌤𑍍𑌤𑍇𑌽𑌖𑌿𑌲𑌂
𑌕𑍍𑌰𑍀𑌡𑍇𑌯𑌂 𑌖𑌲𑍁 𑌨𑌾𑌨𑍍𑌯𑌥𑌾𑌸𑍍𑌯 𑌰𑌭𑌸𑌾
𑌸𑍍𑌯𑌾𑌦𑍈𑌕𑌰𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌤𑌯𑌾 ॥

(ஸ்ரீஸ்தவம் 1) (ஸகல ஜகத்தினுடைய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையும், ஸ்வர்க்கம், நரகம் மோக்ஷம் இன்னும் மற்ற போகங்கள் எல்லாவற்றையும் செய்யும்போது பகவான்) எவளுடைய முகத்தைப் பார்த்து, (அவளுடைய இங்கிதப்படியே செய்கிறானே, அந்த லக்ஷ்மீ க்ஷேமத்தைக் கொடுக்கக் கட்டும். அப்படி பரஸ்பரம் ஒற்றுமையில்லாவிடில் இந்த ஸ்ருஷ்டி முதலான கிரீடைகள் ஆநந்தத்தைத் தருவதாக ஆகாதல்லவா !)

100 𑌨𑌮𑌃 𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌯𑌕𑍍𑌯𑍈 𑌯𑌦𑍍𑌭𑍍𑌰𑍂𑌵𑌿𑌭𑍍𑌰𑌮𑌭𑍇𑌦𑌤𑌃 ।
𑌈𑌶𑍇𑌶𑌿𑌤𑌵𑍍𑌯𑌵𑍈𑌷𑌮𑍍𑌯𑌨𑌿𑌮𑍍𑌨𑍋𑌨𑍍𑌨𑌤𑌮𑌿𑌦𑌂 𑌜𑌗𑌤𑍍 ॥

(ஸ்ரீரங்க. ஸ்தவம் 1-7). எவளுடைய புருவங்களினுடைய அசைவுகளினால் (இவ்வுலகமானது ஆள்பவன் ஆளப்படுமவர்கள் என்கிற பேதத்தால் உயர்ந்ததாயும் தாழ்ந்ததாயும் இருக்கிறதோ, அப்பேர்ப்பட்ட ஸ்ரீரங்க நாய்ச்சியாருக்கு நமஸ்காரம்.

ஹைதஃ" *என்னும்படி இருக்கிற [101] "அஸ்து தே" என்னும் அகிலஜகந்மாதாவின் திருமுகத்தைப் பார்க்க, இருவரும் ஸாகாங்க்ஷராய்க் கொண்டு கடாக்ஷிக்க, பரமசேஷி [102] "திருவருளும் பங்கயத்தாள் திருவருளும் பெற்று;

ஸ்வஸ்வரூபனுடைய ஸ்வரூபாதிகளை யெல்லாம் அவன் தன்னைப் போலே அஸாதாரணமாகக் காட்டுகிற ஸாக்ஷாத்காரத்தினுடைய அநுவ்ருத்தி அபேக்ஷையான படியாலே ஸாபேக்ஷனாய்;

ஸாக்ஷாத்கார அநுவ்ருத்தியாலே ஸம்ருத்தனாய், உத்தரோத்தர ஸாக்ஷாத்காரத்தாலே ஸாபேக்ஷனாய் இப்படிப் பரிபூர்ணமாய் உத்தராவதிரஹிதமாய் விசத தமமாய் அநந்யப்ரயோஜநமாய் அநவதிகாதிசயமான ஸமஸ்தாநுபவத்தாலே வந்த நிரதிசய ப்ரீதியாலே [103] "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை"யை உகந்து, [104] "ஸ ஏகதா" என்று தொ

*என்னும்படியாயிருக்கிற அகிலஜகன்மாதாவின்—ம.

[101] சரணாகதிகத்யம். நீ பிரார்த்திக்கிறபடியே உனக்கு எல்லாம் உண்டாகட்டும்.

[102] 9. 2. 1. (பகவானுடைய) திருவருளும் - கிருபையையும், பங்கயத்தாள் திருவருளும் - பிராட்டியினுடைய கிருபையையும்

[103] 3. 3. 1. ஒழிவில் காலமெல்லாம் - முடிவில்லாத காலமெல்லாம், உடனாய் மன்னி - பக்கத்திலேயே ஸ்திரமாக இருந்து வழுவிலா அடிமையை - ஒன்றும் நழுவாதபடி எல்லா அடிமைகளையும் (அதாவது ஸர்வகால-ஸர்வதேச-ஸர்வாவஸ்த-ஸர்வவித-கைங்கர்யங்களையும்.

[104] சாந்தோ. 7. 26. 2. ஸ ஏகதா பவதி, த்ரிதா பவதி பஞ்சதா, ஸப்ததா.

முக்தனான ஜீவன் ஒரு சரீரத்தைக் கொண்டவனாயும், மூன்று,

டங்கி ஓதுகிற அநியத அபரிமித ஶுத்தஸத்வமய விக்ரஹங்களைப் பரிக்ரஹித்து, [105]“மொய்ம்மாம் பூம் பொழி” லிற்படியே ஸம்ஹ்ருஷ்டாதிகளைப்பண்ணிக் காட்டியும்; [106]“பர்யேதி” என்னும்படி வலம் செய்து நாளும் மருவியும், ஸஜாதீய ஸுஹ்ருத்வரான *ஸம்பந்திபாந்தவாதி விசேஷங்களைக் கொண்டு குடியடிமைசெய்து காட்டியும்; அன்று ஈன்ற தேநு வத்ஸத்தைப் போலவும், அத்தேநுவை வத்ஸம் போலவும், ஸத்வத்தை நிழல் போலவும்; சேஷிபோம் வழியெல்லாம் அநுதாவநம் பண்ணி; [107]‘இருள் தருமா ஞாலத்துள்’ ஈச்வரன் அவதரிக்கும்போது ஜ்ஞாநஸங்கோசாதிகள் பிறவாதபடி அவன் தன்னைப் போலே வந்து போயும், முக்தி

---

ஐந்து, ஏழு, (இவ்விதம் பல) சரீரங்களைக் கொண்டவனாயும் ஆகிறான். அநியத - காலம் தேசம் இவற்றால் வரையறுக்கப் படாத, அபரிமித - கணக்கற்ற, சுத்த ஸத்வமயமான சரீரங் களை எடுத்துக்கொண்டு.

*ஸம்பந்தபாந்தவாதி விசேஷங்களைக் கொண்டு—க.

105 3. 5. இத்திருவாய்மொழி பகவத் குணங்களை அநுபவித்து, அந்த ஸந்தோஷத்தினாலே அந்த குணங்களைச் சொல்லி உலகத்தார் சிரிக்க ஆடியும் பாடியும் ஆநந்திக்குமவர்களுடைய பெருமையையும், அப்படிச் செய்யாதவர்களுடைய தாழ்மை யையும் பற்றிக் கூறுகிறது.

106 சாந்தோ. 8. 12. 3.

2. 10. 8. வலம் செய்து - ப்ரதக்ஷிணம் முதலான ஸகல அநு கூல காரியங்களையும்செய்து, நாளும் - எப்போதும், மருவி யும் - கூடியும்.

தேநு - பசு. வத்ஸம் - கன்று; ஸத்வம் - பிராணி.

107 10. 6. 1. இருள்தரு - (இருக்க இருக்க) அக்ஞானத்தைத் தருவதான, மாஞாலம் - பெரிய உலகத்தில்.

ஸாஹஸஸாசமாநாதிகளைப் பண்ணி [108] 'சூழ்ந்திருந்து பல்லாண்டேத்தி'யும்;

இப்படி ஸ்வாமி உகந்த ஸவுவியகைஜ்ஞயஸ்வத்தை ஸவுஷெஸவுகாராதிகளிலும் உசிதமாக உகந்து; [109] 'ஹஷயிஷ்ரி' என்கிற மநோரத பூர்த்தியாலே அநாதிகாலம் இழந்ததெல்லாம் [110] படியெடுத்தது என்னலாம்படி சுநவயிகாநநஉஹாணவ நிஉஞய்; ஹக்ருதிமணங்களைக் கழித்து ஸமவஹணங்களிலே [111] பிணைகொடுக்கிலும் போகவொண்ணாத

108 திருப்பல்லாண்டு 12.

109 ஸவஜெவாநவரநு நிரஞரம்
    ஹமாஞநிஸஉநாரயாஞரஃ ।
கஉாஹஜெகாஞிகநித்ஸகிஜ்ஞரஃ
    ஹஹஷயிஷ்ரி ஸநாயஜீவிதஃ ॥

(ஸ்ரீஸ்தோத்ரரத்நம் 46.) (இடைவிடாது உம்மையே அநுஸரித்துச் சென்றுகொண்டு, உம்மையொழிந்த விஷயங்களில் மனோவ்யாபாரங்களையெல்லாம் அற ஒழித்து, நாதனோடுகூடின ஜீவனையுடையவனாய் (அதாவது உயிரை ஸப்ரயோஜனமாக்கி) ஏகரூபமாய் உள்ளதும் எப்போதும் இருப்பதான கைங்கர்யத்தைச் செய்பவனாய் என்று கொல் நான் (உம்மை) மிகவும் உகப்பிக்கப்போகிறேன்?

110 படி எடுத்தது - ப்ரதிநிதியாக எடுத்தது, அதாவது அநாதி காலமாய் இழந்ததையும் சேர்த்துப் பிரதிநிதியாக அடைந்தது என்னலாம்படி.

111 பெரி. தி. 4. 5. 2. பிணைகொடுக்கிலும் - ப்ரதிநிதியாக (ஜாமீனாக) நித்யமுக்தர்களைக் கொடுத்தாலும்.

படி துவக்குண்டு; [112] மேலாத் தேவருடனேகூடி மேவி, மீட்சியில்லா வாழ்ச்சியை அனுபவிக்கும்.

அடலுரகம் உண்டுமிழ்ந்த அருக்கன் போல
அழுக்கடைந்து கழுவியநல் தரளம் போலக்
கடலொழுகிக் கரை சேர்ந்த கலமே போலக்
*காட்டுத்தீ கலந்தொழிந்த களிறே போல
மடல்கவரும் மயல்கழிந்த மாதர் போலக்
வன்சிறைபோய் மன்னர்பதம் பெற்றார் போல
உடல்முதலா உயிர்மறைக்கும் மாயை நீங்கி
உயர்ந்தபதம் ஏறிஉணர்ந் தொன்றி னோமே. 19.

மண்ணுலகில் மயல்தீர்ந்து மனம் தளும்பி
†மன்னாத பயனிகந்து மாலே யன்றிக்
கண்ணிலதென் றஞ்சியவன் கழலே பூண்டு
கடும்சிறைபோய்க்கரையேறும் கதியே சென்று
விண்ணுலகில் வியப்பெல்லாம் விளங்கக் கண்டு
விண்ணவர்தம் குழாங்களுடன் வேதம் பாடி
பண்ணுலகில் ‡படியாத இசையில் பாடும்
பல்லாண்டே பல்லாண்டும் பாடு வோமே. 20.

[112] 5 1. 8. மேலாத் தேவருடனே - நித்யஸூரிகளோடு கூடி, மேவி - விருப்பத்து
மீட்சியில்லாத - புநராவ்ருத்தி இல்லாத
வாழ்ச்சியை - அநுபவிக்கும்.

*காட்டுத்தீ கவர்ந்தொழிந்த களிறே—க.

†மன்னாத பயன் இகழ்ந்து—க.

‡படியாத இசையால் பாடும்—ம, வ.

மாளாத வினையனைத்தும் மாள நாம்போய்
வானேறி *மலர்மகளார் அன்பு பூணும்
தோளாத மாமணிக்குத் தொண்டு பூண்டு
தொழுதுகந்து தோத்திரங்கள் பாடி ஆடிக்
கேளாத பழமறையின் கீதம் கேட்டுக்
கிடையாத பேரின்பம் பெருக நாளும்
மீளாத பேரடிமைக் (கு) அன்பு பெற்றோம்
மேதினியில் இருக்கின்றோம் விதியி னாலே. 21

வஞாதாகஷ_ஹிவஹாஹிரவாராயெவி_ஹிதயா
வாராவ்ருத்தா நித்ரூ ஹவஜஞயிவஜெநிவததா ।
ஷ்ரயிஈா ஸஂவஞா ஹமவநாகவெ உகவவாஷா
ஷ்ரதீவீ க்ஷ்யஷெஷயஂ வாரஉவஉவெஸாவாநவஉவீ ॥

ஸ்ரீஉவெஜுநாய யஞூமாரா:
ஷூஹாவசிதஉத் ॥
வததநத நவவவயாதஂ
ஸாஹஂ வாரஉவஉஹஉஷஸாவாந ॥

இதி
ஸ்ரீ வாரஉவஉவெஸாவாநெ
நவஂ
வாராஷிவவ ॥

*மலர் மகளார் அன்பு பூண்டு—ம.

இதி

கவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீபரமபதஸோபானம் ஸம்பூர்ணம் ||*

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.-க

*கவிதார்க்கிகஸிம்ஹாய கல்யாணகுணசாலினே |
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்தகுரவே நம: ||

## ப்ரமாணஸூசீ ॥



---

*இக் குறியிட்டவை ப்ரமாணங்களாக எடுக்கப்படாமல், தன் வாக்யம் போல் எடுக்கப்பட்டவை—ஸ்ரீ.

# தமிழ் பிரமாணங்களின் ஸூசிகை.

## ப்ரமாண ஸங்க்ரஹம்.

### 1. ஸம்ஸ்க்ருதம்.



[உபதேஶ நிர்ணய: இதி ஸமா. 2. 32. 5.]

## ப்ரமாணஸங்க்ரஹம்.

### ii தமிழ்



பக்கங்களில் ப்ரபந்தத்தின் நாமமில்லாமல் இருக்கும் எண்கள் திருவாய்மொழியிலிருந்து எடுக்கப்பட்ட பிரமாணங்களைக் கூறுவன.

## ஆகரம் தெரியவேண்டியவை.

## பரமபதஸோபாநப் பாசுரங்களின் ஸூசிகை.



### சுலோகங்கள்

## ப த ஸ ை க

## பெயர் குறிக்கப்பட்ட கிரந்தங்கள்.



## உபாக்யானங்கள்.



[1]தர்மபுத்ரன் நரகமார்க்கத்தின்படிகளைக் கேட்டு மூர்ச்சித்து விழுந்தது:— (விஷ்ணுதர்மம், அத்யாயம் 47)

‘நரகம், அதன் மார்க்கம், அதிலிருந்து தப்பும் வகை எல்லாவற்றையும் எனக்குச் சொல்லவேண்டும்’ என்று தர்மபுத்ரன் ஸ்ரீகிருஷ்ணனைக் கேட்க, ஸ்ரீ கிருஷ்ணனும் இருபத்தொருவிதமான நரகங்களையும், அவற்றின் வழியையும் கூறினான். கிருஷ்ணன் கூறிவரும்போதே நரகத்தின் கொடுமையைக் கேட்கவும் ஸஹிக்கமாட்டாமல் யுதிஷ்டிரன் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான்.

பாடகம்—

[கடத-ஏஹஸ்வஸஉந்நிஷ்டம் வஸ்ருஜெஷ்டம் யாயிஷ்டிரா |
யஉஜெகாஸ்ய வாயுடநஉஞார்ம் ஊடங்ஷஸ்ய ச || ||1||
கீஹ்ருஶம் கிம் ஷ்ருஊணம் வா கிம் வணம் வா ஜநாஹ்டுந |
தரஞ்தி வாராஷா: க்ருஷ்ண கெதொவாயெந ஶம்ஸயெ ||
.... .... .... .... .... 2||
ஷஉஶீதிஸஹஸ்ராணி யொஜநாநாம் நராயிவ |
யஉஜெகாஸ்ய வாயுடநஉஞாா ஊடஙஷஸ்ய ச || ||5||
தாஉ வாதுவிவாதஸ்ம் ஜுவஸ்ரிஶ்ருகணகடி |
வாஉஶாஷிதஸ்ஹஸ்ராஶம் ஹெரவம் உரதிகஉடி|| ||6||
தத்ர ஸாயா ந வ்ருக்ஷாணாம் வாநீயம் காநநாநி ச |
யத்ர விஶ்ருஉதெ ஶ்ராஞா வாராஷொாஷநிகொ நவ|
நீயதெ யஉஹஏஜெதஶ யஉஸ்ராஜ்ஞாகஜொடரைவ ||7||
ஸகஷிம்ஶஷ்ட நாகா: யஉஸ்ய விஷயெ ஸ்ருகா: |
... ... ... ... ...
நரகொ ரஉரவொ ரஉஉஸ்ஹரஸ்ஷகஹலாஸ் ஸவ ச |
வஜ்ரக்ராஞொ உஹாவொரஶரஶெஷ விஜொஹந: ||
கீடாஹ: க்ருஶிஹக்ஷஶ ஶாஷ்ஷ உஹாஉ்ராஉ: |
தயா வஎயவஹ: வாவொ ராயிராஜொ உஹாதஉ: ||
அஸிஜாஶா உஹாநாஹஸ்ஹம்ஶஶ்நஹொஜந: |
தயா வெதரணீ வொஷா அஸிவத்ரவநம் தயா ||

பாடகம்—

விஷெணாஷ்டசநம் ஶ்ருத்வா வவாத ஹவி வாணவ: |
ஸஸஞ்ஜ்ஞஷ்ட உஹஏதெந ஹஏய: கெஶவஉவ
வீச || ||13||
ஸீதஶாஸி உஹாவாஹொ ஶ்ருத்வா உஉடுஸ்ய
விஷ்ணுடி |
கெதொவாயெந தம் உஉடும் தரஞ்தி வாராஷா
ஸவடி|| ||15||]
.... .... .... ....

[2] மதுகைடபர்களின் வ்ருத்தாந்தம்:—

விஷ்ணு ஜலத்தில் சயனித்துக்கொண்டு யோக நித்ரைசெய்யும்போது அவருடைய நாபிகமலத்தினின்றும் ப்ரஹ்மா உத்பத்தியாகி ஜகத்ஸ்ருஷ்டியைச் செய்ய ஆரம்பித்தான். முன்னமேயே தாமரையின் இதழில் நாராயணனால் செய்யப்பட்ட இரண்டு ஜலத்திவலைகள் இருந்தன. பகவான் அவற்றைப் பார்க்கவே ஒன்று தமோகுணம் நிறைந்த மது என்னும் அஸுரனாகவும், மற்றொன்று ரஜோகுணம் நிரம்பின கைடபன் என்னும் அஸுரனாகவும் ஆயிற்று. உடனே கதாபாணிகளாக அவ்வஸுரர்கள் ஓடும்போது, அழகான உருவமுள்ள நான்கு வேதங்களை ஸ்ருஷ்டிக்கிற ப்ரஹ்மாவை தாமரைமேல் கண்டார்கள். ப்ரஹ்மா பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்த வேதங்களை அபஹரித்து பாதாளத்திற்குக் கொண்டுபோனார்கள். வேதங்களை இழந்ததனால் கலங்கின ப்ரஹ்மா நாராயணனை நோக்கி, 'வேதங்கள் எனக்குச் சிறந்த நேத்ரம்; வேதங்கள் எனக்குச் சிறந்த தனம். என்னுடைய நேத்திரமான வேதங்களை அவர்கள் அபஹரித்துக் கொண்டார்களாதலால், குருடனானேன். வேதமில்லாமல் உலகம் இருளடைந்து விட்டது. நானும் ஸ்ருஷ்டியைச் செய்ய முடியாதவனாய் இருக்கிறேன். என்னை ரக்ஷியும்' என்று பிரார்த்தித்தான். உடனே பகவான் ஸர்வதேவ—ஸர்வலோகமயமான சிறந்த ஹயக்ரீவ ரூபத்தை எடுத்துக்கொண்டு பாதாளத்தில் பிரவேசித்து ஸாமாவயவமான உத்கீத ஸ்வரத்தைச் செய்தார். அஸுரர்கள் வேதங்களைக் கட்டி ஓரிடத்தில் வைத்துவிட்டு, சப்தம் வந்த திக்கை நோக்கி ஓடினார்கள். அவர்கள் அப்பால் சென்றபோது பகவான் வேதங்களை எடுத்துக்கொண்டு வந்து ப்ரஹ்மாவிடம் கொடுத்தார். ஒன்றையும் காணாமல் திரும்பிவந்து மதுகைடபர்கள் வைத்தவிடத்தில் வேதங்களில்லாமலிருக்கவே கோபம்கொண்டு அவற்றைத் தேடினார்கள். பகவானைக் கண்டு அவருடன் யுத்தத்திற்குச் சென்றார்கள். பகவானும் அவர்களைக் கொன்று ப்ரஹ்மாவையும் வேதங்களையும் ரக்ஷித்தான்.

(பாரதம் சாந்தி பர்வம் மோக்ஷதர்மம் அத்யாயம் 357.)

[3]வைதிகன்புத்ரர்களைக் கொண்டுவந்தது:—

இது பெரியாழ்வார் திருமொழி 1. 5. 7. 'துப்புடையார்கள்' என்னும் பாட்டிலும்; 4. 8. 2. 'பிறப்பகத்தே மாண்டொழிந்த' என்பதிலும்,

திருமங்கையாழ்வாரின் பெரிய திருமொழி 5. 8. 8. 'வேதவாய் மொழி அந்தணன்' என்பதிலும்,
நம்மாழ்வாரின் திருவாய்மொழி 3. 10. 5 'இடரின்றியே' என்பதிலும் கூறப்பட்டிருக்கிறது.

இடரின்றியே ஒருநாள் ஒருபோழ்தில் எல்லாவுலகும் கழியப்
படர்புகழ் பார்த்தனும் வைதிகனும் உடனேறத் திண்தேர் [கடவிச்
சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் [பிள்ளைகளை
உடலொடும் கொண்டு கொடுத்தவனைப் பற்றி ஒன்றும் துயரி [லனே.

ஸ்ரீ க்ருஷ்ணனை ஆச்ரயித்த வைதிகன் என்றிருப்பானொரு ப்ராஹ்மணனுடைய ஸ்திரீ ஸூதிகாக்ருஹத்தில் பிரஸவிக்கப் பிரஸவிக்க, நாய்ச்சியார் 'ப்ராக்ருதாப்ராக்ருத சக்தி பரிணமம் காணவேணும்' என்றும், 'க்ருஷ்ணனுடைய வடிவழகை அங்கே காணவேணும்' என்றும் நசையால் ஸூதிகாக்ருஹத்தில் கிடவாதபடி தங்கள் ஸங்கல்பத்தாலே பெறப்பெறக் கொண்டுபோய் அங்கே இட்டுவைக்க; அதறியாதே அவளும் சோகார்த்தையாய் பின்னையும் தன் ப்ரஸவகாலத்திலே பர்த்தாவைப் பார்த்து, 'என்பிள்ளைகளெல்லாரும் இப்படிப் போவானேன் ?' என்று க்லேசித்துக் கேட்டாள். அவ்வளவில் ப்ராஹ்மணனும் ஏகாஹ தீக்ஷையான க்ரதுவிலே உறுப்புத்தோலும் போர்த்துக்கொடு நிற்கிற க்ருஷ்ணனிடம் சென்று, 'என் பார்யையானவள் மூன்று ப்ரஜைகளைப் பெற்றாள்; பெற்றபோதே முகத்திலும் விழியாதபடி தைவம் கொண்டுபோகா நின்றது; அவள் இப்போது ஆஸந்நப்ரஸவை, இப்பிரஜையை நோக்கித் தரவேணும்' என்ன, 'அப்படியே செய்கிறோம்' என்று எழுந்தருளப் புக்கவளவிலே, 'தீக்ஷிதரான தேவரீர் எழுந்தருளவேணுமோ ? நான் போய் பரிஹரித்துப்போருகிறேன்' என்று அர்ஜுனன் சொல்ல, 'அப்படியே செய்யலாகாதோ ?' என்று ஸ்மிதம் பண்ணி அருளிச் செய்ய, அர்ஜுனனும் ப்ராஹ்மணனையும் கூட்டிக்கொண்டு போய் ஸூதிகாக்ருஹத்தைச் சுற்றும் காற்றும் உட்

பட ப்ரவேசிக்கவொண்ணுதபடி சரக்கூடமாகக் கட்டி காத்துக் கொண்டு நிற்கச்செய்தே, அவள் ப்ரஸவித்த பிள்ளை ஆகாசத்திலே கதறிக்கொண்டுபோக, ப்ராஹ்மணன் 'க்ஷத்ரியாதம' உன்னாலேயன்றோ பிள்ளை போக வேண்டிற்று, க்ருஷ்ணன் எழுந்தருளி ரக்ஷிக்கிறவித்தை நீயன்றோ கெடுத்தாய்' என்று பர்த்ஸித்து க்ருஷ்ணன் பக்கலிலே தள்ளிக்கொண்டுவர, பகவானும் 'இவனைவிடு, நான் உன் அபேக்ஷிதத்தைச் செய்து தருகிறேன்' என்ன அவன் இசையாதபடியாலேப்ராஹ்மணனையும்அர்ஜுனனையுங்கூடத் தேரிலேகொண்டு ஏறி, அர்ஜுனனைத் தேரைக் கடத்தச் சொல்லி, அண்டத்துக்குள்ளுண்டான லோகங்களும் ஆவரணங்களுமாகிற எல்லாவற்றுக்கும் அவ்வருகுபடும்படியாக கார்ய ரூபமான தேர் காரணரூபமான தத்வங்களுக்குள்ளே போகிற இடத்தில் உருக்குலையாதே தேருக்குத் திண்மையைக் கொடுத்து நடத்திக்கொண்டுபோய், தமஸ்ஸளவில் சென்றவாறே தேரையும் இவர்களையும் நிறுத்தி, ஜலத்திலே மத்ஸ்யமுலாவுமாப்போலே தேசிகரே ஸஞ்சரிக்க வேண்டும்படி நிரவதிக தேஜோரூபமான பரமபதத்திலே தன்னிலமாகையாலே தானே போய்ப் புக்கு, நாய்ச்சிமார் அங்கே அழைப்பிட்டு வைத்த அந்தப் பிள்ளைகள் நால்வரையும் மீட்டு, தீக்ஷிதனாய் நிற்கிற காலமாகையாலே ப்ராதஸ்ஸவநம் தலைக்கட்டி மாத்யந்திநஸவநத்திற்கு முன் ப்ராஹ்மணனிடம் பூசின மஞ்சளும் உடுத்தினபட்டும் இட்டசவடிப் பூணூலும் இட்ட காதுபணிகளுமான ஒப்பனையில் ஒன்றும் குறையாதபடி குழந்தைகளைச் சேர்ப்பித்தான்.

['பிறக்கப் பிறக்கக் கொண்டுபோனார்களாகில் இப்போது இவையெல்லாம் உண்டோ?' என்று பட்டரைக் கேட்க, 'ரிஷி புத்ரர்களாகையாலே பிறக்கிறபோதே அவற்றோடே பிறப்பர் காணும்' என்று அருளிச் செய்தார்.]

(பூர்வாசார்யர்களின் வ்யாக்யானத்தைத் தழுவி எழுதப்பட்டது—ஸ்ரீ.)

### புண்டரீகன் முக்தி பெற்ற ப்ரகாரம்.

பத்மபுராணம் ஆறுவது உத்தரகண்டத்தில் 214, 215-அத்தியாயங்களில் இந்த்ரப்ரஸ்தத்திலுள்ள புஷ்கரமாஹாத்ம்யத்தைக் கூறுமிடத்தில் ஒரு புண்டரீகோபாக்யானம் இருக்கிறது. அதில் புண்டரீகனைப் பற்றிய கதை பின் வருமாறு:

புண்டரீகன் என்னும் பிராமணன் புஷ்கரதீர்த்தத்தின் பெருமையைக் கேட்டு, 'என் வீட்டில் மாகமாஸத்தில் விஷ்ணு தன் உருவத்தோடு வஸிக்கவேண்டும்' என்கிற விருப்பத்தோடு அதில் ஸ்நானம்செய்தான். பிறகு தை மாதம் பௌர்ணமியன்று பகவான் புண்டரீகனுடைய வீட்டிற்கு வந்தார். ஸகலோபசாரங்களுடனும் புண்டரீகன் அவரை வரவேற்றபோது, பகவான், 'என்னை விரும்பி நீ புஷ்கரத்தில் ஸ்நானம் செய்தபடி வந்தேன். நீ கங்கையில் மாகஸ்நாநத்தைச் செய்து, அதன் முடிவில் புஷ்கரத்தில் மறுபடியும் ஸ்நாநம் செய். ப்ரயாகையில் மாதம் முழுதும் ஸ்நான செய்தால் உண்டாகும் பலன் புஷ்கரத்தில் ஒருநாள் ஸ்நானத்தாலேயே கிடைக்கும்' என்று சொன்னார். அப்படியே அவன் கங்கையில் ஒருமாதம் ஸ்நானம்செய்து, பகவானைப் பூஜித்துக்கொண்டிருந்தான். மாசி மாதம் பௌர்ணமியன்று பகவான் கருடனோடு கூடவந்து அவனையும் அதன்மேல் ஏற்றிக்கொண்டு சென்று புஷ்கரத்தில் ஸ்நானம் செய்வித்தார். உடனே புண்டரீகனுடைய சரீரத்திலிருந்து ஒரு திவ்ய ஜ்யோதிஸ் கிளம்பி பகவானுடைய திருவடிகளில் அந்தர்ப்பவித்தது.

ஸ்ரீ நாரத உவாச—(பாத்மபுராணே உத்தரகண்டே 215 ।

ஏவமுக்த்வா ஸ தேவேந்த்ர (விஷ்ணு:) ப்ராஹ்மணேந்த்ரம்

(புண்டரீகம்) நரேந்த்ர (ஶிபே:) தம் । பதகேந்த்ரம்

ஸமாரோப்ய ஸர்வதீர்த்தேந்த்ரம் (புஷ்கரம்) ஶ்ரீதர: ॥

புண்டரீகஸ்ய தேஹாத்து தேந தத்ராவகாஹநாத் ।

ஸஹ ஜ்யோதி: ஸமுத்பூய ஶௌரிபாதௌ விவேஶ ஸ: ॥47॥

ஏவம் புஷ்கரதீர்த்தேऽஸ்மிந் ஜந்துர்லபதே நர: ।

ஸ்நாநேந புண்டரீகஸ்து தேஹே ஸாயுஜ்யமீஶ்வரே ॥48॥